# ஞான யோகம்

ஸ்ரீ சுவாமி சிவானந்தா





தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# ஞான யோகம்

அருளியது:

## ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம்:

'அத்யாத்ம ரத்ன' திரு. ஜா. சுப்ரமண்யன்







வெளியிடுவோர்:

## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் :: சேலம் ஜில்லா.

விலை ] 1980 [ ரூ. 6-00

* O *

Translation of:

"GNANA YOGA"

in Tamil

* O *

Printed out of the magnanimous donation of:

'HUMBLE DEVOTEES OF

GURUDEV SIVANANDA'

Printed at The Literary Press, Salem-636001

# பொருளடக்கம்

| எண். | தலைப்புகள் | பக்கம். |
|---|---|---|

## முதல் பாகம்



## இரண்டாம் பாகம்



## மூன்றாம் பாகம்

## நான்காம் பாகம்



## ஐந்தாம் பாகம்



## அநுபந்தம்

ஓம்

# ஞானயோகம்

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| நெ. | | | ரூபாய் |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ சுவாமி நிர்மலானந்தா,<br>சிவானந்தா நகர், ரிஷிகேஷ் (U. P.) | ... | 200 |
| 2. | திரு. M. R. கணபதி, ஆசிரியர்,<br>மேல்நிலைப்பள்ளி, தொ. ஜேடர்பாளையம்,<br>சேலம் Dt. | ... | 100 |
| 3. | 'ஞானதான வள்ளல்'<br>திரு. S. கோவிந்தசாமி முதலியார் &<br>திருமதி. தனலக்ஷ்மி அம்மாள், ஈரோடு. | ... | 202 |
| 4. | திரு. S. R. சோலைமுத்து,<br>ரைஸ் & கிழங்கு மாவுமில்,<br>சேந்தமங்கலம், சேலம் Dt. | ... | 50 |
| 5. | Sri. M. Baladhandapani,<br>Prop: Karnataka Metal Stores,<br>Bangalore-53. | ... | 50 |
| 6. | திரு. P. கணபதி கவுண்டர்,<br>ஸ்ரீ பழனியப்பா கிழங்கு மாவுமில்,<br>அரியாகவுண்டம்பட்டி, சேலம் Dt. | ... | 101 |
| 7. | திரு. அ. மாரிமுத்து (மணி)<br>ஸ்ரீ முருகன் ஸ்டோர்ஸ், கிழக்கு ரதவீதி,<br>திருச்செங்கோடு, சேலம் மாவட்டம். | ... | 200 |
| 8. | திரு. T. S. A. முருகேசன்,<br>மளிகை, கிழக்கு ரதவீதி,<br>திருச்செங்கோடு. | ... | 51 |

| | | | |
|---|---|---|---|
| 9. | Sri. S. R. Arumugam, B. A.<br>Special Officer, Marketing Society,<br>Rasipuram. | ... | 50 |
| 10. | Sri. S. K. S. Rajamani Nadar,<br>Salt Merchant, Tuticorin-1. | ... | 50 |
| 11. | திருமதி. அம்புஜம் அம்மையார்,<br>இராசிபுரம். | ... | 101 |
| 12. | Sri. D. Subramaniam, Puthur, Trichy-1. | ... | 50 |
| 13. | திரு. P. மாணிக்கம், செயலாளர்,<br>சன்மார்க்க சங்கம், மேச்சேரி, சேலம் Dt. | ... | 50 |
| 14. | Sri. R. Sankarlal, Salem-1. | ... | 100 |
| 15. | திரு. A. V. தனுஷ்கோடி,<br>M. C. C. தெரு, விருதுநகர், 626 001. | ... | 101 |
| 16. | Sri. P. R. Sakayappan, Secretary,<br>Divine Life Society, Cumbum,<br>Madurai Dt. | ... | 50 |
| 17. | திரு. M. அய்யா நாடார்,<br>'ஸ்ரீ மீனாக்ஷி பவனம்', தேனி (P. O.)<br>மதுரை Dt. | ... | 50 |
| 18. | திரு. A. S. தனுஷ்கோடி,<br>Prop: நவஜீவன் போட்டோ ஸ்டுடியோ,<br>தேனி, மதுரை மாவட்டம். | ... | 200 |
| 19. | Sri. M. M. Subramaniam, Secretary,<br>Divine Life Society, Tuticorin. | ... | 101 |
| 20. | Dr. V. Jayaraman, M. B. B. S.,<br>Gugai, Salem-6. | ... | 50 |

| | | | |
|---|---|---|---|
| 21. | திரு. P. R. இராமசாமி செட்டியார்,<br>கைத்தறி ஜவுளி வியாபாரம், சேலம்-6. | ... | 50 |
| 22. | திரு. O. M. S. S. S. S. சண்முகநாதன்,<br>கமிஷன் மண்டி, விருதுநகர். | ... | 108 |
| 23. | ஸ்ரீ ஆண்டாள் & கோ,<br>கொமாரபாளையம், ஈரோடு R. S. | ... | 50 |
| 24. | ஸ்ரீ ஆண்டவர் & கோ,<br>கொமாரபாளையம், ஈரோடு R. S. | ... | 50 |
| 25. | திருமதி. பங்காரு சாம்பசிவம்,<br>காந்தி நகர், ஆத்தூர், சேலம் மாவட்டம். | ... | 100 |
| 26. | Sri. N. P. S. S. Nataraja Nadar,<br>The Oriental Litho Press, Sivakasi. | ... | 50 |
| 27. | திரு. M. தனகோபால்,<br>ஷராப் வியாபாரம், இராசிபுரம். | ... | 50 |
| 28. | திரு. G. நடராஜன்,<br>வீரம்மாள் பேக்கரி, சென்னை-21. | ... | 50 |
| 29. | திரு. N. அன்னையன், தலைவர்,<br>சன்மார்க்க சங்கம், மேச்சேரி, சேலம் Dt. | ... | 50 |
| 30. | திரு. K. S. கோதண்டராமன்,<br>Prop: ராம்குமார் ஸ்டோர்ஸ், சேலம்-2. | ... | 50 |
| 31. | திரு. P. M. மாரிமுத்து முதலியார்,<br>நூல் வியாபாரம், துறையூர், திருச்சி Dt. | ... | 100 |
| 32. | Sri. S. Santhi Kumar, Deputy Manager,<br>Food Corporation of India,<br>Lucknow (U. P.) | ... | 101 |

| | | | |
|---|---|---|---|
| 33. | "N. B. S." Namakkal, Bus Service,<br>Namakkal. Salem Dt. | ... | 100 |
| 34. | திரு. D. ஜெயராமுலு நாயுடு, B. A. B. L.,<br>அட்வகேட், நாமக்கல். | ... | 50 |
| 35. | டாக்டர். K. ஜெயராமச்சந்திரன், M. B. B. S.<br>நாமக்கல். | ... | 50 |
| 36. | திரு. M. பாலசுப்பரமணியம்,<br>Prop: அசோக் லாட்ஜ், நாமக்கல். | ... | 100 |
| 37. | திரு. V. A. அண்ணுமலை,<br>இரும்பு & பெயிண்ட் வியாபாரம்,<br>மதுரை-1. | ... | 100 |
| 38. | திரு. B. ஹிரியன், பாமுடி,<br>கோடநாடு, நீலகிரி ஜில்லா. | ... | 50 |
| 39. | Sri. K. A. A. Sankaralingam,<br>Industrialist, Sivakasi & Tirunelveli. | ... | 50 |
| 40. | ஸ்ரீ சுவாமி பூர்ணனந்தகிரி மஹராஜ்,<br>ஸ்ரீ ஞானனந்த பிரணவ நிலையம்,<br>ஏற்காடு-2. சேலம் ஜில்லா. | ... | 50 |
| 41. | திரு. R. V. P. சாரதி,<br>தலைவர், வள்ளலார் பணி மன்றம்,<br>இராசிபுரம். | ... | 50 |
| 42. | திரு. I. ஆதித்தன், D. C. T. O.<br>திருநெல்வேலி-7. | ... | 50 |
| 43. | திரு. C. அண்ணுமலை,<br>151-A. ராஜாஜி ரோடு ஸ்ரீவில்லிபுத்தூர். | ... | 50 |

| | | | |
|---|---|---|---|
| 44. | திரு. P. அய்யாசாமி, B. Sc.,<br>Prop : ஜூபிடர் ஷூ மார்ட், இராசிபுரம். | ... | 50 |
| 45 | Sri. A. Sundaram,<br>"American Express", New Delhi-5. | ... | 100 |
| 46. | திருமதி. ராதாமணி,<br>பாண்டிச்சேரி-11. | ... | 50 |
| 47. | திரு. S. கிருஷ்ணமூர்த்தி,<br>ஸ்டாம்பு வெண்டர், இராசிபுரம். | ... | 50 |
| 48. | திரு. A. விட்டல்நாதன்,<br>பார்ட்னர், ஹோட்டல் ஸ்ரீ சக்தி,<br>கோவை-9. | ... | 50 |
| 49. | திரு. B. கபாலீஸ்வரன்,<br>'செல்வ மாளிகை' சேலம்-1. | ... | 101 |
| 50. | திரு. S. கிருஷ்ணன்,<br>ஷராப் வியாபாரம், இராசிபுரம். | ... | 50 |
| 51. | திரு. T. R. கிருஷ்ணமூர்த்தி &<br>திரு. T. R. துரைசாமி,<br>மூர்த்தி & கோ., மதுரை-9. | ... | 51 |
| 52. | திரு. R. சுந்தரம், P. E. T.<br>அரசினர் உயர்நிலைப்பள்ளி,<br>R. புதுப்பாளையம், சேலம் Dt. | ... | 51 |
| 53. | திரு. S. மல்லிச் செட்டியார்,<br>ஜவுளி வியாபாரம், வனவாசி. சேலம் Dt. | ... | 100 |
| 54. | திரு. N. P. பத்மராஜ் ரெட்டியார்,<br>தில்லை நகர், திருச்சி-18. | ... | 50 |

55. திரு. A. S. கிருஷ்ணசாமிராஜா,
கிருஷ்ணா ராம் கம்பெனி, இராஜபாளையம். ... 50

56. சிவானந்தா அடியவன், சென்னை. ... 101

57. திரு. க. இரத்தினசபாபதி,
கண்டாச்சிபுரம், விழுப்புரம். RMS. ... 50

58. திரு. V. சிங்காரவேல் & பிரதர்ஸ்,
"வேல் குரூப்ஸ்" சேலம்-1 ... 100

59. திரு. T. R. இராமநாதன்,
7, பெசண்ட் அவின்யு, சென்னை-20. ... 101

60. Sri. S. Karuppuswamy,
Authorised Philips Light Dealer,
Salem-2. ... 51

61. திருமதி. லக்ஷ்மி வெங்கடேஸ்வரன்,
சிவானந்த நகர், ரிஷிகேசம் (U. P.) ... 100

62. திரு. M. A. கோபாலகிருஷ்ணன்,
Retd. ஹைவேஸ் டிவிஷனல் இஞ்சினியர்,
கிருஷ்ணகிரி. ... 50

63. வித்துவான் திரு. K. சீனிவாச ரெட்டியார்,
தமிழாசிரியர், வரகூர். சேலம் Dt. ... 50

64. திரு. K. கேஸ்வர்,
ரயில்வே கார்டு C. ஈரோடு. ... 50

65. திரு. T. C. ஜகந்நாத ரெட்டியார்,
ஆழத்துடையான்பட்டி, திருச்சி Dt. ... 50

66. Sri. V. L. Nagaraj, Secretary,
Divine Life Society, Tasker Town,
Bangalore. ... 50

| | | | |
|---|---|---|---|
| 67. | Smt. R. Vasantha Ramachandra Rao,<br>Bellary, Karnataka. | ... | 100 |
| 68 | 'குருபக்தி ரத்ன' திரு. M. S. A. ஜெயராம்,<br>தலைவர், தெய்வீக வாழ்க்கைச் சங்கம் &<br>Prop: ஜெயராம் டெக்ஸ்டைல்ஸ்,<br>இராசிபுரம். | ... | 100 |
| 69. | 'யோகாசன நிபுணர்' திரு. L. ஜெயபால்,<br>ஸ்ரீ யோகா யோகாசன சாலை, சேலம்-3. | ... | 50 |
| 70. | திரு. மனம்சேர சந்திரகாசன், M. A., B. Ed.<br>தலைவர், மாவட்ட இந்து சமய மன்றம்,<br>சேலம். | ... | 50 |
| 71. | செல்வன். திரு. J. செந்தில்குமார்,<br>இராசிபுரம். | ... | 50 |
| 72. | திரு. R. விஸ்வநாதன்,<br>Prop: சேலம் எலெக்டிரிகல் ஏஜன்சீஸ்,<br>சேலம்-1. | ... | 50 |
| 73. | திரு. A. K. ஜெயராவ்,<br>ஷராப் வியாபாரம், சேலம்-2. | ... | 50 |
| 74. | Revathi Sivaprakasam,<br>Jothi Bala Mandir, Kamaraj Nagar Colony,<br>Salem-14. | ... | 101 |
| 75. | Sri. K. Santhanam, B. A., B. L.<br>Advocate, Coimbatore-1. | ... | 75 |
| 76. | Sri. R. K. Rajagopal, T. X. R.<br>Southern Railway, Mettupalayam,<br>Coimbatore Dt. | ... | 101 |

| | | | |
|---|---|---|---|
| 77. | Sri. A. P. Venkatachalapathy, B. A.<br>Nandydurg Extension, Bangalore-46. | ... | 50 |
| 78. | திரு. S. செல்லாண்டி & கோ,<br>பழ கமிஷன் மண்டி, பெங்களூர்-2. | ... | 50 |
| 79. | ஸ்ரீ மாதாம்பா ஸரஸ்வதி,<br>ஸ்ரீ பரிமள ராஜராஜேஸ்வரி நிலையம்,<br>வேலூர், சேலம் Dt. | ... | 50 |
| 80. | திருமதி. P. மனோரஞ்சிதம் அம்மாள்,<br>51, அக்ரஹார வீதி, ஈரோடு-1. | ... | 100 |
| 81. | திரு. P. P. ஆறுமுகம் செட்டியார்,<br>கைத்தறி மொத்த ஜவுளி வியாபாரம்,<br>இராசிபுரம். | ... | 51 |
| 82. | திரு. P. ராமசாமி கவுண்டர்,<br>'பூச்சி கவுண்டர் தோட்டம்' இராசிபுரம். | ... | 50 |
| 83. | பாண்டியன் திரு. D. பழனியப்பன்,<br>ஜவுளி வியாபாரம், ஜலகண்டாபுரம்.<br>சேலம் Dt. | ... | 50 |

முத்தமிழ்ப் பண்ணை

# ஞான யோகம்

## முதல் பாகம்

### 1. சத்குரு

ஒரு ஜீவன்முக்தர் அல்லது சத்குரு உலகத்துக்கு ஒரு வரப்பிரசாதம். அவர் ஞானம் அல்லது தெய்வீக ஒளியை வீசுபவர். அவர் அஞ்ஞான சமுத்திரத்தில் உழலுபவர்களுக்கு ஒளி காட்டும் ஆத்மீகக் கலங்கரை விளக்கம் ஆவர். ஞானிகள் போற்றி! சத்குருமார்கள் போற்றி!

விடுதலையடைந்த ஞானி அல்லது ஜீவன் முக்தரே உண்மையான குரு அல்லது ஆத்மீக ஆசாரியன் ஆவர். அவரே சத்குரு. அவர் பிரம்மம் அல்லது பரம்பொருளோடு ஏகமானவர். அவர் பிரம்மத்தை உணர்ந்தவர் அல்லது பிரம்மவித்.

அவர் அபார அடக்கமுள்ளவர். அவர் சர்வ சாதாரண மனிதரைப்போல் காண்கிறார். அவர் தான் ஒரு சத்குரு அல்லது பிரம்மத்தை அறிந்தவர் என்று விளம்பரப்படுத்திக் கொள்வதில்லை. அவர் ''நான் அறிவொளி அடைந்த ஞானி, நான் ஒரு அவதாரம், நான் பலருக்கு முக்தியளிப்பேன். நான் பல சித்திகளை அடைந்துள்ளேன்'' என்று ஒருபோதும் சொல்லிக் கொள்வதில்லை. அவர் சிறிதும் ஆசையில்லாதவர்.

பணம், பெயர், கீர்த்தி முதலியவற்றில் அவருக்கு விருப்பம் இல்லை. மதக் கிளையையோ அல்லது மடத்தையோ அமைப்பதிலும் அவருக்கு ஆசையில்லை. அவர் உலக ஒற்றுமைக்காகப் பாடு பட்டு மக்களை உயர்த்துவதோடு சரி. ''என்னைப் பின்பற்றுபவர்களோ மாணவர்களோ எனக்கில்லை, எனக்குச் சொந்த மடமோ சொத்துக்களோ

இல்லை, இல்லை'' என்று அவர் கூறுகிறார். எந்த மனிதனிடமோ, பொருளிடமோ அவருக்குப் பற்றுதல் இல்லை. அவர் மதக் கிளையையோ மடத்தையோ அமைக்க முயல்வதில்லை. அவர் 'நான், என்னுடையது' (அகங்காரம், மமகாரம்) என்பதே இல்லாதவர்.

அவர் தம்மைச் சூழ்ந்துள்ளவர்கள், ஜனங்களிடம் தாம் சித்திகள் பெற்றவர், பெரிய மகாத்மா என்று சொல்ல விடுவதில்லை. அவர் பிரசித்தியாகிப் பேரொளியை நாடுவதில்லை. அவர் எப்போதும் தன்னை மறைத்துக் கொள்கிறார். அவர் ஓரிடத்தில் பிரசித்தி பெற்று விட்டால் உடனே அந்த இடத்தை விட்டு நீங்கிவிடுகிறார்.

எந்த மனிதனாவது ''நான் ஒரு மகாத்மா, ஆத்ம ஞானமடைந்தவன், ஒரு சத்குரு'' என்று கூறிக்கொண்டாலும், அவரது சிஷ்யர்கள் தங்கள் ஆசிரியர் பல சித்திகள் பெற்ற சத்குரு என்றும், பல சித்திகளைக் காண்பித்திருக்கிறார் என்றும் கூறுவார்களானாலும், இம் மனிதன் பெருஞ் சத்தம் போடும் ஓட்டைக் குடம் என்று உணர்ந்து கொள்ளுங்கள். ''நான் பிரம்மத்தை அறிவேன்'' என்பவன் பிரம்மத்தை அறியமாட்டான் என்றும், நான் பிரம்மத்தை அறியவில்லை என்பவனே பிரம்மத்தை அறிந்தவன் என்றும் சுருதி உறுதியாக உரைக்கிறது.

இவ்வுலகத்தில் போலி குருமார்கள் நிறைந்திருக்கின்றார்கள். அப்படிப்பட்டவர்களைப் பற்றி எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள் கபட மற்றவர்களையும் பேதைகளையும் ஏமாற்றிப் படுகுழியில் தள்ளிவிடுகிறார்கள். அவர்கள் மக்களுக்குத் தப்பு வழி காட்டுவார்கள். இது, குருடன் குருடனுக்கு வழிகாட்டுவது போலாகும். சித்திகள் மனிதனைக் கடவுளினிடமிருந்து அவரை அடைவதிலிருந்தும்

தூரத்தில் தள்ளி விடுகின்றன. ஒரு மனிதனின் சித்திகளால் கவரப்படாதீர்கள்.

ஒரு மனிதனுடைய சங்கத்தால் நீ உயர்த்தப் படுவதோடு, அவர் எளிமை, பகட்டின்மை, அடக் கம், பொறுமை, கருணை, ஆசையின்மை, தன்னல மின்மை, வைராக்கியம், அன்பு, அறிவு ஆகியவை நிரம்பினவராய் உனக்குத் தெரியுமாஞல் அவரை உனது குருவாகக் கொள்.

பல ஆண்டுகள் அவரோடு இருப்பினும் ஒரு சத்குருவின் மகிமையை அறிவது மிகக் கடினம். அவர் ஆழ்கடலைப் போல் ஆழ்ந்தவர். அவரது மகிமை வாக்குக்கெட்டாதது. அ வ ர து அறிவு வர்ணிக்க முடியாதது. அவரது நிலை அறிவுக் கெட்டாதது.

உனது குருவுக்குச் சேவை செய்வது உன் கடமை. அவரது சரீரத்தை நீ காத்திடு. அவர் உனது ஆத்மாவைக் காத்திடுவார்.

ஒரு ஞானியின் பெருமையை வெளிப்படுத்து வதற்கோ அவர் ஆத்மாநுபவம் அடைந்துவிட்டார் என்று ருசுப்படுத்தவோ சித்திகள் உடைமையே சோதனை ஆகாது. சத்குருமார்கள் அற்புதத்தை யோ சித்திகளையோ காண்பிப்பதில்லை. சில சமயங் களில் சாதகர்களுக்கு ஸ்தூல வஸ்துக்களுக்கு மேற் பட்ட பொருள்களின் இருப்பைக் காட்டுவதற்கும், அவர்களை உற்சாகப்படுத்துவதற்கும், அவர்களது இருதயங்களில் நம்பிக்கையூட்டுவதற்கும் அவர்கள் சித்திகளை வெளிக்காட்டலாம்.

யாராவது பெயருக்காகவும் கீர்த்திக்காகவும் அல்லது பொருளீட்டும் பொருட்டும் த ன் ன ல நோக்கத்துடனும் சித்திகளைக் காண்பித்தால் அவன் மோசக்காரன் என்று உணர்ந்துகொள். அப்படிப் பட்டவன் சிறிது காலத்தில் தன் சித்திகளை இழந்து

விடுகிறுன். இப்படிப்பட்ட பல உதாரணங்கள் உள்ளன.

சிஷ்யர்கள் தங்கள் குருவின் சக்திகளேப் பற்றிப் பல விதங்களில் விளம்பரப்படுத்தி அவரது பெயருக்குக் கேடு விளேவிக்கிறுர்கள். ஆத்மீக ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களே இவ்வாறு செய்யாதபடி கண்டிப்பாக எச்சரிக்க வேண்டும். சிஷ்யர்களால் விளம்பரப்படுத்தப்படும் ஆசிரியர்களிடம் மக்களுக்கு நம்பிக்கையிருப்பதில்லே. அப்படிப்பட்ட ஆசிரியர்களால் ஜனங்கள் மயக்கப்படலாம். ஆனுல் அவர்கள் சீக்கிரமே நம்பிக்கையிழந்து, கிளம்பிச் செல்வதோடு, தொடர்பை அறுத்துக் கொண்டு அவர்களேக் கண்டிக்கத் தொடங்குகிறுர்கள்; ஜனங்களும் கூர்ந்த புத்தியும் அறிவும் உடையவர்கள். எத்தனே காலம் ஒருவர் விஷயங்களே மறைக்க முடியும்? கடைசியில் உண்மை வெளிவந்தே தீரும். மயில் இறகுகளேச் சொருகிக் கொண்டுள்ள காக்கை சீக்கிரமே கண்டு பிடிக்கப்படும்.

மக்களுக்கு வழிகாட்ட தெய்வீக அறிவும் சகல ஞானமும் நிரம்பிய ஞானிகளால் இவ்வுலகம் நிறைவதாக! போலி குருமார்கள் நாட்டைவிட்டு நீங்குவார்களாக! நீவிர் யாவரும் ஜீவன் முக்தர்களாக ஒளிர்வீராக! நீங்கள் யாவரும் நம்பிக்கையும் பக்தியும் பூண்டு ஞானிகளுக்குத் தொண்டு செய்து அவர்களது ஆசிகளேப் பெறுவீர்களாக.

---

## 2. குருவும் அதிகாரியும்

ஆத்மாவை நேர்முகமாக உணர்வதே மோட்சத்துக்கு மார்க்கம். சாதன சதுஷ்டயம் (மோட்சமடைய இருக்க வேண்டிய நான்கு சாதனங்கள்) உள்ளவனே ஆத்மஞானத்தை அடைய முடியும்.

தனது குலம், ஆஸ்ரமம் இவற்றின் கடமைகளைக் கண்டிப்பாக கடைப்பிடிப்பதாலும், தவத்தினாலும் தன்னலமற்ற சேவையாலும், தனது இஷ்ட தேவதையை ஆராதித்துத் தனக்கு அநுகூலமாக்கிக் கொள்வதாலும், சத்குரு சேவையாலும், விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத் முமுக்ஷுத்வம் ஆகிய இந்த நான்கு சாதனங்களை ஒரு மனிதன் அடைந்திடலாம்.

தனது குருவிடம் ஆழ்ந்த பக்தி பூண்டு உபாஸனை செய்தவன் மட்டுமே வேதாந்த உபதேசங்களின் ஆழ்ந்த கருத்துக்களை அறிய முடியும். எவன் கடவுளிடம் சிறந்த பக்தியுடையவனாய் கடவுளிடம் செலுத்தும் அத்துணை பக்தி தன் குருவுக்கும் செலுத்துவானோ அந்த மகாத்மாவுக்கே ஈண்டு போதிக்கப்படும் உண்மைகள் பூரணமாக விளங்கும்' என்று ஸ்வேதாஸ்வதார உபநிடதம் கூறுகிறது (பாகம்—23).

உண்மையான சத்குருவுக்கு காமம், குரோதம், தன்னலம், பேராசை, பகை, அகங்காரம் ஆகியவை சிறிதும் இரா. அவர் உலகக் கவர்ச்சிகளுக்கு அப்பாற்பட்டவர். அவர் மக்களின் அறிவின்மையைப் போக்க வல்லவர். அவர் எந்த விதமான ஐயப்பாடுகளையும் நிவர்த்திக்கக்கூடும். அவர் மனதையும் புலன்களையும் அடக்குவதற்கு ஆசரணைக்கேற்ற எளிய மார்க்கங்களைக் கூறக் கூடியவர். அவரது உபதேசங்கள் மிகவும் கம்பீரமானவை. அகம்பாவம் கொண்ட, அறிவற்றவன்கூட அவருக்கு அடிபணிவான். அவர் மாணவர்களை மோட்ச வாயிலுக்குக் கொண்டுசெல்ல வல்லவர். அவர்களது மார்க்கத்தில் உள்ள தடங்கல்களையும், படுகுழிகளையும், சிக்கல்களையும் அவர் நீக்க வல்லவர். அவர் வேதங்களைக் கரை கண்டவர், பாவமற்றவர், கருணைக் கடல், யாவருக்கும் நண்பர்.

ஆத்ம ஞானமடைந்தவரும் வேத நூல்களை உணர்ந்தவருமான ஆசிரியர் அடிக்கமலங்களில் உண்மையைக் கைப்பற்ற வல்லவனே அமர்ந்திடுவான். கீதையில் கண்ணபிரான் ''குருவை வணங்கி, வினவித் தொண்டு செய்து அதை உணர்வாயாக. மெய்யுணர் வெய்திய அறிஞர் ஆத்ம ஞான விஷயத்தை உனக்கு போதிப்பர்'' (அத் 4–34) என்கிருர். ஸ்ரீ சங்கரரின் உபதேச ஸஹஸ்ரியில் ''எவனெருவன் சாந்தமுள்ள மனமுடையவனும், புலனடக்க முடையவனும், காமக் குரோதங்கள் முதலிய குற்றங்கள் இல்லாதவனும், பணிவும் நற்குணங்களும் நிறைந்தவனும், எப்போதும் வினயமுள்ளவனும், மோட்சத்தில் தீவிர ஆவலுள்ளவனும் இருப்பானே, அவனுக்கே வேதாந்த பாடம் உபதேசிக்கப்பட வேண்டும்'' என்று கூறப்பட்டுள்ளது, (324—16–72)

எந்த சாதகன் மோட்சத்தில் தீவிர வேட்கையுள்ளவனே, எவன் சாஸ்திர விதிகளைக் கடைப்பிடிக்கிருனே, எவன் தனது ஆசாபாசங்களையும் புலன்களையும் கட்டுப்படுத்தியுள்ளானே, எவன் சாந்த மனமுடையவனய் கருணை, சமரஸ அன்பு, பொறுமை, அடக்கம், சகிப்புத்தன்மை, மன்னிக்கும் குணம் முதலிய குண சம்பன்னனய் இருக்கிருனே, அவனுக்கே குரு ஆத்ம போதனைகளை அருள்வார். மாணவன் மனம் ஆசையற்றதானல் தான், பிரம்ம ஞான உபதேசம் பலனுடையதாகி ஞானேதயம் உண்டாகும்.

ஆசைகளற்றவனய், தூய மனமுடையவனய், உலக வாழ்க்கையில் வெறுப்படைந்தவனய் எவன் உள்ளானே, அவனுக்கே ஆத்ம ஞானத்தை அடைய வேண்டும் என்னும் ஆவல் உண்டாகும். அப்படிப் பட்டவனே பிரம்ம ஞானத்தை சிரவணம் செய்து

(கேட்டு), தியானம் செய்து அடையக் கூடும். ஆத்மஞானம் உதயமாகும் போது பந்தத்துக்கு விதையாயும் கர்மத்துக்குக் காரணமாகவும் உள்ள அஞ்ஞானம் அடியோடு அழிந்துபட்டு, சாதகன் அமரத்வத்தையும் நித்தியானந்தத்தையும் அடைகிறான்.

ஒருவனுக்கு விவேகம், வைராக்கியம், ஷட் சம்பத் ஆகியவை இருப்பின், மோட்சத்தில் தீவிர இச்சை தானுக ஏற்படும். விவேகத்தின் பயனுக வைராக்கியம் விளைகிறது. உலகத்தைத் துறந்தும் சாதகர்கள் இலட்சியத்தையடையவில்லையென்றால், அதற்குக் காரணம் அவர்களுக்கு தீவிர மோட்ச இச்சை முழு அளவுக்கு இல்லையென்பதே.

நம்பிக்கை, பக்தி, தன்னடக்கம், ஏகாக்கிர சித்தம், மனத்தூய்மை, வைராக்கியம், மோட்ச இச்சை, தியானம் ஆகியவை சாதகன் மோட்சம் பெறுவதற்கு உடனடியான அங்கங்கள். இக் குணங்கள் நிறைந்தவன் நித்தியத்வத்தையும் ஞானத்தையும் அடைகிறான்.

சாதகன் மேருவைப் போல் உறுதியாயும், ஆகாச மண்டலத்தைப் போல் சுதந்தரமாயும், மல்லிகையைப் போல் மணமுள்ளவனுயும், வானத்தைப் போல் பரந்தும், பூமியைப்போல் பொறுமையாயும் பெற்றோர்களைப் போல் மன்னிப்பவனுயும், சூரியனைப் போல் ஒளியுள்ளவனுயும், சிங்கத்தைப் போல் பயமற்றும், நந்தி தேவரைப் போல் உதார குணமுள்ளவனுயும் இருத்தல் வேண்டும்.

---

## 3. குருவும் உபதேசமும்

சிவபெருமான் சிலகாலம் பட்டினத்தாரோடு வாழ்ந்திருந்தார் எனினும் பட்டினத்தார் ஆண்ட

வனை அறிந்தாரில்லை. பகவான் ஒரு ஓலைத்துணுக்கில் ''காதற்ற ஊசியும் வராதுகாண் கடை வழிக்கே'' என்று எழுதிக்கொடுத்து விட்டுச் சென்றார். இது பட்டினத்தார் கண்ணைத் திறந்து அவருக்குக் குருவின் சக்திபோல் பயன் விளைத்தது. கண்ண பிரான் ஸ்ரீகாந்தியா என்னும் பெயருடன் சிறிது காலம் ஏகநாதருடன் வதிந்து தொண்டு செய்தார். எனினும் ஏகநாதர் அவரிடம் பகவானைக் கண்டு கொள்ளவில்லை. ஆகவே தனது உண்மையான குருவைக் கண்டவுடன் அறிந்துகொள்வது சாதக னுக்குக் கடினமான காரியம். கருணையினால் ஒரு விதமாக அல்லது வேறொரு விதமாகவோ ஆசிரியர் சாதகனுக்குக் காட்சியளிக்கிறார்.

சாதகனுக்கு அறிவுக்கெட்டாத முறையில் பரமனின் உதவி கிடைக்கிறது. பின்வரும் உதார ணங்களில் பகவான் எவ்வாறு பக்தர்களுக்குப் பரிந்து உதவி புரிந்திருக்கிறார் பாருங்கள்: ஏகநாத், ஆகாயவாணி ''தேவகிரியில் ஜனார்த்தனபந்தைப் பார். அவர் உன்னைச் சரியான மார்க்கத்தில் கொண்டுவந்து வழிகாட்டுவார்'' என்று கூறக் கேட்டு, அதன்படி செய்து தமது குருவைக் கண்டு கொண்டார். துகாராம், கனவில் 'ராம கிருஷ்ண ஹரி' என்னும் தமது மந்திரத்தைப்பெற்று, அதை ஜெபித்து கிருஷ்ண தரிசனம் பெற்றார். கிருஷ்ண பரமாத்மா, மல்லிகார்ச்சுனத்தில் உள்ள சந்நியாசி யிடம் உயர்தர உபதேசம் பெறும்படி நாமதேவருக் குப் பணித்தருளினார். சுடாலை, ஞானி கும்பமுனி யின் வேடத்தில் காட்டில் வசித்த கணவன் சிகித் வஜன் முன்தோன்றி, கைவல்யத்தின் இரகசியங் களை அவனுக்கு உபதேசித்தாள். மதுரகவி, அடுத்து மூன்று நாட்களில் ஆகாயத்தில் ஒரு ஒளியைக் கண் டார். அது அவருக்கு வழிகாட்டி திருநெல்வேலிக் கருகில் ஒரு புளியமரத்தின் கீழ் சமாதியில் இருந்த

அவரது குரு நம்மாழ்வாரிடம் அவரைச் சேர்த்தது. வில்வமங்களர் சிந்தாமணி என்னும் நடனமாதிடம் மிகுந்த மோகம் கொண்டிருந்தார். அவளே அவருக்குக் குருவானாள். துளஸிதாசர், ஹனுமானைக் கண்டு அவர்மூலம் இராமதர்சனம் அடையும்படி, ஒரு கண்ணுக்குத் தெரியாத உருவத்தின் புத்திமதியைப் பெற்றார்.

உபதேசம் என்றால் ஒருவருடைய காதில் ஒரு மந்திரத்தை உரைப்பது என்று அர்த்தமல்ல. கிருஷ்ணனின் கருத்துக்களை இராமன் கடைப்பிடிப்பானானால், இராமன் கிருஷ்ணனிடம் உபதேசம் அடைந்தான் என்பதாம். ஒரு ஞானியால் இயற்றப்பட்ட நூல்களை ஆழ்ந்து படித்து அப்போதனைகளை கருத்தில் கொண்டு ஒரு சாதகன் உண்மை வழியை அநுசரித்தால், அந்த ஞானியே அவனுக்குக் குருவாவார். ஞானாசிரியர்கள் தங்கள் கடிதங்கள் எண்ணங்கள் முதலியவற்றின் மூலம் சாதகர்களுக்கு உபதேசமளிக்கக்கூடும்.

ஒவ்வொரு சாதகனுக்கும் உபதேசமுறை கட்டாயமாக ஒரே மாதிரி இருக்கவேண்டுமென்பதில்லை.

பக்தனுடைய ஆவலுக்கும் பரிபக்குவத்துக்கும் ஏற்றபடி பகவான் தக்க வழிகாட்டியை ஏற்படுத்துவார்.

வாமதேவர் தாயின் கருவில் இருக்கும்போதே ஆத்ம ஞானத்தை அடைந்தார். மீரா, கிருஷ்ண விக்கிரகத்தைக்கண்டு பரவசமடைந்தாள். நரஸிம்ம மேதா ஒரு அற்புதமான விதத்தில் பகவத் போதையில் மூழ்கினார். பாகவதம் பதினோராவது ஸ்கந்தத்தில் விவரித்துள்ளபடி இருபத்துநான்கு குருமார்கள் மூலம் தத்தாத்ரேயர் பிரம்ம ஞானத்தை அடைந்தார். சில சாதகர்கள் விஷயத்தில் மிதமிஞ்சிய பொன்னாசையும் பெண்ணாசையுமே துறவுக்

குக் காரணமாகின்றன. இக்கூற்றை அவந்திப் பிராமணன், வில்வமங்களர் ஆகிய இருவர் கதைகளே நிரூபிக்கின்றன.

பகவான் கீதையில் ''ததாமி புத்தியோகம் தம் யேன மாமுபயாந்தி தே'' அதாவது 'அவர்களுக்கு நான் புத்தியோகத்தை யளித்திடுவேன். அதன் மூலம் அவர்கள் என்னை அடைவார்கள்' என்று கூறுகிறார். ஸ்ரீ தத்தாத்ரேயர் மிகக் கூர்மையான புத்தியுடையவர். அதன்மூலம் அவர் ஞானத்தை அடைந்தார். ஜடபரதர் பிறப்பிலேயே சித்தர். இந்திரன் தன் குரு பிரஜாபதிக்கு 101 ஆண்டுகள் தொண்டு செய்த பிறகே உபதேசம் பெறமுடிந்தது. ஜனகர் தமது அரசவையிலேயே யாக்ஞவல்கிய ராலும் அஷ்டாவக்ரராலும் உபதேசிக்கப் பெற்றார். சுவேதகேது தமது தந்தை உத்தாலகரால் ஒன்பது முறை உபதேசிக்கப் பட்டார். நிவர்த்திநாதர் த்ரயம்பகேஸ்வரத்தில் ஒரு புலியால் தாக்கப்பட்டு மத்ஸ்யேந்திரநாதரின் சிஷ்யர் க்ஞானிநாதர் வதிந்த குகையில் புகுந்தார். க்ஞானிநாதர் அவருக்கு யோக ரகசியங்களை உபதேசித்தார்.

உபதேசமும் பகவத் பிரேரணையும் ஞானமடைதலும் சாதகனது சுய முயற்சியையும் தீவிரத்தையும் பொறுத்தவை. சரியான தருணத்தில் பகவானின் அருள் அவன்மீது சுரக்கிறது. அப்போது ஆத்ம ஞானத்தின் பொருட்டு அவனது பொறுமையான இடைவிடாத போராட்டம் அதற்குமேல் அவசியமில்லை.

யோகி மிலேரப்பாவைப்போல் சிலர் தங்கள் ஆசிரியர்களுக்குக் கடுமையான சேவை செய்ய வேண்டியிருக்கிறது. சிலருக்கு மின்னல் வீசுவது போல் உபதேசம் கிடைத்துவிடுகிறது. இது சாதகனின் ஆத்ம சாதனையையும் முன்னேற்றத்தையும் பொறுத்தது. யோகி மிலேரப்பா தமது குரு

சேவைக் காலத்தில் பெரும் போராட்டங்கள் நடத்த வேண்டி வந்தது. அவர் உபதேசம் பெறு முன் அமானுஷமும் வீரமும் பராக்கிரமும் வாய்ந்த செயல்களைச் செய்ய வேண்டியிருந்தது. பண்டைக் கால ஞானிகளும் முனிவர்களும் தங்கள் மாணவர் களைக் கடுஞ் சோதனைகளுக்கு உட்படுத்திய பிறகே தங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரங்களாக ஆக்கிக் கொண்டார்கள். அவர்கள் இயல்பிலேயே ஒரு மாணவன் அருளுக்கு அருகதையுள்ளவனா என்று அறிந்தார்கள். புதுமாணவர்களை அவர்கள் மாடு மேய்க்கவும், காட்டிலிருந்து ஆஸ்ரமத்துக்கு கட்டை வெட்டி வரவும், குருவின் உடைகளைத் துவைக்கவும் முதலிய தற்கால சாதகர்கள் கண் களில் இழிதொழில்களாகத் தோன்றும் வேலைகளை அளித்தார்கள். சுவேதகேது, இந்திரன் சத்திய காமன் முதலியவர்களைப் போன்ற சாதகர்களுக்கு ஒவ்வொரு வேலையும் ஒரு யோகப் பயிற்சி அல்லது குருவின் வழிபாடு என்று தோன்றியது. அவர் களுக்கு எதுவும் இழிவானதல்ல. அதனால் அவர்கள் சீக்கிரமே சித்தசுத்தி பெற்று, வேதங்களை ஓதி, உணர்ந்து முடிவில் பரம்பொருள் ஞானத்தை யடைந்தார்கள்.

கௌதமர் நானூறு மெலிந்த பலமற்ற பசுக் களைத் தமது மாணவன் சத்யகாமஜபாலரிடம் மேய்க்கும்படி ஒப்படைத்து, அவை ஆயிரம் ஆன பிறகுதான் திரும்பவேண்டும் என்று கட்டளையிட் டார். சத்தியகாமர் காட்டில் வெகுகாலம் வதிந் தார். ஆசிரியரது ஆஸ்ரமத்துக்குத் திரும்பச் சில நாட்களுக்கு முன் வாயு, அக்கினி, சூரியன் ஆகிய தேவர்கள் சத்தியகாமருக்குப் பிரம்ம ஞானத்தைப் புகட்டினார்கள். அவர் முகத்தில் பிரம்ம ஞானத் தின் ஒளி வீசுவது கண்டு கௌதமர் அதிசயித்தார்.

அஷ்டாவக்ரர் கண் இமைக்கும் நேரத்தில் ஜனகராஜனுக்கு உபதேசித்தார். தேவர்கள்

கட்வாங்கருக்கு ஒரு முகூர்த்த நேரத்தில் உபதேசம் செய்தார்கள். சிலர் தமது மாணவர்களைத் தங்கள் அருள் நோக்கினுலேயே ஞானமடையச் செய்கின்றனர். சங்கரர் சங்கல்பத்தினுலேயே தோடகரை ஞானியாக்கினுர். ஆகவே தெய்வீக அருளை அடைந்து உயர்ந்த ஆனந்தத்தையும் பேரின்பத்தையும் அடைவது சாதகனின் ஆற்றல் பக்குவம், தூய்மை ஆகியவற்றைப் பொறுத்ததே.

எதன் மூலத்தில் ஆத்மீக போதனைகள் வருவதாயிருந்தாலும் அவற்றை அடைவதற்குச் சாதகன் விழிப்பாயிருக்க வேண்டும். அவனது அஞ்ஞானத்தை நீக்க உதவும் யாவரும் அவனுக்கு வழிகாட்டியே. ஆனுல் சாதகனின் ஆத்மீக முன்னேற்றத்தைத் துரிதப்படுத்தி அவனது முற்போக்கில் ஊக்கமும் கூர்மையும் உள்ள ஆவல் கொண்டவரே உண்மையான சத்குரு ஆவார். அசேதனப் பொருள்களிடமிருந்து கூட தத்தாத்ரேயர் ஆத்மஞானத்தை அடைந்ததைப் பாருங்கள். சாதகன் சத்குருவின் கிருபைக்குப் பாத்திரனுக ஆசைப்படுமுன் அதற்கு அருகதையைத் தேடிக்கொள்ள வேண்டும். சாதகனுக்கு உண்மையான வேட்கை ஏற்பட்டு அருளுக்கு ஏற்றவனுகும்போதுதான் தெய்வீக அருள் அவனுக்கு உண்டாகும்.

மீசாங்கார் அல்லது மதுசூதன சரஸ்வதியைப் போன்ற ஞானியோ மகானே சாதகனை அவன் எந்தக் குறிப்பிட்ட மார்க்கத்துக்குத் தக்கவனே அதில் புகுத்தக்கூடும். சாதகனது ஆசைகள், சித்தவிருத்திகள், ஆற்றல் ஆகியவற்றைக் குரு ஆழ்ந்து கவனித்து அவனுக்கு எந்த மார்க்கம் தக்கது என்று தீர்மானிப்பார். அவனது மனம் மாசு நிறைந்திருப்பின் ஆசிரியர் அவனுக்குப் பல ஆண்டுகள் தன்னலமற்ற தொண்டு செய்யும்படி

கட்டளையிடுவார். பிறகு அவனுக்கு எந்த மார்க்கம் தக்கது என்று கண்டுபிடித்து அவனுக்கு அந்த மார்க்கத்தை உபதேசிப்பார்.

பக்த முனியால் ஒரு பக்தன் பக்தி மார்க்கத்தில் செலுத்தப்படுவான். ஒரு ஞானி வேதாந்த மாணவனுக்கு மகா வாக்கியங்களின் தத்வத்தைப் புகட்டுவார். ஒரு ஹடயோகியோ ராஜயோகியோ இன்னொருவரை அந்த மார்க்கத்தில் புகுத்த வல்லவர். ஆனால் பரிபூர்ண ஞானத்தைக் கைவரப் பெற்ற பூரண ஞானியோ, யோகியோ, எந்த மார்க்கத்திலும் உபதேசம் அளிக்கக்கூடும்.

ஞானயோகப் பாதையில் செல்ல விரும்பும் ஒரு சாதகன் ஒரு பக்த முனிவரிடம் சென்றால், அவர் அத்வைத வேதாந்த ஞானம் அடையாததால் அச் சாதகனை வேறு தக்க குருவிடம் உபதேசத்துக்கு அனுப்பலாம். ஆனால் ஒரு ஞானியோ இப் பிறப்பிலோ அல்லது முற்பிறப்புகளிலோ சகுண வழிபாட்டின் பலனை ஏற்கெனவே உணர்ந்தவராதலின் சாதகனுக்கு பக்தி நெறி காட்டக் கூடும்.

குருவே சாதகனிடம் கருணை பாவித்து வெளிப்படுத்தினாலன்றி எந்தக் குறிப்பிட்ட யோகத்தால் அவர் பூரணத்துவத்தை அடைந்தார் என்று உணர்வது மிகக் கடினம். தான் அதிகப்பிரசங்கி என்று கருதப்படக்கூடும் என்ற அச்சத்தால் எச் சாதகனும் தனது குருவிடம் தைரியமாக இக் கேள்வியைக் கேட்கமாட்டான்.

முற்போக்குள்ள சாதகர்களைத் தவிர ஏனையோர் நீண்டகாலம் ஆசிரியருக்குப் பொறுமையாகத் தொண்டுசெய்த பிறகே அருள் அடையக் கூடும். குரு சிஷ்யர் இருவரும் ஒருவர் மற்றவரின் இயல்பை நன்கு உணர்தல் வேண்டும்.

சிஷ்யனுக்குத் தனது குருவின் லட்சியங்களையும் கொள்கைகளையும் பூரணமாக உணரக்கூடிய ஆற்றல் வேண்டும். குருவும் தமது சிஷ்யனின் தவறுகளையும் குணக் குறைகளையும் கண்டுணர வேண்டும். சாதகனின் ஆந்திரீக இயல்பை ஆழ்ந்து அறிவதற்கு குருவுக்கு வாய்ப்பு அளிக்கப்படவேண்டும். சிஷ்யன் தன் குருவின் முன்னர் தனது பலவீனத்தையும் குறைகளையும் திறந்துகாட்ட வேண்டும். குருவினுல் கஷ்டங்களின் மூலம் பற்பல விதங்களில் சோதனை செய்யப்படு வதற்கு உட்படுதல் வேண்டும். அப்போதுதான் குருவுக்கு சிஷ்யனிடம் பூரண நம்பிக்கை ஏற்படும்.

சிஷ்யனும் சேவை செய்யுங்கால் குருவை அண்டிப் பழகி அவரது நற்குணங்களைக் கிரகித்துக் கொள்ளவேண்டும். அவன் ஒருபோதும் மனம் வாக்கு காயத்தால், குருவிடம் குற்றம் காணக் கூடாது. சிஷ்யனிடம் குற்றம் காணும் இயல்பு பலமாயிருந்தால், அவன் தனது ஆசிரியரிடமிருந்து யாதொரு நன்மையும் அடைய முடியாமல் அவனது ஆத்ம முன்னேற்றம் முட்டுப்பட்டு நின்றுவிடும். மாணவன் முதலில் குருவினிடம் தனது குறைகளை ஒப்புக்கொள்ள வேண்டும். தனது சங்கடங்கள் யாவற்றையும் அவன் தெரிவிக்க வேண்டும். அப்போதுதான் ஆசிரியர் பயன்தரத்தக்க பிரபல முறைகளால் படுகுழிகளையும் சிக்கல்களையும் நீக்க இயலும்.

மானிட வடிவத்தில் உள்ள குருவே பிரம்மா, குருவே விஷ்ணு, குருவே மஹேஸ்வரன். அவரது வெளி வேடத்தைக் கண்டு நீ அவரைச் சாமானிய மனிதனுக எண்ணிவிடக் கூடாது. நீ உனது குருவுக்குப் பூரண பக்தியுடனும், நம்பிக்கையுடனும் சேவை செய்வாயானுல், கண்ணிமைக்கும் நேரத்தில் அல்லது ஒரு பூவைக் கசக்கிப் பிழிய ஆகும்

நேரத்தில் உன் உபதேசத்தையும் ஆத்ம ஞானத்தையும் அடைந்து விடலாம்.

ஆத்ம ஞானமடைந்த சத்குரு கிடைக்கா விட்டால் சந்நியாசிகளாய் வெகு காலமாக ஆத்மீக பாதையைக் கடைப் பிடித்தவர்களாய் கீழ்த்தர ஆபாசமில்லாதவர்களாய், தங்கள் ஆசிரியர்களுக்குப் பல்லாண்டு சேவை செய்தவர்களாய் உள்ள உயர் வகுப்பு சாதகர்கள் புது சாதகனுக்கு வழி காட்டலாம். அவர்கள் அவனுக்கு உபகுருமார்கள் ஆவார்கள். அப்படிப்பட்ட முன்னேற்றமுற்ற சாதகன்கூட ஒருவனுக்குக் கிடைக்கா விட்டால் சங்கரர், தத்தாத்ரேயர் முதலிய பரம ஞானிகள் இயற்றிய நூல்களில் கூறியுள்ள போதனைகளைப் பின்பற்றலாம். கிடைத்தால் அப்படிப்பட்ட ஆத்ம ஞானியின் புகைப்படத்தை வைத்துக் கொண்டு நம்பிக்கையோடும் பக்தியோடும் ஆராதிக்கலாம். படிப்படியாக சாதகனுக்கு உள்ளக் கிளர்ச்சி உண்டாகி வருவதோடு, சரியான காலத்தில் குரு அவனது கனவில் தோன்றி அச்சாதகனுக்கு உபதேச மளித்து ஊக்கலாம். உண்மையான சாதகனுக்கு அறிவுக்கெட்டாத வழியில் உதவி கிடைக்கும். சீக்கிரத்தில் சந்தர்ப்பங்கள் அனைத்தும் அவனுக்குச் சாதகமாகி, அவன் சாந்தியையும் பரமானந்தத்தையும் நித்தியத்தையும் அடைந்து விடுகிறான்.

குருவின் புத்திமதிகளைச் சிறிதும் தவறாமல் பின்பற்றுவதால் சிறிது காலத்தில் மாணவன் தனது குருவைப் போலவே ஆகிவிடுகிறான். மாணவன் தனது ஆசிரியரின் புத்திமதிகளைப் பின்பற்றாமல் முரண்பாடாகத் தன் மனம் போல் செயலாற்றுவானானால், அவன் மாணவனேயல்ல. குருவின் உபதேசங்களை சப்தார்த்தத்தின்படியும் சாரத்தின்படியும் பின்பற்றுவதோடு எவன் தனது ஆயுள் முடியும் வரையில் கீழ்மட்டத்திலுள்ள ஆன்மாக்களிடம் குரு

உபதேசங்களைப் பிரசாரம் செய்கிறானோ அவனே மாணவன். அப்படிப்பட்ட சாதகர்களே பாக்கிய சாலிகள். அத்தகைய சாதகர்களும் ஞானிகளும் முனிவர்களும் போற்றி.

பிரம்ம வித்யா குருமார்கள், பாகவதர்கள், யோகிகள் ஆகியவர்களின் ஆசிகள் உங்கள் அனைவருக்கும் உண்டாவதாக. இப்பிறப்பிலேயே நீவிர் அழிவற்ற ஆனந்தத்தில் திளைப்பீராக.

---

## இரண்டாம் பாகம்

# 1. ஞானயோகத்தின் அடிப்படைகள் பிரம்மன்

சில சமயங்களில் நீ மரணமடைந்து விட்டதாகவும் உன் சுற்றத்தார் அழுவதாகவும் கனவு காண்கிறாய். அந்தக் கற்பனை மரணநிலையில்கூட அவர்கள் அழுவதை நீ பார்க்கவும் கேட்கவும் செய்கிறாய். உண்மையான மரணத்துக்குப் பிறகும் பிராணன் உண்மையாக இருப்புடன் உளது என்பதை இது தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. இந்த ஸ்தூல சரீரம் கழன்ற பிறகும் நீ இருந்து கொண்டுதான் இருக்கிறாய். அந்த இருப்பே ஆத்மா அல்லது 'பெரிய நான்' ஆகும்.

பிரஹதாரண்ய உபநிஷத்தில் (II-4, 15) 'எதனால் அவன் யாரைப் பார்ப்பது?' என்று வருகிறது. இது ஆத்மா பார்த்துணரக்கூடிய பொருள் அல்ல என்று தெளிவாக விளக்குகிறது. அது எப்போதும் உணரும் கர்த்தா. செய்பவனுமில்லை, செயப்படு பொருளும் இல்லை, கருவியும் இல்லை. ஸ்தூல உலகத்தில் மட்டுமே பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படும் பொருள் ஆகிய மூன்று

அல்லது த்ரிபுடி உளது. அறிபவனே யார் அறியக் கூடும்? என்ருல் இதையெல்லாம் எவன் அறிகிருனோ அவனை ஒருவன் எவ்வாறு அறிவது? பார்க்கும் தொழிலேயே பார்ப்பவனே, நாம் பார்க்க முடியாது; கேட்கும் தொழிலேயே கேட்பவனை, நாம் கேட்க முடியாது; அறியும் தொழிலேயே அறிபவனே நாம் அறிய முடியாது; ஞானத்தை உணர்ந்தவனே நாம் உணர முடியாது.

நாம் பார்ப்பது பாவ பதார்த்தமாகும். பதார்த்தம் என்ருல் பொருள் இருப்புள்ளது பாவம். 'அது மிக மிகப் பெரியது, அது மிக மிக இனியது, லண்டன் மிக மிகப் பெரிய நகரம்' என்று நாம் சொல்லும் போது இந்த 'மிக' என்பது 'அபாவ பதார்த்தத்தைக்' காட்டுகிறது. அது மனதுக்கும் எட்டாதது. பிரம்மன் அல்லது பரம் பொருள் எல்லேயற்றதானதால் "அபாவ பதார்த்தம்' என்ற வகுப்பின் கீழ் வருகிறது. (பாவம் என்பது உணர்ச்சி என்ற பொருளில் இங்கு கூறப் படுகிறது.)

எல்லா வேற்றுமைகளுக்கும் காரணம் வரம்புள்ள அடைமொழிகள் அல்லது உபாதிகளே. இவ்வுபாதிகளே மாயையானவை. அதாவது பொய்யானவை. ஆகவே அவைகளால் ஏற்படும் வேற்றுமைகளும் பொய்யேயாம். எனவே இரண்டற்ற ஒன்ருய் கடைசியில் மிகுந்து நிற்பது பிரம்மன் மட்டுமே. அதுவே முக்காலத்திலும் உளது.

நீ அஞ்ஞானத்திஞல் உன்னைவிட்டு வேறுபட்டவஞக எண்ணி வழிபடும் பகவான் உன்னிடமிருந்து தூரத்தில் வெளியில் வசிப்பவனல்ல என்று உணர்ந்திடுவாய். உனது இருதய அறைகளில் வசிக்கும் ஆத்மாவே அவன். அவன் அந்தர்யாமி.

இந்த அழிவுள்ள உலக வஸ்துக்கள் நமக்குப் பூரண திருப்தி அளிக்காததால், விஸ்ராந்தி

அல்லது சாந்தி, பூரணத்வம் அல்லது விடுதலை, வாழ்வின் நிறைவு அல்லது நிவாரணம், நிர்விகல்ப சமாதி அல்லது சகஜ அவஸ்தை, கைவல்யம் அல்லது மோட்சம் ஆகிய எப்பெயரால் அதைக் கூறினும் அதை நோக்கியே நம்மை அறியாமலேயே எல்லாச் செயல்களாலும் முயன்று கொண்டிருக்கிறோம். காலடி வைப்பது ஒவ்வொன்றும் சச்சிதானந்த பிரம்மத்தை நோக்கியே. ஒரு போக்கிரி அல்லது நாடோடி கூட பிரம்மத்தின் அழிவற்ற நகரத்தை நோக்கியே முன்னேறிக் கொண்டிருக்கிறான். ஆனால் சுற்றி வளைந்த கோணலான பாதை மூலம் செல்கிறான்.

---

## மாயையும் அவித்யையும்

அழுக்குப் படிந்ததால் கண்ணாடி மங்கலாய் விடுவதுபோல் ஞானம் அவித்யையால் மறைக்கப் பட்டிருக்கிறது. அதனால்தான் எல்லா ஜனங்களும் மயக்கமடைந்திருக்கிறார்கள். அவர்கள் பொய்யான பொருள்களோடு ஒட்டிக்கொண்டு சரீரத்தை தூய ஆத்மாவாகத் தவறாக எண்ணுகிறார்கள். அவர்கள் இந்த நாம ரூபமுள்ள மாய உலகம் முழுதும் உண்மையானது என்று நினைக்கிறார்கள்.

குணங்கள் சமநிலையில் இருக்கும்போது தூங்கும் அல்லது ஒடுங்கும் நிலையில் உள்ள பிரபஞ்சம் மூலப்பிரகிருதி அல்லது மஹாசுஷுப்தி எனப்படும் குணங்கள் கலக்கம் அடையும்போது மூலப்பிரகிருதி மாயை, அவித்யை, தமஸ் முதலிய வெவ்வேறு பெயர்களை அடைகிறது. பிரம்மத்துக்கு ஆதி அந்தமில்லை, மாயைக்கும் ஆதியில்லை ஆனால் அந்தம் உண்டு. ஒருவன் ஆத்மஞானத்தை அடைந்தவுடன் மாயை மறைகிறது.

## வைராக்கியம்

நண்பா, ஏன் வீணாக நகைக்கிறாய்? உண்மையில் நீ அழுவதற்குக் காரணம் உளதே! நீ இவ் வாழ்க்கையை மூட மகிழ்ச்சியிலும் இழிந்த இன்பங்களிலும் வீணாக்கி விட்டாய். நீ பற்பல பாவச் செயல்களைச் செய்துள்ளாய். உனது இயல்பை மேம்படுத்த நீ யாதும் செய்தாயில்லை. உனக்குத் தெளிவான மனச்சாட்சியில்லை. உனது இருதயம் எல்லா விதமான அழுக்குகளாலும் நிறைந்திருக்கிறது. உனக்கு மனச் சாந்தியில்லை. சிற்றின்பங்கள் யாவும் உன்னைக் கடித்துக் கொட்டி முடிவில் மாயச் செய்யும் என்பதை நினைவில் வை.

கீதை அத். XVIII-38-இல் புலன்களும் விஷயங்களும் கூடுதலால் உண்டாகும் இன்பம் முதலில் அமிருதத்துக் கொப்பாகவும் இறுதியில் விஷத்தைப் போலும் உளது என்று கூறப்பட்டிருக்கிறது. இப்போது உன் கண்களைத் திறந்து பார். நற்கர்மங்களைச் செய். அறிஞர்களின் கூட்டுறவை நாடு. பகவானை நினைவுகூர். தியானப் பயிற்சி செய். புதிய சிறந்த வாழ்வை அடைந்திடுவாய்.

வைராக்கியம் என்பது கேவலம் அந்தரங்க மன நிலையே. ஒரு மனிதன் உலகத்தில் சுகபோகங்கள், பணம், பாக்கியம் முதலியவைகளோடு இருப்பினும், பூரண வைராக்கியம் பூண்டவனாயிருக்கலாம். இமயத்தின் குகையில் வசிக்கும் ஒரு சாது தனது தண்ட கமண்டலம் கௌபீனங்களில் பற்றுடையவனாயிருக்கலாம். பெரிய ராஜ்யத்தை ஆண்ட போதிலும் ஜனக மகாராஜன் பூரண வைராக்கியமுடையவர். அதேபோல் பகீரத ராஜனும், ராணி சுடாலையும் ஒரு ராஜ்யத்தை ஆண்டபோதிலும் பூரணவைராக்கியம் கொண்டிருந்தார்கள். ஆனால்

காட்டுக்குச் சென்ற அவளது கணவன் தனது சரீரத்திலும் கமண்டலத்திலும் ஆழ்ந்த பற்றுக்கொண்டிருந்தான். சில மணிநேரம் சாதாரணமாகப் பேச்சுக் கொடுப்பதாலும் அல்லது சில நாட்களில் அவரோடு தங்கியிருப்பதாலும் ஒரு சந்நியாசி அல்லது கிரகஸ்தனின் வைராக்கிய நிலை அல்லது சித்தநிலையைப்பற்றி நீ சரியானபடி தீர்மானம் செய்ய முடியாது. அவரோடு நீண்டகாலம் வசித்து அவரது அந்தரங்க மனப்பாங்கைக் கவனிக்க வேண்டும். பொதுவாக ஜனங்கள் பெருந் தவறுகள் செய்கிறார்கள். அவர்கள் வெளித் தோற்றத்தில் மயங்கிவிடுகிறார்கள். அவர்கள் முதலில் ஒரு ஆடையற்ற சாதுவை பெரிய மகாத்மாவாகக் கொள்கிறார்கள். பிறகு நெருங்கிப் பழகி, தங்கள் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்கிறார்கள். ஆடை நீக்கமே உண்மையான வைராக்கியம் ஆகாது, வேண்டுவது சித்த நிர்வாணமே — அதாவது வாசனைகள், அகம்பாவம் முதலியன அடியோடு அழிக்கப்படவேண்டும். வெளிவேடங்களைக் கண்டு மோசம் போகாதீர்.

---

## மனதைக் கட்டுப்படுத்து

நீ தூய உணவை உண்டால், உன் மனம் தூய்மையுடையதாகும். உணவின் மிக சூட்சுமமான சத்தினுல் ஆக்கப்பட்டதே மனது. உனக்கு மனத் தூய்மை உண்டாயின், நீ கடவுள் அல்லது ஆத்மாவை நீ எப்போதும் நினைவில் வைத்தால், அவித்யை, காமம், கர்மம் (அறிவின்மை, ஆசை, செய்கை) ஆகிய இருதயத்தின் முடிச்சுகள் (ஹிருதயக் கிரந்திகள்) அறுக்கப்பட்டு நீ மோட்சத்தை அடைவாய்.

எல்லையற்ற, எங்கும் நிறைந்த ஆத்மா தனது கற்பனை சக்தியினால் தரித்துக் கொண்ட உருவமே மனம் எனப்படும். மனது படைக்கும், அழிக்கும். அது தனது கற்பனை சக்தியினால் பிரபஞ்சம் முழுவதையும் படைக்கிறது. அதுவே எல்லா இன்ப துன்பங்களையும் உண்டாக்கி அநுபவிக்கிறது. அதுவே பந்தத்துக்கும் முக்திக்கும் காரணம். மனமே அனைத்தும், ஒவ்வொன்றும் அதுவே. அது உனது உண்மை நண்பனும் கெட்ட சத்துருவுமாம். அது பல்வேறு பற்றுதல் உண்டாக்குகிறது. அது பல்வேறு இழிந்த இச்சைகளாலும் அவாக்களாலும் நிறைந்திருக்கிறது. உயர்ந்த மனது வாழ்வின் தலைசிறந்த குறிக்கோளை அடையும் வழிக்கு உண்மையான புத்திமதிகளை அளிப்பதால், அது அருமையான நண்பனும் உபகாரியுமாகும். உயர்ந்த மனம் உனக்கு வழிகாட்டும் குரு. அதன் இனிமையான சிறுகுரலைக் கேட்டு அதன் போதனைகளை மேற்கொள். தூயமனத்தின் குரல் கடவுளின் குரலாகும். அது நம்பத்தகுந்த குரல். கீதை அத். VI—5, 6-இல் ஒரு மனிதன் தன்னாலே தன்னை உயர்த்திக்கொள்ள வேண்டும்; தன்னைத் தாழ்த்திக் கொள்ளக்கூடாது. நிச்சயமாக, தானே தனக்கு உறவினன். தானே தனக்குப் பகைவன். எவன் தன்னாலேயே வெல்லப் பட்டானோ அவனுக்குத் தானே தனக்கு உறவினன். ஆனால் தன்னை வெல்லாதவனுக்கு தானே வெளிப் பகைவனைப் போல் பகைவனாவான்'' என்று உரைக்கப்பட்டுள்ளது. தாழ்ந்த இயற்கையுள்ள மனதைக் கட்டுப்படுத்துவதுபோல் இந்த சம்சார சாகரத்தைக் கடப்பதற்கு இவ்வுலகில் வேறொரு மரக்கலம் கிடையாது.

உனது மனத்திலுள்ள எண்ணங்களின் இயல்பையும் நீ கொண்டிருக்கும் மனத்தில் பதிந்த படங்களையும் இலட்சியங்களையும் பொறுத்ததே உனது

குணநலம். உனது எண்ணங்கள் கீழ்த்தரமானுல் உனது குணம் கெட்டதாயிருக்கும். நீ கம்பீரமான கருத்துக்களையும் உயர்ந்த லட்சியங்களையும் தெய்வீக ஒவியங்களையும் மனதில் கொள்வாயானுல், நீ மகத்தான குணசாலியாய் விளங்குவாய். சந்தோஷம், சக்தி, சாந்தி ஆகியவற்றிற்கு இருப்பிடமாயும் நீ ஆவாய். நீ உயர்ந்த தெய்வீக எண்ணங்களையே எண்ணும் பழக்கத்தை விருத்தி செய்வாயானுல் இழிந்த எண்ணங்கள் யாவும் சிறிது சிறிதாகத் தாமாகவே அழிந்துபடும். சூரியன்முன் இருள் நிற்க முடியாததுபோல், கெட்ட எண்ணங்களும் உயர்ந்த எண்ணங்களின் முன் நிற்கமாட்டா.

---

## பூர்வாங்க சாதனம்

அஹங்காரத்தின் வழிகளையும் வழக்கங்களையும் அறிய முயற்சி செய். அது, சுயலாபம் அல்லது சுயமுன்னேற்றம், அதிகாரம், வஸ்துக்களை அடைதல், இன்பம் ஆகியவற்றில் அபரிமிதமான ஆவல் கொண்டிருக்கிறது. இந்த அகங்காரத்தையும் சுயநலத்தையும் கொல்லு. ஆசையற்றவனுயிரு. எதிரிடை நற்குணங்களாகிய தியாகபுத்தி, சேவை முதலியனவே வாழ்க்கையின் வழிகாட்டிக் கொள்கைகளாக நம்பி நட. உடனே நீ சிறந்த, விரிந்த ஆத்மீக வாழ்க்கையை அடைவாய்.

எதிர்த்துப் போராடும் சக்திகளைத் தூண்டு. முற்போக்கு லட்சியமாகிய மக்களுக்குச் சுறுசுறுப்பான சேவை செய்தல், தூய அன்பு ஆகியவற்றைக் கடைப்பிடி. வாசனைகளின் கீழ்த்தர எதிர்மறைப் போக்குகளைத் தடுக்கவல்ல நேர்முக சாத்வீகமான எதிரிடைச் சக்தியின் போக்கை உற்பத்தி செய்.

எப்போதும் உன்னை நேர்நிலையிலேயே வைத்துக் கொள். எதிர்மறை எண்ணங்களை நேர்முகமான தெய்வீக எண்ணங்களால் அடக்கு. அசுத்தம், பலவீனம், மனச்சோர்வு ஆகியவற்றினின்று மேல் கிளம்பு. எப்போதும் தைரியமாகவும் சந்தோஷமாயும் இரு. தெய்வீக சம்பத்துக்களாகிய கருணை, சாந்தி, க்ஷமை, பொறுமை முதலியவற்றை விருத்திசெய். துடுக்கு, அகங்காரம், இறுமாப்பு, கோபம், காமம் முதலிய அசுர சம்பத்துக்களை ஒழி. நீ அவசியம் பரமானந்தம் அல்லது ஞானத்தை அடைந்தே தீருவாய்.

சாதகர்களே! உங்களிடமே உங்கள் அழிவற்ற ஆத்மாவிடமே அடைக்கலம் புகுங்கள். உங்கள் தீர்மானத்தில் உறுதியாயிருங்கள். உண்மையும் நேர்மையுமான நெறியைப் பின்பற்றுங்கள். விழிப்பாகவும் விடாமுயற்சி உள்ளவர்களாகவும் இருங்கள். தொந்தரவு கொடுக்கும் இந்திரியங்களை அடக்குங்கள். நாவையும் சந்ததி உண்டாக்கும் உறுப்பையும் கட்டுப்படுத்துங்கள். சம்சார சாகரத்தைக் கடந்து நீங்கள் அமரத்துவத்தையும் நித்திய சாந்தியையும் ஆனந்தத்தையும் அடைவீர்கள்.

---

## தியானுப்பியாசம் செய்

நூதன சாதகர்கள் தினந்தோறும் சில முக்கிய வேதாந்த வாக்கியங்களை அடிக்கடி மனனம் செய்ய வேண்டும். அப்போதுதான் அவர்களது சந்தேகங்கள் நீங்கும். நல்வழியில் நிலைத்திடுவார்கள். அவைகளாவன: "ஆரம்பத்தில் இருந்தது இருப்பு ஒன்றே, இரண்டற்ற ஒன்று" சாந்தோக்கிய உபநிஷத் VI 2-1, "ஆரம்பத்தில் இது எல்லாம் ஆத்மா ஒன்று மட்டுமே" ஐத்ரேய உபநிஷத் VI

2-1, ''காரணமும் காரியமுமின்றி இதுவே பிரம்மம். எல்லாவற்றையும் காணும் இந்த ஆத்மாவே பிரம்மம்'', பிரஹதாரண்ய உபநிஷத் II 5-19 ''அந்த அழிவற்ற பிரம்மம் முன்பு'' மாண்டூக்ய உபநிஷத் II 2-7.

நிகழ்காலத்தை மட்டுமே உன் கவனத்தில் வை. சென்றதையோ இனி வரப்போவதையோ சிந்திக்காதே. அப்போதுதான் நீ உண்மையில் சந்தோஷமாக இருப்பாய். கவலைகள், விசாரங்கள் தொல்லைகளின்றி இருப்பாய். நீண்ட ஆயுளுள்ளவனுகவும் இருப்பாய். விடாமுயற்சியால் சங்கல் பங்களை நாசம் செய். இடைவிடாமல் சச்சிதானந்த பிரம்மத்தைத் தியானித்து உயர்ந்த புனிதமான பதவியைப் பெறு. சிறந்த முறையில் நீ முன்னேறுவாயாக. மெய்யறிவையடைந்த நிலையில் நீ பிரம்மானந்த சாகரத்தில் மூழ்கி வாழ்வாயாக!

இடைவிடாத அப்பியாசமின்றி அழிவற்ற ஆத்மாவை அடைதல் இயலாது. ஆகவே அமரத் துவத்தையும் விடுதலையையும் அடைய விரும்பு பவன் ஆத்மா அல்லது பிரம்மத்தை வெகுகாலம் தியானித்தல் வேண்டும்.

உண்மையான ஏகாந்த ஸ்தானம் இரண்டாவது இல்லாத ஒன்றேயான பிரம்மமே. அங்கு சப்தமாவது வர்ணமாவது கிடையாது. இங்கு யாதொரு தொல்லையுமில்லை. அப்பியாச ஆரம்பத் தில் உனது ஒரே துணை பிரம்மமே. ஆழ்ந்த தியானத் தில் நீயே 'அது' ஆகும்போது, நீ தனித்து நிற்பாய். (சிவ கேவ லோஹம்)

ஆத்மாவே சக்திக்கு உற்பத்தி ஸ்தானம். ஆத்மா அல்லது சக்தியின் உற்பத்தி ஸ்தானத்தைச் சிந்திப்பதும், சக்தி, பலம், வல்லமை ஆகிய வற்றை அதிகப்படுத்திக் கொள்வதற்குப் பலமான முறையாகும்.

எங்கும் பரந்த, தூய, அழிவற்ற சச்சிதானந்த ஆத்மா அல்லது பிரம்மத்தை நீ ஒரு விநாடி சிந்தித்தால் கூட அது, பிரயாகையில் புண்ணிய நதிகளின் சங்கமமாகிய தூய த்ரிவேணியில் ஆயிரத்தெட்டு முறை மூழ்குவதற்கு ஒப்பாகும். இது உண்மையான மானஸீக தீர்த்த ஸ்நானம். அறிவு அல்லது ஞானத்தில் ஆந்திரிகமான ஸ்நானத்துக்கு ஒப்பிடும்போது சரீர ஸ்நானம் பொருட்டேயில்லை.

கடவுள் அல்லது ஆத்மாவை ஞானம், திருப்தி, சாந்தி, சந்தோஷம், சமதிருஷ்டி ஆகிய மலர்களால் ஆராதனை செய். இதுவே உண்மையான வழிபாடாகும். ரோஜா, மல்லிகை முதலிய மலர்கள், சந்தனம், தூபம், இனிப்புப் பண்டங்கள், கனிகள் முதலிய காணிக்கைகள் ஞானம், திருப்தி முதலிய காணிக்கைகளோடு ஒப்பிடும்போது அற்பமானவை. இப்பொருள்கள் அஞ்ஞானிகளால் அளிக்கப்படும் காணிக்கைகள்.

உனது இருதய அறைகளில் உறையும் நித்தியமான அழிவற்ற எப்போதும் புனிதமான ஆத்மாவே நீ என்று ஒன்றுபடுத்திக் கொள்ள முயற்சி செய். "நான் பரம புனிதமான ஆத்மா" என்று எண்ணி உணர்ச்சி கொள். இந்த ஒரு எண்ணம் எல்லாத் தொல்லைகளையும் கற்பனைக் கருத்துக்களையும் நீக்கிவிடும். மனது உன்னை மயக்க விரும்புகிறது. இந்த எதிரிடைப் போக்கான எண்ணத்தைத் தொடங்கு. மனது திருடனைப்போல் பதுங்கும். ஜாக்கிரதையாக இரு.

---

## தடைகளை விலக்கு

தியானத்தில் உன்னை அதிகமாக அலட்டிக் கொண்டு உனது சக்திக்கு மீறிச்சென்றால், சோர்ம்

பலும் சுறுசுறுப்பற்ற இயல்பும் வந்து மூடிக் கொள்ளும். சமம், தமம், உபரதி, பிரத்தியாஹாரம் ஆகியவற்றை அப்பியசிப்பதன் மூலம் உண்டாகும், மனச்சாந்தியால் தியானம் இயல்பாக வருதல் வேண்டும்.

நீ சமாதியை அப்பியசிக்கும்போது, உறக்கம், சோம்பல், தொடர்ச்சி முறிதல், குழப்பம், மோகம், மடமை, உலக இன்பத்தில் இச்சை ஆசாபாசங்கள் முதலிய பல தடைகள் உன்னைத்தாக்கும். நீ எச்சரிக்கையாக இருக்கவேண்டும். விழிப்பாகவும் இருக்கவேண்டும். பொறுமையோடு தைரியமான முயற்சிகளால் இத்தடைகளைப் படிப்படியாக நீ மேற்கொள்ளுதல் வேண்டும். இந்த சூன்யத்தையும் நீ கடத்தல் வேண்டும். எல்லா விருத்திகளும் அழிந்தபோது உனக்கு சூன்யமாகத் தோன்றுவது உண்மையில் சூன்யமல்ல. அது அவ்யக்தம். இந்த சூன்யத்தையும் கடந்தால், நீ ஆத்மானந்தத்தில் அமர்வாய். நீ நேருக்கு நேராக சூன்யத்தை அடையும்போது நீ ஏகாந்தமாக விடப்படுவதால், உன்னைப் பயங்கரமான பீதி மேற்கொள்ளப் பார்க்கும். நீ காண்பதும் ஒன்றுமில்லை. கேட்பதும் ஒன்றுமில்லை. உன்னை உற்சாக மூட்டவும் யாருமில்லை. உனக்கு நீயே ஆதாரமாக இருக்கவேண்டி வருகிறது. இந்த நெருக்கடியான தருணத்தில் சமயோசித புத்தி அவசியமாக உளது. உன்னுள்ளிருந்தே தைரியத்தையும் பலத்தையும் உண்டு பண்ணிக்கொள். உத்தாலகரிஷி கூட இந்த சூன்ய நிலையைக் கடக்கும்போது வெகு கஷ்டத்தை யடைந்தார். தீவிரத் தீர்மானமும் இரும்பு நெஞ்சமும் படைத்த புமான்முன் எந்தத் தடையும் நிற்க மாட்டாது.

அவ்யக்தத்தை அடைந்தபிறகு சில சாதகர்கள் தங்கள் சாதனத்தை நிறுத்தி விடுகிறார்கள்.

தாங்கள் உயர்ந்த லட்சியத்தை யடைந்து விட்ட தாகத் தவறுதலாய்க் கற்பனை கொள்கிறார்கள், இது வருந்தத்தக்க தவறு. அவர்கள் தங்களை அவ்யக்தத்தில் ஆழ்த்திக்கொண்டு பிரகிருதி லயர் களாகின்றனர். பிரகிருதி லயர்கள் சில சக்தி களோடு இவ்வுலகில் திரும்பவும் பிறக்கிறார்கள். இந்த அவ்யக்தம் அல்லது வெளிப்படாத பிரகிருதி யைக் கடந்து நீ அப்பால் செல்ல முயலவேண்டும். அப்போது நீ பூமா அல்லது பரப்பிரம்மத்தை அடைந்திடுவாய்.

வாசனைகள் பலம் பொருந்தியவை. புலன்களும் மனமும் முரட்டுத்தனமும் மும்முரமுமானவை. திரும்பத் திரும்ப போர் நடத்தி வெற்றிபெற வேண்டும். அதனால்தான் கடோபநிஷத்தில் ஆத் மீக பாதை கத்தி வெட்டுப் பாதை என்று சொல்லப் பட்டுள்ளது. இந்த கத்தி வெட்டுப் பாதையில்கூட பலமான மனவுறுதியும் இரும்புத் தீர்மானமும் உள்ள மனிதனுக்கு யாதொரு துன்பமும் இல்லை. ஒவ்வொரு படியிலும் உள்ளிருந்து பலம் வருகிறது.

ஆத்ம ஞானத்தை யடைவதற்கு கடுந்தவமும் உடலைச் சித்திரவதை செய்துகொள்வதும் அவசிய மல்ல. எப்போதும் மத்திய மார்க்கத்தைக் கைக் கொள்ளவேண்டும். அதிகமாகப் பட்டினி கிடந் தால் பலக்குறைவு உண்டாகி சுறுசுறுப்பான ஆத்மீக சாதனத்தைத் தடுக்கிறது. இடையிடையே, நீ இலேசான உபவாசங்களை மேற்கொள்ளலாம். ஞாயிறு தினங்களிலும் ஏகாதசி தினங்களிலும் பாலும் பழமும் சாப்பிடு. நீதிநெறிப் பண்பாடு முதன்மையான அவசியம். சித்திகளை அடைவதில் ஆவல் அளிக்கப்பட வேண்டும். சித்திகளில் அதிக ஆர்வமுள்ளவன், இன்னும் மாயையின் அதிகாரத் தில் உள்ளவன். இந்த ஆர்வம் அழிந்தால்தான், மாணவன் ஞானம் அல்லது ஆத்ம சாம்ராஜ்யத்

தின் எல்லைக்கோட்டில் நுழைகிறான். ஒவ்வொரு மாணவனும் ஆத்மீக தினசரிக் குறிப்பை வைத்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் குறைகள் நிவர்த்திக்கப்பட்டு மனது அடங்கும். ஒவ்வொரு சாதகனின் இருதயத்திலும் மனித சமூகத்துக்குத் தொண்டு செய்யும் உணர்ச்சி ஆழப்பதிந்திருக்க வேண்டும். சாத்வீக நற்குணங்களாகிய கருணை, உதாரகுணம், பொறுமை, க்ஷமை, பெருந்தன்மை ஆகியவற்றைப் பெருத்த அளவுக்கு விருத்தி செய்ய வேண்டும். யோகாசிரியர்களும் ஞானிகளும் மேற் கூறிய விஷயங்களைப் பெரிதும் வற்புறுத்துகிறார்கள்.

எக்காரணத்தாலும் மனச்சோர்வடையாதே. ஆத்மீக சிங்கம்போல் நட. கஷ்டங்களை ஒன் றொன்றாக வெற்றி கொள். ஜனங்களின் கண்டனங் களுக்கு அஞ்சாதே. ஸ்ரீ மகாதேவன், சங்கராசாரி யார், கண்ணபிரான், இராமபிரான் ஆகியோர் களையே ஜனங்கள் இன்றும் நிந்திக்கிறார்கள். யுகத் துக்கு யுகம் இவ்வாறேதான் அவர்கள் தொடர்ந்து செய்வார்கள். உலகம் தாமஸ மக்களால் நிறைந் துளது. சாத்வீக மக்கள் மிக அருமை. உன் மனதை அடக்கு. எப்பேர்ப்பட்ட காலங்களிலும் உறுதியாக நில். மனதைக் குளிர்ச்சியாய் சம நிலை யில் வைத்துக் கொள். இரண்டு பங்கு தீவிரத் தோடும் சக்தியோடும் உலக சேவை புரி. நீ மகத்தான வாழ்வையடைவாயாக! நீ கைவல்ய நிலையை அடைவாயாக !

மனது சாத்வீகமானால் உனக்கு க்ஷணதர்சனங் கள், சகஜ ஞானத்தின் மின்வீச்சுக்கள் உண்டாகும். நீ செய்யுட்களை இயற்றுவாய். உபநிஷத்துக்களின் கருத்துகளை அழகாக அறிந்துகொள்வாய். ஆனால் நூதன சாதகர்களுக்கு இந்நிலை நீண்டகாலம் நிலைத்து நிற்காது. தாமஸ ராஜஸ குணங்கள் மனமாகிய தொழிற்சாலையில் நுழைய முயலும்.

தொடக்கத்தில் முன்னேற்றம் தவணையுடையது போல் இருக்கும். ஒருபோதும் நிதானமாயும் தொடர்ச்சியாயும் இருக்காது. நீ அனேகமாக குறிக்கோளை அடைந்துவிட்டதாய் எண்ணுவாய், அடுத்த பதினைந்து இருபது நாட்கள் ஏமாற்றத் தைத் தவிர வேறு இராது. ஒரு நிலையிலிருந்து மற்றொன்றுக்குத் தாண்டுவதாக இருக்குமே தவிர தொடர்ந்த முன்னேற்றமாக இருக்காது. தீர்க்க மான ஆழ்ந்த வைராக்கியத்தைக் கைக்கொண்டு, ஆழ்ந்து தொடர்ந்து சாதனத்தைச் செய்து வா. சில ஆண்டுகளுக்கு குருவின் அண்மையில் இருந்து அவரது உபதேசத்தைக் கடைப்பிடி. உனக்கு நிதானமான தொடர்ச்சியான முன்னேற்றம் ஏற்படும்.

ஏ இராமா! நீ சத்யகாமன், உண்மையை விரும்புபவன். நீ மெய்ந்நெறியை அல்லது ஆத்ம ஞான நெறியைத் தடுமாற்றத்துடனுவது பின்பற்றுவதால், நீ என் அன்புக்குரியவன். நீ வெற்றியடைந்தே தீருவாய். சூரியனைக் கண்ட பனிபோல் எல்லாத்தடைகளும் நீங்கிவிடும். கஷ்டப்படாதே. தெய்வீக ஒளி இறங்கிவருவதில் சிறிது தாமதம் இருந்தால் கவலையுருதே. ஆத்மீக நெறியில் தைரியமாக முன்னேறு.

அன்புக்குரிய இராமா! நீ இப்போது பலமான ஆத்மீகக் கோட்டைக்குள் இருக்கிருய். எந்த மோக மும் உன்னைக் கலக்கமுடியாது. நீ முழுதும் பத்திர மாக இருக்கிருய். நீ இப்போது பயமின்றி தீவிர சாதனை செய்யலாம். பராக்கிரமமுள்ள வீரனுகு. உனது பகைவனுன மனத்தை இரக்கமின்றிக் கொல்லு. சாந்தி, சமதர்சனம், திருப்தி ஆகிய வாகையைச் சூடிக்கொள். இப்போதே உன் வதனத் தில் பிரம்மதேஜஸ் வீசுகிறது. கருணைக் கடலான கடவுள் உனக்கு எல்லா விதமான வசதிகளையும்,

நல்ல தேகத்தையும், நெறிகாட்ட குருவையும் அருளியிருக்கிறார். இதற்குமேல் உனக்கு என்ன வேண்டும்? மேம்பாடடைந்து உண்மையை உணர்ந்து எங்கும் அதைப் பறைசாற்றுவாயாக.

---

## அனுபவங்களை அடை

அப்பியாசத்தைத்தான் அதிகம் பொறுத்தது என்பதை மறுக்க வொண்ணாது. பயிற்சியே மனிதனைப் பூரணமாக்குகிறது என்பதை நீ அறிவாய். உனது இலக்கை நெருங்கும்போது உண்டாகும் பரமானந்தத்தால் நீ சிலிர்ப்பதை உணர். இப்போது நீ அற்புதமான அமைதியை அநுபவிப்பாய். ஆழ்ந்த அமைதியோடு அவ்வமுதத்தை அருந்து. ஆழ்ந்த அமைதியில் அறிவுக்கெட்டாத ஆத்மா உள்ளங்கை நெல்லிக் கனிபோல் உனக்குப் பிரத்யட்சமாகக் காணும். அவித்யையும், மாயையும் அவற்றின் பயன்களான மோகம், பயம் முதலியவும் கால் வாங்கி ஓடும். எங்கும் ஒளி, அறிவு, தூய்மை, ஆனந்தம் ஆகியவை மட்டுமே விளங்கும்.

சிலர் ஆத்மாவின் கரைகடந்த ஆச்சரியங்களை க்ஷணதர்சனங்களாகக் காண்கிறார்கள். சிலர் ஆத்மாவின் பரந்த பிரதேசத்தின் எல்லைக் கோட்டில் இருக்கிறார்கள். தத்தாத்ரேயர், ஜடபரதர், வாமதேவர் சதாசிவப்பிரம்மம் போன்ற சிலர் பரமானந்த சாகரத்தில் ஆழ்ந்து மூழ்கி விட்டார்கள். எவ்வளவுக்கெவ்வளவு வாசனைகள், அகங்காரம், மோகம் அத்யாஸம் ஆகியவை ஒடுங்குகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு ஆத்மானந்தம் பெருகும். சாதனம் எவ்வளவு அதிகமோ அவ்வளவு ஆத்மானந்த அநுபவமும் அதிகமாகும்.

---

## ஜீவன்முக்தனாக ஆவாய்

ஜடைமுடிகளாலாவது, தீப்பொறி வீசும் பிரசங்கங்கள் புலமையாலாவது, அற்புதங்களை வெளிக்காட்டுவதாலாவது ஒருவன் ஆத்ம ஞானத்தை அடைந்துவிடமாட்டான். எவனிடம் ராகத் துவேஷமாகிய இரு போக்குகள், அஹங் காரம், காமம், குரோதம் ஆகிய முழுதும் நசித்து விட்டனவோ அவனே எப்போதும் ஆனந்தமா யிருக்கிறான், அவனே பிரம்மா அல்லது முக்தி பெற்ற ஞானி அல்லது ஜீவன்முக்தன்.

வாசனைகளும் விஷயங்களில் பற்றும் முழுதும் ஒழிந்து நீ அந்த அசையாத நிலையில் நிற்பாயானால், நீ ஜீவன் முக்தனாக ஆய்விட்டாய். நீ உனது ஆத்மாவிலேயே நிலை நிற்பாய். இரண்டற்ற பரம நிலையில் நீ விஸ்ராந்தி பெறுவாய். உனக்கு ஞானக் கண் உண்டாகும். மேகங்களில்லாதபோது சூரியன் பிரகாசிப்பதுபோல் அறிவொளி ஒளி மறைவின்றி ஒளி வீசும். நீ ஒருபோதும் எந்த உலகப் பொருளாலும் கவர்ச்சியடைய மாட்டாய். பிரமையினின்றும் துக்கத்தினின்றும் நீ பூரணமாக விடுதலையடைவாய். இவ்வுலகமெங்கும் ஆத்மாவே பரவி நிறைந்துள்ளது என்று பிரத்யக்ஷமாக உணர் வாய். உன்னிடம் பிரம்ம தேஜஸ் ஜொலிக்கும். நீ சமதர்சனமும் சலனமற்ற மனமும் உள்ளவனாய் மனது எப்போதும் பிரம்மானந்தத்தால் குளிர்ந் திருப்பதால் இந்திரிய விஷயங்களில் ஆசை உனக்கு அறவே அகலும். திருப்தியும் சாந்தமுமுள்ள மனத்தினின்று சிந்தும் குளிர்ந்த அமுதத் தேனில் நீ மூழ்குவாய்.

புலன்களும் மனமும் சாந்த நிலையை அடைந்து புத்தி வேலை செய்வது நின்று தூங்காத தூக்கத்தை நீ அநுபவிக்க முயற்சி செய். இந்தத் தூங்காத

தூக்கமே மஹா நித்திரை அல்லது துரியநிலை எனப்படும். அது ஜீவாத்மா பரமாத்மாவில் லயித்து உண்டாகும் பூரண அறிவு நிலை. இத் தூக்கத்தினின்று விழிப்பு கிடையாது. இந்த நாம ரூபக் காட்சி முடிவில் மறைந்து விடுகிறது.

---

## 2. ஞானயோகத்தின் சாரம்

அஞ்ஞானம் என்றால் என்ன? மாய ஊர்திகளான உடல், உள்ளம், பிராணன், புலன்கள் முதலியவற்றோடு தன்னை ஒன்றுபடுத்திக் கொள்வதே அஞ்ஞானம். ''நான் கர்த்தா. நான் போக்தா, நான் பிராம்மணன், நான் பிரம்மச்சாரி, இது என்னுடையது, அவன் என் மகன்'' என்று கூறுவது அஞ்ஞானம். ஞானம் என்றால் என்ன? அபேத தர்சனமே ஞானம். பிரம்மத்தைத் தன் சொந்த ஆத்மாவாக உணர்வது ஞானம். ''நான் பிரம்மம், நான் புனிதமான எங்கும் பரந்த சைதன்யம். நான் அகர்த்தா, அபோக்தா, நான் சாட்சி மாத்திரமே'' என்று காண்பது ஞானம். ஒரே ஆத்மாவை எங்கும் காண்பது ஞானம்.

பிரம்மமாகிய பரமாத்மா எந்தக் கர்மங்களுக்கும் கர்த்தா அல்ல. கர்மபலனை அநுபவிக்கும் போக்தாவுமல்ல. உலகத்தின் சிருஷ்டி, ஸ்திதி சம்ஹாரம் அவனால் அல்ல. அவை மாயை அல்லது அவித்யையின் செயலே. இம்மாயை சம்சாரம் அல்லது உலகக் கிரமமாக வெளிப்படும் பகவானின் சொந்த சக்தியே.

வரையறையற்ற பரப்பு, ஒரு குடத்தால் அடைக்கப்பட்ட பரப்பு, குடத்திலுள்ள நீரில் பிரதிபலிக்கும் பரப்பு ஆகிய மூவகைப் பரப்புகள் தோன்றுவதுபோல், மூன்று வகையான சைதன்

யம் அல்லது அறிவு உளது. அவையாவன; வரையறையற்ற அறிவு அல்லது பரப்பிரம்மம், மாயையில் பிரதிபலிக்கும் சைதன்யம் அல்லது ஈஸ்வரன், அவித்யையில் பிரதிபலிக்கும் சைதன்யம் அல்லது ஜீவன், புத்தியில் பிரதிபலிக்கும் அறிவின் செயலைக் கர்த்தா என்ற எண்ணமும், ஜீவன் அல்லது ஜீவாத்மா என்ற எண்ணமும், மௌன சாட்சியான எல்லையற்ற பிரம்மத்தின் மீது மூடர்களால் சுமத்தப்படுகிறது.

வரையறையற்ற பரப்பு, குடத்தால் அடைக்கப்பட்ட பரப்பு, குடத்தில் பிரதிபலிக்கும் பரப்பு ஆகிய உதாரணம், பிரம்மம் உண்மையில் ஒன்றே. ஆனால் மாயையால் மூன்றாகத் தோற்றப்படுகிறது என்று விளக்கவேயாம்.

அறிவு பிரதிபலிப்பது என்பது ஒரு தவறுதலான நம்பிக்கை அல்லது கொள்கையே. அது அனாதியான அவித்யை அல்லது ஆரம்பமற்ற அஞ்ஞானத்தாலேயே. பிரம்மத்துக்கு யாதொரு வரம்புமில்லை. வரையறை யளிப்பது அவன் மீது சுமத்துவதே (அத்யாஸம் அல்லது கற்பனை).

'தத் த்வம் அஸி' (அது நீயாகவே உள்ளாய்) என்னும் உபநிஷத் மகாவாக்யத்தால் பரமாத்மாவும் பிரதிபலித்த ஆத்மா அல்லது ஜீவாத்மாவும் ஒன்றே என்பது தீர்மானிக்கப்பட்டுள்ளது. 'தத் த்வம் அஸி' என்னும் மகாவாக்கியத்தின் மூலம் ஜீவாத்ம பரமாத்ம அபேதமாகிய ஞானம் உதித்து விடின், அவித்யை அல்லது அஞ்ஞானம் அதன் கிளை கொம்புகளோடும் உட்பிரஸ்னைகளும் அழிந்துவிடும். இவ்வாறு சந்தேகமேயில்லை.

பூரணத்வம் அல்லது முக்தியை அடைவதற்கு ஆத்மஞானம் அல்லது பரம்பொருளைப்பற்றி நேரான சகஜ ஞானம் அவசியம். நூறு ஜென்மங்

களாஞலும் வேத நூல்களை ஓதின மாத்திரத்தில் மோட்சம் கிடைத்துவிடாது.

மாயை ப்ரகிருதி, ப்ராரப்தம் அல்லது அவ்யக்தம் என்றும் சொல்லப்படும். அது இருப்புள்ளதுமல்ல இல்லாததுமல்ல (சத்துமல்ல அசத்துமல்ல) அது விவரிக்க வொண்ணுதது. அது சத்—அசத்—விலக்ஷணம், அஞதி பாவ ரூபம், அநிர்வசனி.

ஞானி அல்லது ஜீவன் முக்தனுக்கு சுகமுமில்லை; துக்கமுமில்லை; பிறப்புமில்லை; இறப்புமில்லை. அவன் சம்சார சாகரம் அல்லது உலக வாழ்க்கையைக் கடந்து பயமற்ற தன்மையும் அழிவற்றதுமான மறு கரையை அடைந்து விட்டான். அவன் பிரம்மமாகவே ஆய்விட்டான். பிரம்மவித் பிரம்மைவ பவதி. பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகவே ஆய்விடுகிருன். இது சுருதிகள் அல்லது உபநிஷத்துகள் வற்புறுத்திக் கூறுவது. ஞான யோகத்தின் நோக்கம் துவைதபாவத்தை ஒழித்துக்கட்டி ஜீவாத்ம பரமாத்ம ஐக்கியத்தை நிலைநிறுத்துவதே.

இது வேதாந்த முழுவதின் திரட்டு; இது எல்லாப் பாவங்களையும் போக்கிப் புனிதப்படுத்தும் ஒரு பரம ரகசியம். ஆத்மஞானத்தை அடைந்தவன் எல்லாத் தேவர்களாலும் ஆராதிக்கப்படுகிருன். அவன் யோகிகள் கூட அடைய முடியாத பதவியை அடைந்துவிடுகிருன்.

---

## 3. மூன்று சோதனைகள்

இவ்வுலகில் ஒரு பொருளைப்பற்றிப் பூராவாக அறிவதற்கு மூன்று சோதனைகள் அல்லது வழிகள் இருக்கின்றன. அதாவது அதன் குத்து மதிப்பாலும், அதன் விசேஷ குணங்களாலும், அவ் விசேஷ குணங்களை ஆராய்வதாலும். முதல் வழி

யினுல் நாம் அறிய முயலும் பொருளின் பெயரை மட்டும் அறிகிருேம். இரண்டாவதினுல் அதன் உண்மையான இயல்பை உணர்கிருேம்; மூன்றுவதினுல் அப்படிப்பட்ட விசேஷ குணங்களை ஆராய்கிருேம். இரண்டாவது சோதனைப்படி ஒரு பொருளின் விசேஷ குணங்கள் அவ்யாப்தியாகிய குற்றங்களுக்கு அகப்படக் கூடாது. (ஒரு பொருளை விவரிப்பதில் அதன் ஒரு பாகத்தைச் சேர்க்காமல் விடுவது அவ்யாப்தி) அதோடு அதிவியாப்தி (மிகை படக் கூறல்)யும் அசம்பவமும் கூடாது. இவ்வாறு குணங்கள் மற்றென்றில் இருக்கக்கூடாது.

குணங்கள் ஒரு இனத்தில் ஒரு பகுதியில் மட்டும் இருந்து மற்றவைகளில் இல்லாவிடில் அது அவ்யாப்தியாகும். உதாரணமாக பசு பழுப்பு நிறமாக இருக்கிறது. இங்கு பசு என்னும் பொருள் அவ்யாப்தி என்னும் குற்றத்துட்படும். ஏனெனில் பழுப்பு நிறம் என்பது பசுக்களில் ஒரு வகுப்புக் குரியதே தவிர எல்லாப் பசுக்களுக்கும் அல்ல. ஆகவே இவ்வாறு விவரிப்பதால் மட்டும் பசுவைச் சரியாக அறியமுடியாது.

குறிக்கப்பட்ட குணங்கள் வேறு பொருள்களிலும் காணப்பட்டால் அது அதிவியாப்தியாகும். உதாரணம் பசுக்கள் நாற்கால் பிராணிகள். இங்கே பசுக்கள் மட்டுமின்றி வேறு மிருகங்களும் நான்கு கால்கள் உடையனவே. ஆகவே இது மிகைபடக் கூறலாகும்.

கூறப்பட்ட குணங்கள் அப்பொருளுக்கு இல்லாமல் போனுல் அது அசம்பவமாகும். உதாரணம் பசு ஒற்றைக் குளம்புடையது. எல்லாப் பசுக்களுக்கும் இரட்டைக்குளம்பே, ஒற்றையல்ல, ஆகவே அசாத்தியமானது.

இக்குற்றங்களுக்கு உட்படாததெனில் அதன் குணங்கள் வேறென்றுக்கும் பொதுவல்ல. உதா

ரணம் பசுவுக்கு கழுத்தும் அதன் கீழ்தொங்கு சதையும் முதுகும் கொண்டையும் உண்டு. இவ் விசேஷங்கள் மாடுகளுக்கு மட்டுமே உண்டு.

---

## 4. மூன்று விதமான வரையறுப்பு விளக்கம்

ஒரு பொருள் மூன்று விதங்களில் வரையறுத்து விளக்கப்படலாம்.

(1) அதை மற்றவற்றிலிருந்து வேறுபடுத்துதல் (வ்யவர்த்தக லட்சணம்)

(2) அதன் வெளிப்படையான குணங்களைச் சுட்டிக்காட்டுவது (தடஸ்த லட்சணம்)

(3) அதன் முக்கிய இயல்பை விவரிப்பது (ஸ்வரூப லட்சணம்)

உதாரணமாக ஒரு குறிப்பிட்ட வீடு பின் வருமாறு வரையறுக்கப்படலாம்.

1. அது வேறொரு வீட்டுக்கு வடக்கில் உளது.

2. காக்கை இப்போது உட்கார்ந்திருக்கும் வீடு.

3. அது நான்கு மாடிகள் உள்ளது.

இதுபோல் பிரம்மம் அல்லது ஆத்மாவும் பின்வருமாறு வரையறுக்கப்படலாம்.

1. ஆத்மா அனாத்மா (ஆத்மா அல்லாதது) னின்று வேறுபட்டது. (வ்யவர்த்தக லட்சணம்)

2. ஆத்மா இவ்வற்புத பிரபஞ்சத்தின் அடிப் படைபோல் தோன்றுவது (தடஸ்த லட்சணம்)

3. ஆத்மா முக்கியாம்சத்தில் சச்சிதானந்தம் (ஸ்வரூப லட்சணம்). ஆத்மா மறுபடி வேறு விதமாகவும் விளக்கப்படலாம்.

1. (a) ஆத்மா மூன்று சரீரங்களி (ஸ்தூல, சூட்சும, காரண) லிருந்தும் வேறுபட்டது.

(b) ஆத்மா பஞ்ச கோசங்கள் அல்லது ஐந்து கவசங்களிலிருந்தும் (அதாவது அன்னமய பிராணமய, மனோமய, விஞ்ஞானமய, ஆனந்தமயம்) வேறுபட்டது (வ்யவர்த்தக லட்சணம்)

2. ஆத்மா மூவகை நிலைகளுக்கும் (ஜாக்ரத நிலை, ஸ்வப்ன நிலை, சுஷுப்தி நிலை) சாட்சி போன்றது.

3. ஆத்மா முக்கியாம்சத்தில் சச்சிதானந்தம்.

---

## 5. ஞானயோக சாதனம்

இது நிர்க்குணத்யானம், ஓம் என்பதன் தியானம், பிரணவ உபாஸனை அல்லது பிரம்ம உபாஸனை ஆகிய வேறு பெயர்களாலும் கூறப்படும். ஒரு வருஷம் நிஷ்காம்யகர்மா செய்து சித்தத்தைப் புனிதமாக்கிக் கொள். சித்த சுத்தியின் பலன் விவேகமும் வைராக்கியமும் பெறுவதே. விவேகம், வைராக்கியம், ஷட் சம்பத், முமுக்ஷுத்வம் ஆகிய நான்கு யோக்கியதைகளை அல்லது சாதன சதுஷ்டயத்தைப் பெறு. பிறகு ஒரு சத்குருவை அணுகு. ஸ்ரவணம், மனனம், நிதித்யாஸனம் ஆகியவற்றைக் கடைப்பிடி. கவனமாகவும் இடைவிடாமலும் பன்னிரண்டு பிரமாண உபநிஷத்துக்களையும் யோகவாஸிஷ்டத்தையும் ஓது. 'தத் த்வம் அஸி' என்னும் மஹாவாக்கியத்தின் மெய்ப்பொருளை அல்லது லட்சியார்த்தத்தை விரிவாக முழுதும்

உணர்ந்து கொள். பிறகு, இடைவிடாமல் இருபத்து நான்கு மணி நேரமும் இந்த மெய்ப் பொருளைச் சிந்தனை செய். இது பிரம்ம சிந்தனை அல்லது பிரம்ம விசாரம். எந்த உலக எண்ணமும் மனதில் புகவிடாதே. வேதாந்த ஞானம் காரணத்தை ஆராய்வதாலேயே உண்டாய் விடாது. அது பிரமாரீட நியாயப்படி (புழுவும் குளவியும்) இடைவிடாத நிதித்யாஸனத்தாலேயே ஏற்படும். நீ ததாகாரம், தத்ரூபம், தன்மயம், ததீயதை, தத்லீனதை (ஒன்றுதல், சுபேதம்) ஆகியவற்றை படிப்படியாய் அடைவாய்.

வேதாந்த சாதனத்துக்கு எந்த ஆஸனமும் அவசியமல்ல. பேசும் போதும், நிற்கும் போதும், அமர்ந்திருக்கும் போதும், சாய்வு நாற்காலியில் சாய்ந்திருக்கும் போதும், பாதிப் படுத்திருக்கும் போதும், நடக்கும் போதும் உண்ணும் போதும் நீ தியானம் செய்யலாம்.

''அஹம் பிரம்மாஸ்மி'' அல்லது ''தத் த்வம் அஸி'' என்னும் மஹாவாக்கியங்களின் உண்மையான பொருளைச் சிந்திக்கும் பிரபாவத்தால் உனது ஸாத்வீக அந்தக்கரணத்திலிருந்து பிரம்மாகார விருத்தியை உற்பத்தி செய். நீ எல்லையற்றவன் என்று உணர முயற்சி செய்யும்போது, இந்த பிரம்மாகாரவிருத்தி உண்டாகிறது. இவ்விருத்தி அவித்யையை அழித்து, பிரம்ம ஞானத்தை உண்டாக்கி, தேத்தாங்கொட்டை, நீரிலுள்ள அழுக்கைப் போக்கி அவ்வழுக்கோடும் மண்ணோடும் தானும் அடியில் தங்கிவிடுவதுபோல், தானும் கடைசியில் அழிந்துவிடுகிறது.

---

## ஓம் என்பதில் தியானம்

உனது தியான அறைக்குள் செல். ஆரம்பத்தில் பத்ம, சித்த, ஸ்வஸ்திக, அல்லது சுக ஆசனத்தில் அமர். தசைகளைத் தளர்த்து. கண்களை மூடு. இரு புருவங்களுக்கு மத்தியிலுள்ள இடமாகிய த்ரிகூடியில் உன்பார்வையை ஏகாக்கிரப்படுத்து. பிரம்ம பாவனையோடு மனதுக்குள் ஓம் என்று திரும்பத் திரும்பக் கூறு. இந்த பாவனை மிகமிக இன்றியமையாதது. வெளிமனதை அடக்கு.

பின்வருமாறு திருப்பித்திருப்பிச் சொல்லிக் கொண்டு இடைவிடாமல் உணர்ச்சிகொள்.

| | |
|---|---|
| எங்கும் பரந்த ஒளி சமுத்திரமே நான் | ஓம் ஓம் ஓம் ! |
| எல்லையற்ற வஸ்து நான் | ஓம் ஓம் ஓம் ! |
| எங்கும் பரந்த எல்லையற்ற ஒளியே நான் | ஓம் ஓம் ஓம் ! |
| வ்யாபக பரிபூர்ண ஜோதிர்மய ப்ரம்மமே நான் | ஓம் ஓம் ஓம் ! |
| ஸர்வசக்தியுள்ளவன் நான் | ஓம் ஓம் ஓம் ! |
| ஸர்வக்ஞன் நான் | ஓம் ஓம் ஓம் ! |
| பரமானந்தம் நான் | ஓம் ஓம் ஓம் ! |
| ஸச்சிதானந்தம் நான் | ஓம் ஓம் ஓம் ! |
| ஸர்வபரிசுத்தம் நான் | ஓம் ஓம் ஓம் ! |
| ஸர்வ மகிமை நான் | ஓம் ஓம் ஓம் ! |

எல்லா உபாதிகளும் அழிந்துவிடும் இருதயக் கிரந்திகள் (முடிச்சுகள்) அறுக்கப்படும். மெல்லிய திரை (ஆவரணம்) கிழிக்கப்படும். சந்தேகமின்றி நீ சச்சிதானந்த நிலையில் அமர்வாய். நீ உயர்ந்த ஞானம், உயர்ந்த ஆனந்தம், உயர்ந்த சித்தி, வாழ்க்கையின் உயர்ந்த முடிவு ஆகியவற்றை அடைந்திடுவாய். ''பிரம்மவித் பிரம்மைவ பவதி'' நீ சுத்த சச்சிதானந்த வியாபக பரிபூர்ண பிரம்மமாவாய். ''நாஸ்தி அத்ர ஸம்சய,'' இங்கு அதைப் பற்றி ஐயமேயில்லை.

ஆத்ம தர்சனத்தில் கஷ்டமென்பதேயில்லை. ஜனகராஜனைப்போல் கண் இமைக்கும் நேரத்தில், விரல்களுக்கிடையில் ஒரு பூவைக் கசக்கும் நேரத்தில், அல்லது ஒரு பானைமீது ஒரு தானியத்தைப் போட்டு உருண்டு விழும் நேரத்தில் ஆத்ம ஞானத்தை யடையலாம். ஊக்கமாக, இடைவிடாமல் ஆழ்ந்த அப்பியாஸத்தை நீ செய்தல் வேண்டும். இரண்டு மூன்று ஆண்டுகளில் நீ வெற்றியடைந்தே தீருவாய்.

தற்காலத்தில் ''பேசும் பிரம்மங்கள்'' ஏராளமாயிருக்கின்றனர். அலங்காரப் பேச்சினுலும் சொல்மாரி பொழிவதாலும் ஒரு மனிதன் பிரம்மமாகி விடமாட்டான். இடைவிடாத, ஆழ்ந்த, ஊக்கமுள்ள சாதனம், சாதனம் மட்டுமே ஒரு மனிதனுக்கு நேரான அபரோக்ஷ பிரம்மஞானசித்தியை (ஸ்வானுபவம் அல்லது சாட்சாத்காரம்) அளிக்கும். அந்நிலையில் அவன் திடமான வெள்ளைச் சுவரைப் பார்ப்பதுபோலும் தனக்குப் பின்னுள்ள மேஜையைத் தொட்டுணர்வது போலும் திடமான பிரம்மத்தைக் காணக்கூடும்.

---

## 6. தத் த்வம் அஸி – மஹா வாக்கியம்

உத்தாலக முனிவர் தம் குமாரன் சுவேதகேதுவுக்கு ''தத் த்வம் அஸி'' மஹாவாக்கியத்தின் தத்வார்த்தத்தை ஒன்பது முறை உபதேசித்தார். இது சந்தோக்ய உபநிஷத் அத்தியாயம் VI பகுதி 7—ல் வருகிறது. உபநிஷத்திலுள்ள இச் சிறந்த மஹா வாக்கியத்தின் சரியான தத்வார்த்தத்தை தியானிப்பதால், ஜீவாத்ம பரமாத்ம அபேதம் உணர்ந்து அநுபவப்படும்.

சப்தத்துக்கும் அதன் அர்த்தத்துக்கும் உள்ள சம்பந்தம் சப்தத்தின் விருத்தி ஆகும். இந்த விருத்தி, சக்தி விருத்தி லக்ஷண விருத்தி ஆக இரு வகைப்படும். ஒரு சப்தத்தின் அர்த்தத்தின் அறிவை உண்டாக்கும்படி அச்சப்தத்தில் ஒரு சக்தி உளது. ஒரு சப்தத்துக்கும் அதன் அர்த்தத்துக்கும் இடையில் உள்ள சம்பந்தம் அதன் சக்தி விருத்தியின் மூலம் அறியும் அர்த்தத்தின் மூலம் சப்தத்துக்கும் அதன் அர்த்தத்துக்கும் உள்ள பரம்பரை சம்பந்தம் அச்சப்தத்தின் லட்சண விருத்தி ஆகும். சக்தி, விருத்தியின் மூலம் அறியப்படும். அர்த்தம் சப்தத்தின் வாச்யார்த்தமாகும். லட்சண விருத்தி மூலம் உணரப்படும் அர்த்தம் அச்சப்தத்தின் லட்சியார்த்தம் ஆகும்.

மூன்று விதமான சம்பந்தங்கள் இருக்கின்றன. அவைகளாவன (1) சமானுதி காரண்ய (இரு பெயரொட்டு) அல்லது ஒரே அடிப்படையுள்ள இரு சொற்களின் சம்பந்தம் (2) விசேஷண விசேஷ்ய (வரையறை விளக்கம்) அல்லது ஒன்றுக்கொன்று அடைமொழியாய் வந்து ஒரு பொது விஷயத்தைக் குறிக்கும் இரு சொற்களுக்கிடையிலுள்ள சம்பந்தம் லட்சிய லட்சண பாவம் (பொருள்படுவது) அல்லது இரு சொற்களுக்கிடையிலும் அவைகளால் குறிக்கப்படும் அபேத வஸ்துவுக்கும் உள்ள சம்பந்தம் (இங்கு ப்ரம்மம்).

ஸமானுதி காரண்யம் என்பது ஒரே அடிப்படையுள்ள இரு சொற்களுக்கிடையிலுள்ள சம்பந்தம். உதாரணமாக ''இதுவே அந்த தேவதத்தன்'' என்னும் வாக்கியத்தை எடுத்துக் கொள்வோம். ''அந்த'' என்னும் சொல் இறந்த காலத்தில் சம்பந்தப்பட்ட, தேவதத்தனைக் காட்டுகிறது. ''இதுவே'' என்பது நிகழ்காலத்தில் சம்பந்தப்பட்ட தேவதத்தனைக் காட்டுகிறது. இரண்டும்

தேவதத்தன் எனப்படும் ஒரே மனிதனைக் குறிக்கின்றன. அதே போல், ''நீ அதுவாய் இருக்கிறாய்'' (தத் த்வம் அஸி) என்னும் வாக்கியத்தில் ''அது'' தூரத்தில் இருப்பதை அறிவதைக் காட்டுகிறது. ''நீ'' என்பது அருகில் இருப்பதை அறிவதைக் காட்டுகிறது. இரண்டும் ஒரே சைதன்யத்தை அதாவது பிரம்மத்தைக் குறிக்கின்றன.

இரண்டாவது சம்பந்தம் விசேஷண விசேஷ்ய பாவம். ''இதுவே அந்த தேவதத்தன்'' என்னும் வாக்கியத்தில், ''அந்த'' என்பது முன்பு பார்த்த மனிதன் என்ற இறந்த காலத்து மனோ பாவமாகும். அவை வெவ்வேறு எண்ணங்கள் ஆயினும் அவை ஒன்றோடொன்று விசேஷமாகச் சேர்ந்து ஒரே பொது வஸ்துவைச் சுட்டிக் காட்டுகின்றன. இதே போல் 'நீ அதுவாய் இருக்கிறாய் என்னும் வேதவாக்கியத்தில் ''நீ'' என்பது அருகில் உள்ளது என்ற அறிவு. அவை வெவ்வேறு எண்ணங்களாயினும் ஒன்றுக்கொன்று விசேஷமாகிய ஒரே பொருளைக் குறிக்கின்றன.

மூன்றாவது சம்பந்தம் லட்சிய லட்சணபாவம். ''இதுவே அந்த தேவதத்தன்'' என்னும் வாக்கியத்தில் ''இதுவே'' என்பது ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் பார்க்கப் படுகிறவன். ''அந்த'' என்பதில் வேறொரு இடத்தில், வேறொரு உடையில் வேறொரு காலத்தில் பார்க்கப்பட்டவன் என்பதாம். இவை இரண்டும் முழுதும் ஒன்று என்று கொள்ள முடியாது. ஆகவே அவற்றை சமமாக்கும்படி, நாம் நிலையற்ற விசேஷணங்களை நீக்கிவிட்டு அந்த மாறுபாடுள்ள விசேஷணங்களையுள்ள மனிதனின் அபேதத்தை நோக்க வேண்டும். அதேபோல் ''நீ அதுவாய் இருக்கிறாய்'' (தத் த்வம் அஸி) என்னும் வேத வாக்கியத்தில் எல்லாமுணர்ந்த வெளிப்படையாகத் தெரியாத ஆத்

மாவாகிய ''அதை'' சிற்றறிவுள்ள வெளிப்படையாகத் தெரியும் ஜீவனுகிய ''நீ'' யோடு சமானப் படுத்தும்போது, எல்லாமுணர்தல், சிற்றறிவு முதலிய ''அது'' வோடும் ''நீ'' யோடும் முறையே வழங்கும் அடைமொழிகளை நீக்கிவிட்டு, இரண்டுக்கும் பொதுவான சுத்த சைதன்யத்தை மட்டும் எடுத்துக் கொள்ளவேண்டும். ''அது'' ''நீ'' என்னும் சொற்கள் வேறு வேறு மனோபாவங்களைக் குறித்த போதிலும், அவை அடிப்படையான மெய்ப்பொருள் அல்லது ஒரே சைதன்யத்தைக் குறிப்பதாகவே கொள்ளவேண்டும்.

லட்சணங்கள் மூன்றுவிதம் (1) ஜஹலட்சணம். இதில் ஒரு வாக்கியத்தின் நேர் அர்த்தம் முழுதும் கைவிடப்பட்டு மறைமுகமான அர்த்தம் கொள்ளப் படுகிறது. உதாரணம் ''கங்காய்ராம் கோஷா,'' ''கிராமம் கங்கையின் மீது இருக்கிறது''. ''கிராமம் கங்கை மீது இருக்கிறது'' என்னும் நேர் பொருள் கைவிடப்பட்டு ''கங்கைக்கு அருகில்'' என்னும் மறைமுகமான பொருள் கொள்ளப்படு கிறது. கங்கைமீது எந்த கிராமமும் இருக்க முடியாது. கங்கையின் அருகில்தான் இருக்க முடியும். ''தத் த்வம் அஸி'' மஹாவாக்கியத்தை விளக்க இந்த லட்சணம் ஏற்றதல்ல, ஏனெனில் ''த்வம்'' பாதத்தின் லட்சியார்த்தமாகிய கூடஸ்த சைதன்யத்தை விட்டுவிட்டால், சாதகனுக்கு ஸ்வரூபம் இல்லை.

(2) அஜஹலட்சணம் :— இதில் ஒரு வாக்கியத்தின் நேர் பொருள் விடப்படாமல் விரிவாக்கப் படுகிறது. உதாரணமாக ''சிவப்பு ஓடுகிறது''. இங்கே ''குதிரை''யென்னும் சொல்லைச் சேர்த்து ''சிவப்புக் குதிரை ஓடுகிறது.'' என்று நாம் உணர வேண்டும். ஏனெனில் சிவப்பு என்பது குணம். அது ஓடமுடியாது. இந்த லட்சணமும் ''தத் த்வம்

அஸி'' மஹா வாக்கியத்தில் ஜீவப்பிரம்ம அபே தத்தை விளக்குவதற்கு ஏற்றதல்ல.

(3) ஜஹதஜஹ லட்சணம் :- இது பாக தியாக லட்சணம் என்றும் கூறப்படும். இதில் ஒரு வாக்கியத்தின் நேர் பொருளில் ஒரு பகுதி விடப் பட்டு மற்ருெரு ப கு தி நிறுத்திக் கொள்ளப்படு கிறது. உதாரணமாக '' இ து வே அந்த தேவ தத்தன் '' என்பதில் கால தேசங்களைப் பற்றிய தொடர்புகள் விடப்பட்டு, தேவதத்தன் எ ன் ற மனிதன் மட்டும் நிறுத்திக் கொள்ளப்படுகிருன். இதேபோல் ''நீயே அதுவாயிருக்கிருய்'' என்றும் பெரும் பழமொழியில், தூரம் அருகாமை, ஸர்வ ஞ்ருத்வம், கிஞ்சித்ருத்வம் முதலிய ''அதை''யும் '' நீ ''யையும் குறிக்கும் முரண்பாடான அ டை மொழிகள் விடப்பட்டு இரண்டுக்கும் பொதுவான சுத்த சைதன்யம் அல்லது பிரம்மம் நிறுத்திக் கொள்ளப்படுகிறது. இந்த லட்சணத்தை உப யோகிப்பதால்தான் இவ்வேத வ ா க் கி ய த் தி ன் மெய்ப்பொருள் பெறப்படுகிறது. இந்த லட்சணத் தைக் கையாளுவதால் ஜீவப்பிரம்ம அ பே த ம் விளக்கப்படுகிறது.

''அது நீயே'' அல்லது ''நீ அதுவே'' என் னும் வேத வாக்கியத்தில், ''அது'' எ ன் னு ம் சொல்லின் நேர் பொருள் மாயையும் அதில் பிரதி பலித்த பிர்ம்மமும் அவற்ருேடு மாயையின் அடிப் படையாகிய சுத்தப் பிர்ம்மமும் என்பதாம். ''நீ'' என்னும் சொல்லின் நேர்பொருள் அவித்யையும் அதில் பிரதிபலித்துள்ள ஆத்மாவும் அவித்யை யின் அடிப்படையான கூடஸ்தனும் என்பதாம். ''அது'' என்னும் சொல்லின் மெ ய் ப் பொ ரு ள் அல்லது கூடார்த்தம் சுத்தமான பிரம்மம் என்பதே. ''நீ'' என்பதன் மெய்ப்பொருள் அல்லது கூடார்த் தம் கூடஸ்தன் என்பது. மாயை அவித்யை ஆகிய

முரண்பாடான அடைமொழிகள் நீக்கப்பட்டு சத் சித் ஆனந்தம் என்றும் இயல்புடைய கூடஸ்தன் சத் சித் ஆனந்தமே இயல்பாயுடைய சுத்த பிரம்மத்தோடு ஒன்றுபடுத்தப்பட வேண்டியதாகிறது. நேர்முகமான சகஜஞானத்தால் இந்த அபேதத்தை உணர்பவன் மோட்சத்தை யடைகிறுன். அவன் ஜீவன் முக்தன். இதுவே உபநிஷத்துகளின் திடமான ஒரு மனப்பட்ட கூற்று.

அஸித்யையும் அதன் பின்னுள்ள சைதன்யமும் (அதிஷ்டான சைதன்யம் அல்லது கூடஸ்தன்), அபஞ்சீக்ருத பூதங்களின் சேர்க்கையான தனித் தனி சூட்சும சரீரமும் அதில் பிரதிபலிக்கும் ஞானமும் (சிதாபாஸன்) சிதாபாஸனின் தர்மங்களான சிற்றறிவு, சிறு சக்தி, கர்த்ருத்வ போகத்ருத்வங்கள் ஆகியவும் ஜீவனுடைய ஸ்வரூபமாகின்றன. "தத்" ஒருபாதம். "த்வம்" இன்னெருபாதம். ''அஸி'' மூன்ருவது பாதம். ''அஸி'' பாதம் ஜீவப்ரம்ம ஐக்கியத்தைக் காட்டுகிறது. த்வம் பாதத்தின் சப்தார்த்தம் (வாச்யார்த்தம்) ஜீவனுகும். த்வம் பாதத்தின் உட்பொருள் அல்லது லட்சியார்த்தம் கூடஸ்த பிரம்மமாகும். மாயையும் அதன் அதிஷ்டானமும் (சைதன்யம் அதாவது சுத்தப்ரம்மம்) எல்லா சூட்சும சரீரங்களின் தொகுப்பும் சூட்சும பூதங்களின் அபஞ்சீகிருதச் சேர்க்கையும், அதில் பிரதிபலித்த ஈஸ்வரன் அந்த ஈஸ்வரனின் தர்மமாகிய ஸர்வஞ்ருத்வமும் சர்வ சக்தித்வமும் ஆகிய ஈஸ்வரனின் ஸ்வரூபமாகின்றன. தத் பாதத்தின் சப்தார்த்தம் (வாச்யார்த்தம்) ஈஸ்வரன் தத் பாதத்தின் உட்பொருள் (லட்சியார்த்தம்) சுத்தப் பிரம்மமாகும். அஸி பாதத்தின் ஸ்வரூபம் கூடஸ்தனே பிரம்மம். பிரம்மமே கூடஸ்தன் என்னும் அறிவே கர்ம உபாதியுள்ளவன் ஈஸ்வரன், கார்ய உபாதியுள்ளவன் ஜீவன்.

குட ஆகாசமும் வீட்டு ஆகாசமும் குடம் வீடு என்ற உபாதிகள் காரணமாக வேறுபட்டபோதிலும், ஆகாசம் ஒன்றே. மண் பாத்திரம் கண்ணாடிப் பாத்திரம் ஆகிய வெவ்வேறு பாத்திரங்களில் திரி எரிந்தபோதிலும் வெளிச்சம் ஒன்றே. அரசனுக்குச் சேனையும் ஆட்டிடையனுக்கு ஆடுகளும் இருந்தபோதிலும், இருவரும் மனித இனத்தைச் சேர்ந்தவர்களானதால் ஒன்றே. பித்தளைக் குடத்திலுள்ள கங்கையும், பானையிலுள்ள கங்கையும் பாத்திரங்கள் வெவ்வேறானபோதிலும் ஒன்றே. சமுத்திரமும் நீர்த்துளியும் அளவில் வேறுபட்டாலும் தண்ணீர் என்ற திருஷ்டி கோணத்தில் பார்க்கின் ஒன்றே. ஒரே மனிதன் அவனது தந்தைக்கு மகனாயும், பாட்டனுக்குப் பேரனாயும் தந்தை பாட்டன் என்ற உபாதிகள் வேறுபட்டாலும், மனிதன் ஒருவனே. இவற்றைப் போலவே ஈஸ்வரன் ஜீவன் ஆகிய இருவரிலும் சுத்த சைதன்யம் ஒன்றேயானதால், மாயமான உபாதியையும் தர்மங்களையும் நீக்கிவிட்டால் பிரம்மத்துடன் அபேதமே. ஆகவே நீ ''நான் பிரம்மம்'', ''பிரம்மமே நான்'' என்று உறுதியான தீர்மானம் கொண்டு இடைவிடாத ஆழ்ந்த தியானத்தால் இதில் சித்திபெறவேண்டும். இதனால் எல்லாத் துக்கங்களும் முடிவடைந்து, நீ பரமானந்தத்தையும் ஜனன மரணங்களிலிருந்து நிவர்த்தியையும் அடைந்திடுவாய்.

---

## 7. அத்வைதமும் விசிஷ்டாத்வைதமும்

இரு சம்பிரதாயங்களும் அத்வைதம் அதாவது இரண்டற்ற வஸ்துவையே போதிக்கின்றன. சாங்க்யர்களுடைய பிரகிருதி புருஷனைப்போல் பல அடிப்படையான கொள்கை வேறுபாடுகள் இல்லை. ஒரே பரம்பொருள் உளது. எனினும் சங்கரர் போதித்த

அத்வைதம், கண்டிதமும் வரையறையற்றது. இராமாநுஜருடைய கோட்பாடு விசேஷமுடைய அத்வைதம். அதாவது ஒரு வேறுபாடுடைய அத்வைதம். அதனால் அது விசிஷ்ட அத்வைதம் எனப்பட்டது.

சங்கரர் கொள்கைப்படி இருப்பது எதுவும் பிரம்மமே. அப்பிரம்மம் பூரணமான ஸஜாதீயமான தால் (ஒரே இயல்புடையது) வேறுபாடுகளும் பல் வேறு தன்மைகளும் மாயீகமானவையாம்.

இராமாநுஜர் கொள்கைப்படி இருப்பது எது வும் பிரம்மமே; ஆனால் பிரம்மம் ஒரே இயல்புடைய தல்ல. தனக்குள் பல்வேறு தன்மைகளை அடக்கிக் கொண்டிருப்பதால் பல வேறுபாடுகள் கொண்ட உலகமாக உண்மையில் வெளிப்படுத்திக் கொள் கிறது.

இருப்புடன் கூடிய பல்வேறு ஸ்தூல உருவங் களும் ஜீவாத்மாக்களும் கூடிய உலகம் பொய்யான மாயையல்ல. பரமாத்மா குடியிருக்கும் சரீரமே. சங்கரருடைய பிரம்மமோ சரீர சம்பந்தமற்ற, குணாதீதமான வஸ்துவல்லாத ஒரே இயல்புள்ள கருத்து மாத்திரமே; அது, பொய்யான மாயை யோடு சம்பந்தப்பட்டே தோற்றமுள்ள ஈஸ்வரனு கிறது; கண்டிப்பாக கூறுமிடத்து சங்கரரது தோற்றமுள்ள கடவுளே, அவரது ஈஸ்வரனே போலி போன்றது. ராமாநுஜரது பிரம்மமோ வெனில், முக்கியத்தில் ஸர்வ சக்திமானாய், அவரது சக்தியால் நிறைந்து உயிர்த்திருக்கும் உண்மையான உலகத்தை ஊகத்தோடு ஆளும் தோற்றமுடைய கடவுள். இவ்வாறு பிரம்மத்துக்கும் ஈஸ்வரனுக் கும், பரம நிர்க்குணம் என்றும் அபரம் சகுண பிரம்மம் என்றும் வேற்றுமைக்கு இடமேயில்லை.

## ஜீவாத்மா

சங்கரரது ஜீவாத்மா மாயை காரணமான உண்மையற்ற உபாதிகளால் வரையறுக்கப்பட்ட பிரம்மமேயாகும். ஆனால் ராமாநுஜரின் ஜீவாத்மா உண்மையிலேயே தனிப்பட்டது; அது பிரம்மத்தி னிடமிருந்தே உண்டாகி ஒருபோதும் பிரம்மத்தை விட்டு வெளியில் இல்லை என்றாலும், அது தனி இருப்போடு கூடி எப்போதும் தனியாத்மாவாக இருக்கும்.

---

## மோட்சம் அல்லது விடுதலை

சங்கரர் உடன்பாடாவது விடுதலை என்பது ஆத்மா பிரம்மத்தினின்று வேறுபட்டது என்ற தவறான கொள்கையை ஒழிப்பதன் மூலம் ஜீவாத்மா பிரம்மத்தோடு இரண்டறக் கலத்தலாம்.

ராமாநுஜர் கொள்கைப்படி, மோட்சம் என்பது ஆத்மா உலக வாழ்க்கைத் துன்பங்களைக் கடந்து ஒருவகையான சுவர்க்கத்தை அடைந்து சதாகாலமும் தங்குதடையற்ற ஆத்மானந்தத்தில் இருப்பதே. ராமாநுஜர் உயர்வான பிரம்மம், கீழ்ப் பட்ட பிரம்மம் என்று வேறுபடுத்தாததால் உயர்ந்த ஞானம் கீழ்ப்பட்ட ஞானம் என்ற வேறு பாடும் அவருக்குச் சம்மதமல்ல; உபநிஷத்போதனை இரண்டுபட்டதல்ல; முக்கியத்தில் ஒன்றே, அது ஞானமடைந்த பக்தனை ஒரு பலனுக்குத்தான் கொண்டுசெல்லும்.

---

## 8. இந்த அஹம் என்பது யாது?

நான் அல்லது தான் என்றும் பாவம் அல்லது ஆத்மாபிமானம் அல்லது வடமொழிப்படி

அகங்காரம் என்பது அக்ஞானம் அல்லது பிரகிருதியினிடமாகப் பிறந்த தன்னை நிலைநாட்டும் தத்துவம் அபிமானம் என்பதுதான் என்பதே. கர்வம் அகம்பாவமே.

இந்த அஹம்பாவத்துக்கு விதை வேற்றுமை காணும் அறிவு அல்லது பேதபுத்தியே. இந்த நான் என்னும் எண்ணமே கடவுள் அல்லது ஆத்மாவினிடமிருந்து தனிப்பட்ட தன்மையாகிய எண்ணத்தைச் சிருஷ்டித்துளது. இந்த அஹம் என்பதே மனிதனது துன்பங்களுக்கும் ஜனன மரணங்களுக்கும் மூலகாரணம்.

இந்த நான் என்பதே உடல், உள்ளம், பிராணன், புலன்கள் ஆகியவற்றோடு தன்னை ஒன்று படுத்திக் கொள்கிறது. அஹங்காரம் இருக்கும் இடங்களிலெல்லாம் மமகாரம் (எனது), தன்னலம் விருப்பு வெறுப்புகள், காமம், கோபம், பேராசை, கபடம், கர்வம், பொறாமை, மதிமயக்கம், இறுமாப்பு, தற்பெருமை, துடுக்கு, வாசனைகள், திருஷ்ணை அல்லது பேரவாக்கள் விருத்திகள் அல்லது சங்கல்பம், உலக வாழ்வில் பற்றுதல் (அபிநிவேஷம்) காரணத்வம், கர்த்தா போக்தா ஆகியவை குடிகொண்டிருக்கின்றன.

இந்த அஹம்பாவத்தின் இயல்பைப்பற்றி நீ மிகத்தெளிவாக அறிதல் வேண்டும். அப்போது தான் அதை ஒழித்துக் கட்டலாம். அஹம்பாவத்தைக் கொல்வது என்பது மனத்தைக் கொல்வதே தான். எண்ணம், ஆசைகள், பேரவாக்கள், மமகாரம், சுயநலம், பொறாமை, கர்வம், காமம் ஆகியவற்றை அழிப்பது என்பது மனது அல்லது ஆத்மாபிமானத்தை அழிப்பதேயாம்.

இந்திரியங்களைக் கட்டுப்படுத்துவதுகூட மனம் அல்லது அஹம்பாவத்தை அழிப்பதேயாம்.

இந்த அஹங்காரம் சூட்சும ரூபத்தைக் கொள்கிறது. சூட்சுமமான அஹங்காரத்தை (ஆத்மானத்தை)ப் போல் ஸ்தூல அஹங்காரம் அவ்வளவு தீமையானதல்ல. ஸ்தாபன அஹங்காரம் ஒரு சூட்சும வடிவான அஹங்காரமே. ஒரு மனிதன் தன்னை ஒரு ஸ்தாபனத்தோடு ஒன்றுபடுத்திக் கொண்டு அந்த ஸ்தாபனம் அல்லது சமயத்தினிடம் பற்றுக் கொள்கிறான். அவனுக்குத் தாராள மனப்பான்மையில்லை.

இந்த ஆத்மாபிமானம் வேலைசெய்யும் விதம் மிக மர்மமானது. அதன் பலவகையான வேலைகளைக் கண்டு கொள்வது கஷ்டம். அதன் வேலையை உணருவதற்கு மிக சூட்சுமமான கூர்ந்த அறிவு அவசியமாகிறது. நீ மௌனமாக தினமும் தற்சோதனையை அப்யஸித்தால் அது செய்யும் மர்ம வேலைகளைக் கண்டறியச் சாத்தியமாகும்.

இந்த அஹங்காரத்துக்குத் தான் பிறந்த இடம், ஜில்லா, அந்த ஜில்லாவின் மக்கள், தனது தாய்மொழி, தனது சுற்றத்தார் நண்பர், தான் உண்ணும் உடுக்கும் விதம் ஆகியவற்றின் மீதே பற்றுதல் இருக்கும். அவனுக்குச் சொந்தமான பாரபட்சங்களும் இச்சைகளும் இருக்கின்றன. மற்றவர் உண்ணும் விதம் உடுக்கும் விதம் முதலியவற்றை வெறுக்கிறான்.

இந்த அஹங்காரமானது மற்றவர்கள் மீது அதிகாரத்தையும் செல்வாக்கையும் செலுத்த விரும்புகிறது. அவன் பட்டங்கள், மரியாதை, பதவி, கௌரவம், நல்வாழ்வு, வீடு வாசல் மனைவி மக்கள் ஆகியவற்றை விரும்புகிறான். அவன் தன்னை உயர்த்திக் கொள்வதையே விரும்புகிறான். மற்றவரை அதிகாரம் செலுத்தி ஆள விரும்புகிறான். அவனது குற்றங்களை யாராவது எடுத்துக் கூறினால் அவனது தற்பெருமையால் கோபமடை

கிறுன். யாராவது தன்னைப் புகழ்ந்தால் மகிழ்ச்சி கொள்கிறுன். இந்த அஹங்காரம் ''எனக்கு எல்லாம் தெரியும்'' என்று சொல்லிக் கொள்கிறது. ''அவனுக்கு ஒன்றுமே தெரியாது. நான் சொல்வதுதான் சரி, அவன் சொல்வது முழுதும் தப்பு. அவன் எனக்குத் தாழ்ந்தவன். நான் அவனுக்கு மேற்பட்டவன்'' என்கிறுன். அவன் மற்றவர்களைத் தன் வழிகளையும் கொள்கைகளையும் பின்பற்றும்படி கட்டாயப்படுத்துகிறுன்.

நீ தற்சோதனையையும் சுய ஆராய்ச்சியையும் தொடங்கினுல், இந்த அஹங்காரம் திருடனைப் போல் பதுங்குகிறது. இது உனது பிடிப்பினின்றும் அறிவிலிருந்தும் நழுவும். நீ எப்போதும் விழிப்பாயும் எச்சரிக்கையாயுமிருக்க வேண்டும். ஜபம், கீர்த்தனம், தோத்திரம், பக்திமூலம் பகவானது அருளுக்கு நீ பாத்திரனுனுல், நீ இந்த அஹங்காரத்தை எளிதில் கொல்லலாம். பகவத் கிருபையால்தான் உனது சரணுகதி பூரணமாகும்.

இந்த அஹங்காரம் சர்வவியாபக அகங்காரத்தில் உருகி ஒன்றுனுல், நீ பகவானேடு ஐக்கியத்தை அல்லது ஆத்மானந்தத்தை அடைவாய். இந்த சிறிய அஹங்காரத்தை அழிப்பதன் மூலம் நீ வாழ்க்கையின் லட்சியத்தை அடைந்து நித்தியானந்தத்தை நுகர்வாயாக!

---

## 9. ஞானமிருதம்

### I

மேகக்கூட்டத்தில் மின்னல் வீசுவதுபோல், உலக இன்பங்கள் நிலையுள்ளவையல்ல. பழுக்கக் காய்ந்த இரும்பின்மீது ஊற்றின நீர்த்துளிபோல்,

ஆயுள் எந்த நிமிஷத்திலும் முடிந்துவிடும். பாம்பின் வாய்ப்பட்ட தவளை, தன் பற்களால் அப்பாம்பின் சதையை உண்ண விரும்புகிறது. அதேபோல் காலமாகிய பாம்பினுல் விழுங்கப்பட்டும், உலகத்து மனிதர்கள் நிலையற்ற உலக விஷயங்களை அநுபவிக்க ஆதங்கம் கொண்டுள்ளனர்.

இரவும் பகலும் மனிதன் தேகத்தின் பொருட்டு வெகு கஷ்டத்துடன் பற்பல வேலைகளைச் செய்கிருன். ஆனுல் தேகமோ, தான் அல்லது ஆத்மாவினின்று வேறுபட்டது. ஆகவே ஈண்டு ஆத்மாவுக்கு என்ன இன்பம் கிடைக்கக்கூடும்?

இவ்வுலகில் தந்தைமார், தாய்மார், உடன் பிறந்தோர், மனைவிமார், சுற்றத்தார் நண்பர் ஆகியோரைச் சந்திப்பதும் நிலையற்றது. அது மக்கள் நீர்பருக ஒரு இடத்தில் கூடுவதுபோல் ஒரு நதியில் இருமரத்துண்டுகள் சந்திப்பதைப்போல் ஆகும்.

செல்வம் நிழலைப்போல் மாறுவது. கடலின் அலைகளைப்போல் இளமை நிலையல்ல. ஸ்திரீ சங்கத்தால் விளையும் இன்பம் கனவைப்போன்றது. வாழ்க்கை குறுகியதும் நிச்சயமற்றதுமானது. எனினும் மானிடர் இவற்றில் எத்தகைய பற்றுக் கொண்டிருக்கின்றனர்· மாயை மர்மமானது! மோஹம் அற்புதமானது!.

உலக வாழ்க்கையின் போக்கு கனவு போன்றது. அது எப்போதும் வியாதி முதலியவற்ருல் பீடிக்கப்பட்டுள்ளது. அது ஆகாயக் கோட்டை போன்றது. மூடன்தான் அதைப் பின்பற்றி ஓடுவான். ஒவ்வொரு சூரியோதய அஸ்தமனத்தாலும் ஆயுள் தேய்ந்து வருகிறது. மற்றவர்கள் மரிப்பதையும் மூப்படைவதையும் நீ பார்த்துக் கொண்டிருந்தாலும், உலக வாழ்வின் வீண் பெருமையாகிய உனது சொந்தக் கனவிலிருந்து நீ விழித்துக்

கொள்வதில்லை. ஒரு நாளைப்போல் இன்னொரு நாள், ஒரு இரவைப்போல் இன்னொன்று. எனினும் மூடமனிதன் உலக இன்பங்களைப் பின்பற்றியவனாய் காலஞ்செல்வதைக் காண்பதில்லை. ஆ அந்தோ! சுடாத பானையில் வைத்த நீரைப்போல் ஆயுள் ஒவ்வொரு கணமும் தேய்கிறதே. பகைவரைப் போல் நோய்கள் உடலைத் தாக்குகின்றன. விருத்தாப்பியம் உன்னைத் துன்புறுத்துகிறது. மரணம் உன்னை விழுங்க எப்போதும் காத்திருக்கிறது. அது உன்னை விழுங்க, காலத்தை எதிர் நோக்குகிறது.

## II

ஒருவன் ''நான் உலக முழுதும் பெயர்பெற்ற விஞ்ஞானி; நான் தொண்டை காதுநோய்களின் நிபுணன்; நான் பெயர்பெற்ற பாடகன்'' என்று கூறும்போது, அவன் தனது தேகமேதான் என்ற எண்ணத்தில் கூறுகிறான். இவ்வாறு மனிதர்கள் புழுபூச்சிகளுக்கு உணவாவதும் மண்ணோடு மண்ணாகக்கூடும் தேகத்தையே தாங்களாக நம்புகின்றனர். சர்மம், எலும்புகள், சதை, சுரப்புகள், சிறுநீர், சுக்கிலம், இரத்தம் போன்றவைகளாலானதும் எப்போதும் மாறுவதும் தளர்வதுமான தேகம், ஒருபோதும் ஆத்மாவாக மாட்டாது. ''நான் இந்தச் சரீரம்'' என்ற எண்ணம் அவித்யை அல்லது அஞ்ஞானம் எனப்படும். ''நான் இந்தச் சரீரம் அல்ல, நான் எப்போதும் ஆனந்தமயமாய் நித்தியமாய் எங்கும் வியாபகமான ஆத்மாவே''— இது ஞானம் எனப்படும். ஆத்மஞானம் அஞ்ஞானத்தை அழிக்கிறது. நாம் முடிவான முக்தியை அடையவிரும்பினால் நாம் எப்போதும் பிரம்ம ஞானத்தை அடைவதற்கு முயற்சி செய்ய வேண்டும்.

ஆசை, காமம், பகை, பொருமை, பேராவல் ஆகியவை ஞானத்துக்குச் சத்துருக்கள். அவற்றின் பிராபல்யத்தால் மனிதர்கள், தந்தைமார், சகோதரர், நண்பர் முதலியவர்களைக்கூடக் கொன்று விடுகின்றனர். எல்லா மனக்காய்ச்சலுக்கும் மூலம் காமமே. காமம் நற்குணத்தை நாசமாக்கும். ஆகவே காமத்தைக் கைவிட்டு சுகமாயிரு. இவ்வாறே கோபமும் நமது பெரிய சத்துரு. திருப்தியே சுவர்க்கலோக மலர்ப்பந்தல். சாந்தம் வேண்டியதை யளிக்கும் கல்பக விருட்சம். ஆசை பெருங்கடல். க்ஷமை அல்லது மன்னிக்கும் இயல்பை வளர்ப்பவனுக்கு பகையில்லை.

## III

புத்தியில் ஆத்மா பிரதிபலிப்பதே ஜீவன் எனப்படும். பிரம்மம் அல்லது நித்யவஸ்து உண்மையில் புத்தி முதலியவற்றிற்கு சாட்சி மாத்திரமே. சர்வத்திற்கும் ஆத்மாவான பிரம்மத்தினிடம், இவ்வுலகம் முழுதும் அஞ்ஞானவாசத்தால் சுமத்தப்பட்டுள்ளது. அப்பிரம்மம் சர்வவியாபகமாய் எல்லையற்று மிக சூக்ஷ்மமாக இருப்பதால் உய்த்துணரக் கூடிய பொருள்! அவர் மாசுமறுவற்றவர், புனிதமானவர், அவர் பரமாத்மா.

பல்வேறு கட்டைகளின் உருவ பேதத்தால் நெருப்பு பற்பல உருவங் கொண்டாலும் நெருப்பு ஒன்றே போல், அறிஞர் கண்களில், பஞ்சகோசங்கள் போன்றவற்ருல் வேறுபடினும், ஒன்றே புலப்படும்.

ஒரு பரிசுத்தமான ஸ்படிகம் வர்ணமுள்ள வஸ்துவோடு சேர்ந்து இருப்பதால் தானும் வர்ணமுடையதாகத் தோன்றுவதுபோல், பிரம்மமும் சேர்ந்துள்ள வஸ்துவால் வேறுபாடுடையதுபோல் தோன்றுகிறது.

# IV

தேகம், புலன்கள், பிராணன், புத்தி ஆகிய வற்றினின்று வேறுபட்டதாய், சுயப்பிரகாச முள்ள தாய், மாறுதலற்றதாய், நித்தியமாய், அழிவற்ற தாய், சுத்தமானதாய், உருவமற்றதாய், தான் அல்லது ஆத்மா விளங்குகிறது. தேகம், இந்திரி யங்கள், பிராணன் ஆகியவற்றினின்று ஆத்மா வேறுபட்டது என்று நீ உணராத வரையில், நீ உலக துக்கங்களில் உழன்று மரணத்துக்கு ஆட் பட்டு இருக்கவேண்டியதுதான். ஆகவே உனது இருதயத்தில் எப்போதும் தேகத்தினின்று தனிப் பட்டதாக ஆத்மாவைத் தியானம் செய். புத்தி முதலியவற்றினின்று நீ வேறுபட்டவன் என்று அறிந்து துயரத்தை விடு. கர்மங்களின் பலனுக நீ அடைந்துள்ள இப்பிறப்பில் பிராரப்த கர்மங்களே இன்பமானவையாயினும் துன்பமானவையாயினும் உன் வழி வருவதைச் செய்து கழித்துக் கொண்டு வந்தால், அப்படிப்பட்ட கர்மாவினுல் நீ மலின மடைய மாட்டாய். வெளிப்படையாக நீ உன் னேக் கர்த்தாவாகக் காட்டிக்கொண்டாலும், உனது ஆந்திரீக இயல்பின் புனிதத்தின் காரண மாய், நீ கர்மாவால் தாக்கப்பட மாட்டாய்.

நீங்கள் யாவரும் பூரணமான மனே வைராக் கிய நிலேயை அடைவீர்களாக! நீங்கள் யாவரும் அவரவர்களது வர்ணுஸ்ரம தர்மப்படி விதிக்கப் பட்ட கடமைகளே நிறைவேற்றிக்கொண்டே, பூரணத்துவநிலே அல்லது முடிவான மோட்சத்தை யடைவீர்களாக! நீங்கள் யாவரும் கர்மத் தளேகளி லிருந்தும் அதன் பலனுக ஜனன மரணம், சம்சார சக்கரம் ஆகியவற்றினின்றும் விடுபட்டு, தானுகக் கனிந்து மரத்தினின்று விழும் நெல்லிக் கனியைப் போல் மோட்சத்தை அடைவீர்களாக !

## வேதாந்தமும் பாமர மக்களும்

வேதாந்தம் ஹிந்து தத்துவ சாஸ்திரத்தின் ஆத்மீக ஏணியின் உச்சிப்படியாகும். பாமர மக்களை ஓரளவில் வேதாந்த உச்சிக்குக் கொண்டுவர வேண்டும் என்னும் துடிப்பினால், சில மிதமிஞ்சின உற்சாகங்கொண்ட மதத்தலைவர்கள் கர்மம் பக்தி யாகிய முதற் படிகளைப் புறக்கணித்து விடுகிறார்கள். இதன் தவிர்க்கமுடியாத பலனாகப் பாமர மக்கள் உச்சியையும் அடைவதில்லை. முதல் நிலைகளின் க்ஷணதர்சனத்தைக் கூடக் காண்பதில்லை. பாமர மக்கள் அத்வைதக் கருத்தின் சூட்சுமத்தை யாவது முடிவான அர்த்தத்தையாவது உணர்வதில்லை. அதை, தினசரி வாழ்க்கையில் கடைப் பிடிப்பதும் இல்லை. மதவிஷயத்தில் மனம் கொண்ட மக்களில் மிகமிகச் சிலரே வேதாந்தத்தை வழக்குக்குக் கொண்டு வருகின்றனர் என்பது சாதாரணமாக அநுபவத்தில் வந்த விஷயம்; பெரும்பாலோர் புத்தியினால் அங்கீகரிப்பதற்குமேல் செல்வதில்லை. ஒரு சாதகன் ஒரு குறித்த சாதன மார்க்கத்தைக் கடைப்பிடித்த பின்பே அவனுக்கு உயரிய கருத்துக்கள் உபதேசிக்கப்படவேண்டும் என்று சாஸ்திரங்கள் விதித்தது சும்மாவல்ல. மிகச் சிலரே அக்கடுமையான உண்மைச் சாதனத்துக்கு அருகர்களானதால், வெகு சிலரே வேதாந்தத் துக்குப் பக்குவமானவர்கள். பாமர மக்கள் எளிதில் உணரத்தக்க பக்தியையும் கர்மாவையும் அவர்களுக்குப் போதிக்கவேண்டும். சுவாமி ராமதீர்த்தர் வேதாந்தத்தைப் போதித்ததற்காக வருந்தினாரென்று சொல்லப்படுகிறது. ஏனெனில் தம்முடைய மகத்தான முயற்சிகளுக்கு ஏற்ற கணிசமான பலன் கிடைக்கவில்லையென்று அவர் உணர்ந்தார். சுவாமி விவேகானந்தர் அவரது ஆயுட்காலத்திலேயே பக்தியைப் புறக்கணித்து

வேதாந்தத்தை மிதமிஞ்சி வற்புறுத்தியதற்காகக் கடுமையாகக் கண்டிக்கப்பட்டார். ஜனங்கள் உண்மைகளை, உறுதியாய்த் தெளிவாகத் தெரியும் உண்மைகளைத் தாங்கள் எளிதில் விளக்கிக் கொள்ளக்கூடிய விவகாரத்தில் கொண்டுவரக்கூடிய கொள்கைகளை, வாழ்க்கையின் விடுகதைகளை விடுவிக்கக்கூடிய எளிய வழிகாட்டிகளை, கடவுளின் அண்மையை அறியக்கூடிய நிதர்சனமான புத்திக் கெட்டும்படியான மார்க்கங்களை விரும்புகிறார்கள். வேதாந்தம் என்பது புத்தியினால் வாதஞ் செய்யும் மாயாவிகளுக்கும் சாரமற்ற பண்டிதர்களுக்குமே உரிய விஞ்ஞானம் என்று அவர்களுக்குப் படுவதால் அப்போதனைகள் வறண்ட மணலில் பெய்யும் மழையைப்போல் அவர்கள் மனதில் நிற்பதில்லை. பிரயோகமற்ற ஞானத்தைப் படிப்படியாக அவர்கள் முன் அளப்பதைவிட விவகாரத்துக்குரிய ஒரு அணுவளவு குறிப்பையே அவர்கள் மேலாகக் கருதுவார்கள்.

வேதாந்தம் உயர்ந்த கருத்துக்கள் அடங்கியது என்பதிலும், அவை உணரப்பட்டு தினசரி வாழ்க்கையில் கைக்கொள்ளப்படவேண்டும் என்பதிலும் சந்தேகமில்லை. ஆனால் அவற்றிற்குச் சமமான உயர்வும் தொடர்பும் உள்ள உண்மைகளை ஒருவர் புறக்கணித்தல் வேண்டும் என்பதற்கு அது சாக்காகாது. கீதை இவ்வெவ்வேறு மார்க்கங்கள் ஒன்றையொன்று பூர்த்தி செய்பவை என்பதையும் கர்மம், பக்தி, ஞானம் என்பவை போட்டிக் கொள்கைகளோ மாற்றுக் கொள்கைகளோ அல்ல. ஒரே லட்சியத்தை அடைய வெவ்வேறு வழிகள் என்பதையும் ஒப்பற்ற விதத்தில் விளக்கிக் காட்டியிருக்கிறது. ஆகவே வேதாந்தத்தை அதிலும் முக்கியமாக அத்வைத வேதாந்தத்தை காலதேச வர்த்தமானத்தைக் கவனிக்காமல், பிரசாரம்

செய்வது சல்லடையில் நீரைக் கொண்டு போதல் போலாகும். வேதாந்தத்தை கண்டவர்களுக்குப் போதிக்கக் கூடாது. முழுவிவகாரமும் ஒரு வட்ட மான தொன்னையில் சதுரமான முளையைப் புகுத்து வது போலாகும்.

ஒரு உண்மை எவ்வளவு மகத்தானதோ அவ் வளவு அதைத் தவறுதலாகச் செயல் படுத்துவதும் தவறுதலாக அர்த்தம் கொள்வதும் கூட அதைச் சுற்றி முளைக்கின்றன. எவ்வாறு யோசனையற்ற அரசியல் வாதிகள் தங்கள் சுயநல ஆசைகளை வற் புறுத்தும் பொருட்டு சத்யாக்ரஹம் என்னும் ஆயுதத்தைத் துஷ்பிரயோகம் செய்து வருகிறார் களோ, எவ்வாறு எச்சரிக்கையற்ற காதலர்கள் நிஷ் காமியமான அன்பு என்னும் கவசத்தில் மிக வருந் தத்தக்க விபத்தை உண்டாக்குகிறார்களோ, அவ் வாறே பல கோணபுத்தியுடைய மனிதர்கள் தங்கள் சொந்த லட்சியங்களுக்காக வேதாந்தமாகிய ஆயு தத்தைப் பயன் படுத்திக்கொள்கிறார்கள். வேதாந் தம் என்னும் கூரிய கத்தி சமர்த்தான ஞானியாகிய வீரர்கள் கையாளத் தகுந்தது. குழந்தையோ அறிவீனனோ கையிலெடுக்கத் தகுந்ததல்ல. ''தத்த்வம் அஸி'' ''அஹம் பிரஹ்மாஸ்மி'' என் னும் வேதாந்த வசனங்களின் வியாஜத்தின் கீழ் சில சமயங்களில் தெரிந்தும், சில சமயங்களில் தெரியாமலும், பல பாவச் செயல்கள் செய்யப்படு கின்றன. இம் மகாவாக்கியங்களின் உண்மைப் பொருளை அரைகுறையாக உணர்ந்து கொண்ட மனிதன் எளிதாகத் தான் கடவுளை அறிந்தவனாக நடித்துக்கொண்டு மற்றவர்களை அவ்வாறு எண்ணு மல், தன் அறிவையும் ஆத்மீக உயர்வையும் பற்றித் தன்னைத்தானே ஏமாற்றிக்கொண்டு எண் ணற்ற பாவங்களைச் செய்கிறான். ஏனெனில் அவன் தான் கர்த்தா அல்ல, தான் செய்யும் கெட்ட வினை

களுக்கு சமாதானமாகத் தான் சாட்சி மாத்திரமே என்று மூடத்தனமாக எண்ணிக்கொள்கிறான்.

வேதாந்தம் பொறுக்கியெடுத்த சிலருக்கு மட்டுமே போதிக்கத் தகுந்தது. உதயபாபா, பாமரர்களுக்கும் தன் சிஷ்யர்களுக்கும் பக்தியையும் கர்மத்தையுமே போதிக்கிறார். அவர் பொறுக்கியெடுத்த சிலருக்கு மட்டும் வேதாந்தத்தைக் கற்பிக்கிறார். பக்தர்களைத் தனது வகுப்புகளில் சேர்ப்பதில்லை. ஒவ்வொரு அறிவாளியான ஆசிரியரும் சிஷ்யனுடைய மனோபாவத்துக்குத் தக்கபடி உபதேசங்களை அளிக்கிறார். வேதாந்தத்தை ஒழுங்கற்ற முறையில் பிரசாரம் செய்தால் எளிதில் விலக்கமுடியாத இடர்களில் ஆசிரியரையும் சிஷ்யர்களையும் ஆழ்த்திவிடும்.

---

## 10. பேரின்பத்துக்கு சகஜ ஞானமே தக்க திறவுகோல்

உள்ளே விளங்கும் அழிவற்ற ஆனந்தமயமான ஆத்மாவை ஆந்திரீகமாக உற்சாகத்துடன் உணர்ந்திருத்தலே சகஜ ஞானமாகும். இந்த அறிவின் மூலம்தான் ஞானி ஒவ்வொன்றிலும் கண்காணாத கடவுளை உணர்கிறார். இந்த திவ்ய சக்ஷு (பிரக்ஞை சக்ஷு, அல்லது ஞான சக்ஷு) மூலம், யோகி அல்லது ஞானி எங்கும் வியாபகமான ஆத்மா அல்லது பிரம்மத்தின் அதிசிரேஷ்ட காட்சியை அநுபவிக்கிறார். அது வேதாந்திகளின் பிரம்மாகார வ்ரித்திபோன்றது. அது யோகிகள் அல்லது ஞானிகளின் மூன்றாவது ஆத்மீகக் கண் ஆகும்.

மிருகங்களுக்கும் பட்சிகளுக்கும் இயற்கையறிவும், மனிதர்களுக்கு புத்தியும், நிபுணர்கள்

அல்லது யோகிகள் அல்லது ஞானேதயமடைந்த ஞானிகளுக்கு சகஜ ஞானமும் உண்டு. புனிதமான விவேகம் அல்லது விசுத்த புத்தியானது சாதகனை சகஜ ஞானத்தின் வாயிலில் கொண்டுசேர்க்கிறது. சகஜ ஞானமும் விவேகத்துக்கு முரண்பட்டதல்ல. அது விவேகத்துக்கு அப்பாற்பட்டது. இயமநியமங் களால் இருதயம் தூய்மை யடைந்து மனது, புத்தி, புலன்கள் ஆகியவை தங்கள் தொழில்களை நிறுத்தி விடின் சகஜ ஞானமாகிய கண் திறக்கிறது.

ஸ்ரீ வியாஸரின் அருளால் சஞ்சயனுக்கு இந்த ஞானக்கண் கிடைத்தது. அர்ச்சுனனும் கண்ண பிரானின் கிருபையால் ஞானக் கண்ணைப் பெற்று விஸ்வரூப தர்சனத்தைக் கண்டான்.

பெர்க்ஸன், சகஜ ஞானமே, கடந்த 'நான்' என்பதையும் 'தானே பொருள்' என்பதையும் அறிவதற்கு முறையென்று அங்கீகாரம் பெற்றார். ஆனால் அவரது நூல் சகஜ ஞான முறையின் வாதம் மாத்திரமேயாகும். அது முறை வகுப்பது மட்டுமே. அவர் அந்த முறையை எவ்வாறு வளர்த்தி விவகார ரீதியில் பலனளிக்கச் செய்வது என்று கூற முடியவில்லை. அதாவது அவர் 'ஆத்மா' அல்லது 'தானே பொருள்' என்பதை அடையும் வழியைக் காட்டமுடியவில்லை.

பெர்க்ஸன் மனிதனை ஒரு க்ஷேத்திர கணித நிபுணனுகப் பிரசுரம் செய்யத்தான் முடிந்தது. அவரது உணர்வு உலகத்தை, காலம் பரப்பு என்ற அளவுகளுக்குள் அறிவதில்தான் பழக்கப்பட் டிருந்தது. அவ்வுணர்வு வெளியுலகத்தையே காண்பதை விட்டு 'வஸ்து ஸ்வரூபமாகிய' உலகத்தின்மீது நோக்கம் செலுத்தப்பட்டால் அது காலத்தையும் பரப்பையும் கடந்து வஸ்து ஸ்வரூ பத்தை ஒரு தனி முறையில் காண்பதற்குப் பழகி விடும் என்பதாம். ஆனல் அதை மாறுதலுள்ள

இம்முறையை அவர் சகஜ ஞானம் என்றும் அது இந்திரியங்களால் காண்பதிலிருந்து வேறுபட்டதென்றும் கூறுகிறார். ஆனால் அதை எவ்வாறு பிரத்யட்சமான உலகத்திலிருந்து மீட்பது என்பது தாரணை, தியானம், சமாதி ஆகியவற்றின் மூலம் சகஜ ஞானத்தை விருத்தி செய்யும் இந்திய யோக முறையேயாம்.

சகஜ ஞானமே யோக விஞ்ஞானம் அல்லது ஆத்ம விஞ்ஞானத்தின் (பிரம்ம வித்யை) ஒரே முறையாகும். இந்திய யோகிகள் அப்பியஸிக்கும் யோகம் முக்கியத்தில் விஞ்ஞானத்தைத் தழுவியது. அது ஒருபடியாக அநுஷ்டானத்தில் கொண்டுவரக் கூடியது. சாதாரண மனிதன் சகஜ ஞான முறையில் தன்னைப் பயிற்சி செய்துகொள்வானாயின் ஒருபடியான பலனுக்கும் உறுதியளிக்கிறது.

ஒவ்வொன்றுக்கும் அடிப்படையாயும் ஒவ்வொன்றுக்கும் காரணமாயும், ஒவ்வொன்றினது ஆத்மாவாயுமுள்ள தான் அல்லது ஆத்ம தத்வத்தை சகஜமாக உணர்வதே வாழ்க்கையின் குறிக்கோள். வாழ்க்கையின் குறிக்கோள் என்ன? சிறந்த நன்மை என்ன? நாம் இவ்வுலகத்தில் பிறந்திருப்பதற்குப் பிரதான நோக்கம் என்ன? மேநாட்டுத் தத்துவ சாஸ்திரம் நிச்சயமான விடையளிக்கவில்லை. எப்படிப்பட்ட விடைகளை அவர்கள் அளித்தாலும் அவை வாழ்க்கையின் நிபந்தனைகளாகவே உள்ளன. வாழ்க்கையே என்ன என்பதை அவர்கள் மனிதனாலேயே வகுக்கப்பட்ட பௌதிக சாஸ்திரங்களின் கொள்கைகளின்படி விவரிக்க முயல்கிறார்கள்.

சகஜ ஞானம், சகஜமாக உணர்தல் என்பதே. உண்மையில் தத்வ சாஸ்திரத்தின் ஒரே உரைகல் ஆகும். முடிவாக உண்மையை உணர்வதற்கு சகஜ ஞான முறையே ஒரே முறையாகும். சகஜ

ஞானமே முறை. ஆத்மாவை உணர்வதே லட்சி சியம். சகஜ ஞானத்தை விருத்தி செய்யாவிட்டால் அறிவாளியும் பூரணமின்றி தோற்றங்களுக்குப் பின்னுள்ள உண்மையைக் காணுத அந்தகனுயிருக்கிருன்.

நினைவில் வைக்கவேண்டிய முக்கிய விஷயம் என்னவென்ருல் மதம், தத்வசாஸ்திரம், விஞ்ஞானம் ஆகியவற்றின் பிரச்னைகளுக்கு விடை ஒன்றே. அதாவது இமாலய ஞானிகளைப்போல் சகஜ ஞானத்தை விருத்தி செய்வதே. இந்த ஞானிகள் காட்டும் வாழ்க்கையின் லட்சியம். உண்மை ஒன்றே உடனடியான நேர்முகமான பரிபூரண ஞானத்தின் தெளிந்த காட்சியில் லட்சியம் பகுத்துணரப்பட்டது. ( அபரோட்ச அநுபூதி அல்லது அபரோட்ச பிரம்ம ஞானம்). அதில் ஊகம், அநுமானம், தீர்மானம் என்பவற்றிற்கு இடமில்லை. சகஜ ஞானம் புதிய கடினப் பிரதேசங்களை வெல்லுவதற்கு வழிகோலுகிறது. போரினுல் பறிக்கும் பொருள்களைக் காட்டிலும் வேறு எத்தொழிலும் அதிக மகிமை வாய்ந்ததல்ல.

அபிவிருத்தி செய்யப்பட்ட சகஜ ஞானத்தின் முன் மற்றெல்லாத் தத்துவ சாஸ்திரங்களும் ருசிகரமான பந்திப் பேச்சுகளாயும், விநோதக் கட்டுரைகளாயும், கண்ணும்பூச்சி என்னும் விளையாட்டில் வேடிக்கையான முயற்சிகளாயும் தோன்றுகின்றன. அவை உண்மையான விமர்சனத்துக்கு நிற்கமாட்டா. சகஜஞான முறை மட்டுமே தத்துவ சாஸ்திர முறையாகும்.

சகஜஞானத்தின் கீழ்த்தர ரூபங்களும் உண்டு. உண்மையில் அவை சகஜஞானமல்ல. அறிவற்ற மனத்தின் படைப்புச் சக்தி காரணமாகச் சில சமயங்களில் மனதின் விவேகச்செயல் மேல் மட்டத்

தின் கீழும் நடந்து கொண்டேயிருக்கும். அது அடிக்கடி தூக்கத்திலும் கனவிலும் பிரஞ்ஞை வாயிலின் கீழ் ஆழத்தில் வேலைசெய்து கொண்டிருக்கும். அது விவேகமான கருத்துகளைத் தயாராய் அளிக்கும். காலரிட்ஜ் என்னும் புலவர் கனவில் '' குப்லாகான் '' என்னும் நீண்ட நவீன காவியத்தை இயற்றினர். தையல் யந்திரத்துக்குத் தகுந்த ஊசியின் பிரச்னைக்கு அதைக்கண்டு பிடித்தவர்க்குக் கனவில் சங்கேதமாக விடை கிடைத்தது. ஷெல்லி செய்யுட்களைச் சரமாரியாகப் பொழிந்தார். கணித சாஸ்திர மேதாவிகள் உடனடியாகக் கணக்குகளுக்கு விடை கூறுகிறார்கள். ஆனல் ஆத்மீக சாஸ்திரப்படி இவை எதுவும் சகஜஞானத்தைச் சேர்ந்ததல்ல. இச்செயல்கள் அவைகள் வெளிப்படும் திட்டமான உருவங்களைத் தவிர மனப்பூர்வமான சங்கல்பத்துக்கு இடம் கொடா. அதோடு அவை தர்க்கரீதியை **(Reason)** அண்டவிடா. ஆனல் ஆத்மீக விஞ்ஞானப்படி விருத்திசெய்யப்பட்ட சகஜஞானம் தர்க்கரீதியின் வாய்ப்பை விசாலமாக்கி மனப்பூர்வமான சங்கல்பத்தை முடிந்தவரையில் உயர்ந்த அளவுக்கு ஒவ்வொரு திசையிலும் சாத்தியமாகும்படி செய்கிறது.

மேனுட்டு தத்துவ சாஸ்திரத்தின் உயர்ந்த நாட்டங்களை சகஜ ஞானத்தை விருத்தி செய்வதன் மூலம் இந்திய தத்துவ சாஸ்திரம் நிறைவேற்றி வைக்கிறது. கீழ்நாட்டில் பயில்வதுபோல் சகஜ ஞான தத்துவமின்றி, மேனுட்டுத் தத்துவ சாஸ்திரம், தூரதிருஷ்டிக் கண்ணுடி, பூதக் கண்ணுடி விஞ்ஞானத்தில் விசேஷ ஆயுதங்கள் ஆகியவை கண்டுபிடிக்குமுன் விஞ்ஞானம் இருந்ததுபோல் இருக்கிறது. பூதக்கண்ணுடி கண்டுபிடிக்குமுன், வியாதிக் கிருமிகள் எப்படிப்பட்டவையென்று

அறியமுடியாமல் இருந்தது. பிரகிருதியின் அல்லது உயிரின் அதிசூட்சும ஜீவாணுக்களைப்பற்றி ஊகம் செய்யும் முயற்சி முழுதும் தோல்வியாகவே இருந்திருக்கும். மனிதனிடமுள்ள மறைந்த கவன சக்திகள் யாவற்றையும் விருத்தி செய்யுமுன் தத்துவ விசாரம் செய்வது உண்மையில் விஞ்ஞானத்துக்கு அடுத்ததல்ல. ஊக்கமுள்ள செயலாளிகளின் மனதை அது கவரமுடியாது. எவ்வகை உருவான பலன்களையும் அது ஒருபோதும் அளிக்காது. சகஜஞானத்தை விருத்தி செய்யாதவரையில் 'ஒரு இருண்ட அறையில் இல்லாத ஒரு கருப்புப் பூனையின்பின் ஓடும் தத்துவ சாஸ்திரி' என்ற பழமொழி இருந்துகொண்டேயிருக்கும்.

ஆனந்த நிலைக்கு சகஜஞானம் தங்கத் திறவுகோலாகும். சகஜஞானமே வெற்றியின் விஞ்ஞானம். அதுவே உண்மையின் விஞ்ஞானம். அது மனிதனை நித்தியானந்தத்தையும் எல்லையற்ற ஞானத்தையும் அடையச் செய்கிறது. அது அழகும் ஆனந்தமும் நிறைந்த பிரதேசங்களைக் காட்டி அப்பிரதேசங்களை வெல்லும் வழியையும் காட்டுகிறது. அது அவன் விரும்பினால் உலகை அசைக்கவல்ல அற்புத சக்திகளை அளிக்கிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, அது புத்தி உண்மையை உணர்ந்து, தெரிவிப்பதன் பொருட்டுக் கருத்துக்களை உண்டுபண்ணவும் உதவி செய்கிறது.

நீங்கள் அனைவரும் சகஜஞானத்தை விருத்தி செய்து இப்பிறப்பிலேயே ஆத்மஞானத்தை அடைவீர்களாக!

---

# 11. சகஜ ஞானம்

## ஞானத்துக்கு முக்கிய ஆதாரம்

எல்லா ருஜுக்களுக்கும் முடிவான ஆதாரம் பிரத்யக்ஷமாக அறிவதொன்றே. வேதங்களும் ஆசிரியரும் நமக்குக் கடவுளைக் காட்டமுடியாது. சித்தம் அமைதியாயும் தூய்மையாகவும் உள்ள போது, ஆத்மாவே தன்னைத்தான் காண்கிறது என்று இந்திய அபிப்பிராயம் கூறுகிறது. ''பரம் பொருள் சகஜஞானத்தின் மூலம்தான் அறியப் படும்'' (பெர்க்ஸன்). ''இயற்கையின் ஆழ்ந்த இரகசியங்கள், பிரபஞ்சத்தின் அமைப்பைப் பற்றிய பெரிய விஷயங்கள் பௌதிக சாஸ்திரத்துக்கு உட்பட்ட விஷயங்கள் அல்ல. அவை ஒவ்வொரு மனிதனது வாழ்க்கையோடு விதிப்படி அவனுலும் அவன் பொருட்டும் சேர்ந்துள்ள உயிருள்ள விஷயங்கள். அவை வெளிக்காட்டும் விஷயங்கள் அல்ல. அநுபவத்தால் அடையத்தக்கவை. உண்மையை அறிவிஞல் விளக்கிக் கொள்வது மட்டு மல்ல. அதோடு உயிருள்ள முக்கிய சேர்க்கையால் அறிதல் வேண்டும்'' ( கிங்க்ஸ்லந்து - நியாயயுக்த மான குப்தவித்தை). ''எவ்வளவு நிர்ணயமின்றி, விஸ்தாரமாயும் உருக்கமாயும் இருப்பினும், விஞ்ஞானத்தால் தோண்டப்படாத உண்மையின் ஆழத்தில், நாம் சொந்த சகஜஞானத்தால்தான் உட்பார்வை செலுத்தமுடியும் என்ற தீர்மானத்தைத் தடுக்க முடியாது'' ( வால்டர் க்ரியர்ஸன் —தற்கால விஞ்ஞானத்தின் முடிவுகள் ). ''உண்மையை உணர்வதற்கு சகஜஞானக்கலை விட்ட குறையை நிரப்பும் முறையாக உளது என்பதையும் கிரமமானது என்பதையும் மேலும் மேலும் அங்கீகரிப்பதற்கு மேனுடு தயாராயிருக்கிறது.'' ''அது தன் செயல்களில் நேர்முகமாகவும் உடனடியாகவும் உளது. அது தனக்குத்தானே பிரமா

ணம்''. ''வெளியே நிற்பதற்குப் பதில், சகஜஞான மானது தன் பொருளில் உட்புகுந்து அநுதாபத்தின் மூலம் அதோடு ஒன்ருய் விடுகிறது''. '' அது முடிவாகவும், தலைசிறந்த முறையிலும் பொருள்களின் அர்த்தத்தையும் முக்கியத்தையும், ஒரு தெய்வீக அர்த்தத்தையும் சொந்த முக்கியத்தையும், நமக்கு உறுதிப்படுத்துகிற கலையாகும்' (ஜோட்— கீழ்நாட்டினின்று எதிர்த்தாக்குதல்). பிளாடோவுக்கு 'நியோஸிஸ்' என்பதே உடனடியான சிறந்த புத்திக் குகந்த உயர்ந்த வகையான அறிவு. அவர் ஆத்மா தன்னுடு தானே பேசிக்கொள்ளும் என்பதில் நம்பிக்கை கொண்டிருந்தார். அரிஸ்டாடில் கடவுளைப்பற்றிய எல்லையற்ற ஆத்மஞானத்தைப் பற்றிப் பேசுகிருர். அது தனக்கு வெளியில் எந்தச் சட்டத்தையும் முடிவையும் அறியாத ஒரு தூய செயல் என்கிருர். பிளாடினஸு‌ம் புதுப் பிளாடோனிஸ்டுகளும் தர்க்க ரீதியான ஞானம் மட்டுமே போதாதென்று நிச்சயித்திருந்தனர். புத்தி பூர்வகமான கூறுபாடுயாவும், உண்மையின் ஐக்கியத்தை தனி உறுப்புகளும் தொடர்புகளும் கொண்ட அமைப்பாக முறிந்து விடுவதால், உண்மையைப் பொய்யாக்குவதாம் என்பது பிராட்லீயின் கொள்கை. 'என்ன' என்பது எவ்வளவு உட்புகுந்தாலும், அது இருக்கும் உண்மை முழுவதையும் ஒரு போதும் சேர்த்துக்கொள்ள முடியாது. (பிராட்லீ) ''உண்மையின் ஒன்றுபட்ட அமைப்பு, எண்ணம், உணர்ச்சி, சங்கல்பம் ஆகிய ஒரு பூரண வஸ்துவாகக் கலந்துள்ள உயர்ந்த ஐக்கியத்தை எண்ணுவதைக்காட்டிலும் உணர்வதில் அதிகமாக வெளியாகிறது.'' (பிராட்லீ) பெர்க்ஸனும் புத்திக்கு சகஜ ஞானமே பரமார்த்த ஞானத்துக்குத் தக்க உறுப்பு என்று அபிப்பிராயப்படுகிருர். தர்க்கரீதியான அறிவு நம்மை ஒரு மனிதனிடமிருந்து தூர விலக்குகிறது. சகஜ ஞானமே ஒரு

மனிதனை ஊடுருவி அவனைப் பற்றித் தேர்ந்த அறிவை அளிக்கிறது என்று கிளோஸ் என்பவர் அபிப்பிராயப்படுகிறார் பிராட்லீ, பெர்க்ஸன், கிளோஸ் ஆகியவர்கள் வெவ்வேறு விதங்களில் புத்தியானது வாழ்க்கையை விறைப்பாக்கி நினைத்த விஷயங்களில் பந்தப் படுத்துகிறது என்று வற்புறுத்திக் கூறுகிறார்கள். ''ஒரு மனிதன் எதை தான் இன்னும் அடைந்திருக்க வில்லையோ அதைப்பற்றி ஒழுங்கற்ற முறையில் யோசிக்கிறான். பூரண விவேகம் எதையும் தேடுவதில்லை, அது எதனால் நிரம்பியிருக்கிறதோ அதன் சாட்சியத்தின்பேரில் நிலைபெற்று நிற்கிறது.'' (என்னீட்ஸ்) சகஜமான ஞானத்தைப்பற்றி ஹிந்து அறிவாளிகள் அளிக்கும் அரும்பெரும் உதாரணம் ஆத்ம ஞானமே. ஆத்ம ஞானம் ஆத்மாவின் இருப்பினின்று பிரிக்க இயலாதது. அதுவே உண்மையான நேர்முக ஞானம். மற்றவை யாவும் ஊகிக்கப்படுபவை. அது ஒவ்வொரு வேறுவிதமான ஞானத்துக்கும்முன் ஊகிப்பதாக உளது. அது எல்லா ருஜுவுக்கும் அடிப்படை. எல்லா அறிவுக்கும் ஒரு ''நான்'' தொக்கி நிற்கிறது. ''நான் இருக்கிறேன்'' என்பது புராதன சித்தர்கள் ''நான் இருக்கிறேன்'' என்றதற்குச் சமானம் என்கிறார் டெஸ்கார்டஸ், லாக்கூட சகஜஞானத்தின் உண்மையை ஒப்புக் கொள்கிறார். அவர் ''நமது சொந்த இருப்பைப் பற்றி நாம் அதை அவ்வளவு தெளிவாகவும் அவ்வளவு நிச்சயமாகவும் காண்பதால், அதை ருஜுப்படுத்த அவசியமில்லை, முடியவும் முடியாது'' என்கிறார். காந்த் விஷயத்தில், ''நான் எண்ணுகிறேன்'' என்பது எல்லா வாக்கு மூலங்களையும் பின் தொடர்கிறது. அது பொதுவில் எல்லாக் கருத்துக்களையும் தாங்கி நிற்பது. சகஜஞானம் காரணமாகவே ஆத்மாவின் ஞானம் உண்டாகிறது என்று பிச்டே அபிப்பிராயப் படுகிறார். ஸ்கோபன்

ஹாவர் நமது ஆந்திரீக அநுபவத்தில் அசாதாரணத்துக்கும் மேலான ஒன்றை நாம் உணர்கிறோம் என்று கூறுகிறார். பெர்க்ஸன் உடனடியான பிரக்ஞை மூலம் நாம் உண்மையைப்பற்றி உணர்வை அடைகிறோம் என்கிறார். ''சர்வ சக்தியை விட்டு வேறாக சர்வக்ஞத்துவத்தைப் பற்றி நாம் உண்மையில் நினைக்க முடியுமா? இன்னொரு மனிதரைப்பற்றி முழுதும் நாம் அறிந்தால் அம்மனிதன் நானாகவே இருக்கவேண்டும்.'' (ரிட்சே). தியாப்ரஸ்டஸ் ''எல்லா விஷயங்களுக்கும் காரணம் தேடுபவர்கள் காரணத்தையே அடியோடு தோற்கடித்து விடுவார்கள்'' என்று வெளிப்படையாய்க் கூறுகிறார். போஸன்க்வெட் ''உண்மை உள்ளத்துக்கு இயல்பானதும், தவறு விலக்கானதுமாகும். நீ மனதின் எண்ணத்தைச் சுத்தமாக அடையக் கூடுமானால் நீ அதில் உண்மையின் மெய்யான வர்ணனையைப் பெற்றிருக்க வேண்டும். அவன் செயல் அவ்வளவு யோசனைக் குரியதல்ல. அது இயற்கையானது'' என்கிறார். வெளியறிவு அல்லது தார்க்கீக விவேகத்தைவிட ''மனிதனின் உட்குரலே'' ஸாக்ரெடஸுக்கு உகந்தது. பிளாடோ இந்த தத்துவத்துக்கு ''ஞாபகம்'' என்று பெயர் சூட்டுகிறார். எல்லா உண்மையும் ஒரே சமயத்தில் புதியதும் பழையதும், அதாவது அறிந்துகொள்வது அறிந்துகொண்டதாக அறிவித்தலும் ஆக இருப்பதால் எல்லாக் கல்வியும் ஞாபகத்துக்குச் சமானமான போக்கே'' என்று அவர் கூறுகிறார். அரிஸ்டாடிலினுடைய 'அறிவு' 'முதற் கொள்கைகளின் சாஸ்திரம் என்று ஒன்று எவ்வாறு இருத்தல் கூடும்'' என்கிறார். அவைகளின் உண்மை ஒவ்வொருவருக்கும் தெளிவாயிருக்கிறதே. நாம் அவற்றை 'அறிவினால்' (நௌஸ்) அதாவது நேர்முகத் தொடர்பினால் உணர்கிறோம். ஸ்பினோஜா ''கடவுள் உள்ளுக்

குள்ளிலிருந்து உணர்வதுபோல், வஸ்துக்களின் உண்மையை உணர்வதற்கு நமக்கு சகஜஞான மாகிய உ ய ர் த ர உணர்வுவேண்டியிருக்கிறது'' என்று கூறுகிறுர். அவர் கற்பனை, விவேகம் சகஜ ஞானம் ஆகியவற்றிற்கிடையில் எல்லையைத் தெளி வாக வகுக்கிறுர். அவர் தமது சிறு நூலில் ''சகஜ மான ஞானம் என்பது விவேகத்தால் அறிவுறுத்தப் படுவது அல்ல, பொருளுடனேயே உடனடியாக ஒன்றுபடுதலே யாம்''. ''பொருள் த ா ளு க வே அறிவுக்கு முன்னர் நேர்முகமாக வெளிப்படுவதே யாம்''. ''சகஜஞான விவரத்திலிருந்தே உயர்ந்த மன அமைதி உண்டாகிறது'' என்று கூறுகிறுர். பாஸ்கல் ''விவேகமே விவேகத்துக்கு அப்பாற்பட்ட எல்லையற்ற பிரதேசம் இருக்கிறது என்று ஒத்துக் கொள்கிறது. மனது இரு விதங்களில் ஆலோசிக் கிறது. அதாவது கணித முறையும் நுண்ணிய முறையும். இரண்டாவது முறையில்தான், நாம் உண்மையை உணர்கிறேம்'' என்று கூறுகிறுர்.

அறிவு சகஜஞானம் இரண்டும் ஒரே மனதின் தத்துவங்கள். அவை இரண்டுக்கும் இடையில் தொடர்வு முறிவு இல்லை. சகஜஞானம் விவே கத்தை நிராகரிப்பதில்லை. அதை அது நிறைவேற்று கிறது. அவை ஒன்றை யொன்று விலக்குபவை அல்ல. சகஜஞானம் முழுவதின் புலப்பாட்டை யளிக்கிறது. அறிவிஞல் முழுவதின் மனேபாவனை யான அபிப்பிராயத்தை அடையலாம். சகஜ ஞானம் முழுவதின் நேர்முக அறிவை அளிக்கிறது. அறிவோ பாகங்களின் கூறுபாட்டை அளிக்கிறது. சகஜஞானமே ஞானம்; அரிஸ்டாடிலின் நெளஸ்; டாண்டேயின் யாவற்றையும் அணைந்து கொள்ளும் அறிவு. பிரேட்சமய அறிவு என்னும் நூலில் ப்ராட் என்பவர் ''யோகபரவசம் அறிவு ரூபமானதே. அது யோகிக்கு பார்வை, கே ள் வி போலவே

உண்மையை வெளிப்படுத்துவதுபோல் தோன்றுகிறது'' என்று உறுதி கூறுகிறார். அவரது அநுபவம் சகஜஞானத்தைச் சேர்ந்தது. அது உண்மையை நேருக்கு நேர் காண்பதே.

---

## 12. உலகம் பொய்யானது

இப் பிரபஞ்சத்தில் 1. பெயர்கள் மட்டும் உள்ள பொருள்கள் 2. நாமரூபங்கள் மட்டும் உள்ள பொருள்கள் 3. நாமரூபங்களோடு கூடி உலக விவகாரத்துக்கு ஒத்த பொருள்கள் 4. நித்தியமான, மாறுதலற்ற, அழிவற்ற ஏகரூபமான முக்காலத்திலும் உள்ள வஸ்து என்று நான்கு விதமான பொருள்கள் காணப்படுகின்றன. முதல் வகைக்கு உதாரணங்கள் வந்த்யா புத்ரன் (மலடியின் மகன்), ஸஸஸ்ரிங்க (முயலின் கொம்புகள்), ககனாரவிந்தம் (ஆகாயத் தாமரை), இரண்டாம் வகைக்கு ரஜ்ஜு ஸர்ப்பம் (கயிற்றில் பாம்பு) மருமரீசிக அல்லது ம்ருக திருஷ்ணா (கானல் நீர்), ஆகாயத்தில் நீலம், கந்தர்வ நகரம் (மேகங்களில் நகரம் தோன்றல்), ஸ்வப்ன ப்ரபஞ்சம் (கனவில் உள்ள பொருள்கள்), இவற்றுக்கு நாமரூபங்கள் இருக்கின்றன. அருகில் சென்றால் அல்லது கனவினின்று விழித்துக்கொண்டால் அவை மறைந்து விடுகின்றன. மூன்றாம் வகை (3) கடம் (பானை), பட (துணி) முதலியவற்றிக்கு நாம ரூபங்கள் உண்டு. நீ அருகில் சென்றாலும் அவற்றைக் காணலாம். அவை நீரை வைக்கவும் உடுத்தவும் உதவுகின்றன. ஆனால் அவை அழிக்கப்பட்டால் அவற்றிற்கு இருப்பு இல்லை. நான்காம் வகை (4) ஆத்மா அல்லது உள்ளேயுள்ள தான் மட்டும் எல்லாக் காலங்களிலும் இருப்பையுடையது. அது மாறுதலற்றது,

முதல் வகைப் பொருள்கள் அஸத் வஸ்துக்கள் எனப்படும். இரண்டாம் வகைப் பொருள்கள் மித்யாவஸ்துக்கள் எனப்படும். மூன்றும் வகைப் பொருள்கள் வியவஹாரிக வஸ்துக்கள் எனப்படும். நான்காம் வகைப் பொருள் பாரமார்த்திக வஸ்து எனப்படும்.

உலகத்தில் ஈடுபாடுடைய அஞ்ஞானிகள் மாயையின் விளைவுகளால் கவரப்பட்டு மயக்கமுறுகிறுர்கள். மாயையின் சக்தி அல்லது அவித்யையால் அவர்கள் அறிவிழந்து இந்திரிய வஸ்துக்களில் ஈடுபட்டு ஆத்மா அல்லது பரமார்த்த வஸ்துவை அறியாமலேயே அழிந்து படுகிறுர்கள். உலக வஸ்துக்களும் பொய்யானவையே. நீ ஆழ்ந்து ஆலோசித்து விசாரணை செய்யின் உலகமும் அதன் நானுவிதமான பல்வேறு நிறங்களுள்ள பொருள்களும் நீண்டகனவு என்றே தோன்றக் காண்பாய். கயிற்றில் பாம்பு தோன்றுவது போல் சிறிது காலம் மட்டும் காணப்பட்டு உண்மையில் இருப்பில்லாத பொருள் மித்யாவஸ்துவே.

அஞ்ஞானிகள் அல்லது உலக விஷயங்களில் படிந்த மன முடைய மனிதர்களுக்கு இந்திரிய வஸ்துக்கள் முழுதும் உண்மையானவை. ஞானிகள் அல்லது விவேகமும் விசாரணையும் உடையவர்களுக்கு அவை பொய்யானவை.

நீ பார்ப்பது எதுவும் பொய்யே. இதில் சந்தேகமில்லை. வெய்யில் உக்கிரமாக இருக்கும் போது மான்கள் கானல் நீரில் நீரைக் காண்கின்றன. அவை நீர் பருகக் கானல் நீரை நோக்கி ஓடுகின்றன. அங்கு அவை நீரைக் காண்பதில்லை. பிரகாசமான வெய்யிலில் வெள்ளித்துண்டை எடுக்கச் சிறுவன் ஓடுகிறுன்: அவன் கிளிஞ்சல் ஓட்டைத் தான் காண்கிறுன். ஒரு பெண் இரவில் நீர் கொண்டுவரப் போகும்போது வழியில் பாம்பைக்

கண்டு பயமுறுகிறாள். அவள் விளக்கை எடுத்துக் கொண்டு பாம்பைக் காணச் சென்று கயிற்றைத் தான் காண்கிறாள். அங்கு பாம்பேயில்லை. ஒரு இளைஞன் கனவில் ஒரு மங்கையைத் தழுவி உண்மையிலேயே விந்துவை நழுவ விடுகிறான். அவன் விழிக்கும் போது மங்கையைக் காண்பதில்லை. நீ ஆகாயத்தில் நீலநிறத்தைக் காண்கிறாய். ஆகாசம் நீல மண்டபம் போல் தோன்றுகிறது. வானத்தில் விமானத்தில் ஒருவன் பறக்கும்போது அந்த நீல மண்டபம் இல்லை. அது இன்னும் தூரத்தில் தென்படுகிறது. நீ பார்ப்பது எதுவும் உண்மையில் இருப்புடையதல்ல. அவை கனவில் காணும் வஸ்துக்களைப் போல் போலித் தோற்றங்களே. ஆனால் பொருள்கள் தோன்றி மறையும் போது காண்பவன் இருக்கிறான்.

ஸ்வப்ன நிலையில் தொண்டையில் உள்ள ஹித நாடி என்னும் நுண்ணிய நாடிக்குள் பெரிய மலைகளையும், யானைகளையும், நகரங்களையும் பேராறுகளையும் மற்றவைகளையும் காண்கிறாய். இப்பெரும் பொருள்கள் இருப்பதற்கு அந் நுண்ணிய நாடியில் இடம் இல்லை. ஆகவே கனவுப் பொருள்கள் பொய்யானவை அல்லது மாயீக மானவை.

ஒரு சிறு விதையினின்று பெரிய மரம் முளைத்து வளருகிறது. ஒரு சிறுதுளி விந்துவிலிருந்து ஒரு பெரிய உடல் உண்டாகிறது. தண்ணீர் தனக்குத் தானே இறுகி பெரிய பனிக்கட்டிப் பாறையாகிறது. விழிப்பு நிலையில் தோன்றும் பொருள்களும் பொய்யே.

கனவில் பல ஆண்டின் சம்பவங்களை சில நிமிடங்களுக்குள் நீ பார்க்கிறாய். பிரம்மாவின் ஒரு தினத்துக்குள் நமக்கு ஆயிரம் சதுர்யுகங்கள் கழிந்து விடுகின்றன. ஒரு பிரம்மாண்டமான மலைப்பாம்பு இரண்டாம் முறை உணவு தேடுவதற்குள்,

மனிதன் நூறுமுறை உணவு கொள்கிறான். ஒரு குழந்தை கருப்பையில் விருத்தியடையும் காலத்துக்குள், சிறு பூச்சிகள் கோடிக் கணக்காகத் தங்கள் சந்ததியைப் பெருக்கிவிடுகின்றன. சந்தோஷமுள்ள மனிதன் ஒருவன் ஒரு இரவை ஒரு நிமிடம் போல் கழிக்க, துயரத்தில் மூழ்கின இன்னொருவன் ஒரு இரவைப் பல ஆண்டுகள் போல் காண்கிறான். ஆகவே காலம் கூட எல்லாச் சமயங்களிலும் எல்லோருக்கும் ஒரே மாதிரியாய்த் தோன்றுவதில்லை. காலத்தில் தோன்றி மறையும் பொருள்கள் மாயீகமானவை.

உன்னால் கனவில் காணப்படும் பொருள் விழித்த நிலையில் அதே இடத்தில் அதேமாதிரி காணப்படுவதில்லை. இதேபோல் ஒரு மனிதன் எக்ஸ் என்னும் மனிதனை நல்லவன் என்கிறான். அதே மனிதன் மற்றொருவனுக்குக் கெட்டவனாகக் காணப்படுகிறான்.

கனவில் காணப்படும் பொருள்கள் ஜாக்ரத நிலையில் (விழித்த) சரியாக இருப்பதில்லை. ஜாக்ரத நிலையில் காணப்படும் பொருள்கள் ஜாக்ரத நிலையிலேயே வேறாகத் தோன்றுகின்றன. கனவு நிலையில் ஜாக்ரத நிலையிலுள்ள பொருள்களை நீ நினைவு வைப்பதில்லை. நீ கனவு நிலையில் ''நான் ஜாக்ரத நிலையில் பார்த்த அப்பொருள்களை இப்போது நான் காணவில்லை'' என்று நினைவு கூறுவதில்லை. ஆகவே ஜாக்ரத நிலையின் வஸ்துக்கள் ஸ்வப்னநிலை வஸ்துக்களைவிடப் பொய்யானவை. சுருதிகளும் ஞானிகளும் உலக வஸ்துக்கள் ஸ்வப்ன வஸ்துக்களைப்போலவே பொய்யானவையென்று உறுதி கூறுகிறார்கள். அவை உலகத்தை, தீர்க்க ஸ்வப்னம் அல்லது நீண்ட கனவு என்கின்றன.

ஆதியிலும் அந்தத்திலும் இல்லாதது இடையிலும் உண்மையில் இருப்புள்ளதல்ல. அது

பொய்யே. இரவில் கயிற்றில் கண்ட பாம்பு விளக்கு கொண்டுவந்தவுடன் இல்லை. அது இடையில் தான் தோன்றுகிறது. அதேபோல் தான் கிளிஞ்சல் ஓட்டில் காணப்பட்ட வெள்ளி, கானல் நீரில் காணும் நீர். மேகங்களில் காணும் நகரம் முதலியன. ஆகவே அவை தோன்றும்போதும் பொய்யே. கனவு வஸ்துக்கள் பகலில் காணப்படுவதில்லை. இதேபோல் உலக வஸ்துக்களும் இடையில் தான் புலப்படுகின்றன. ஆகவே அவை பொய்யேயாம்.

''ஜாக்ரத நிலையில் ஒருவன் உண்ணும் உணவும் பருகும் நீரும் அவனுக்குத் திருப்தி விளைவிக்கின்றன. ஆனால் கனவில் உண்ணும் உணவால் பசி தீருவதில்லை. ஆதலின் கனவு வஸ்துக்கள் பொய்யானவை. ஜாக்ரத நிலை வஸ்துக்கள் உண்மையானவை'', என்ற ஆக்ஷேபணை எழக்கூடும். ஜாக்ரத நிலையில் வயிறுர உண்டபிறகு உறங்கப் போகும் ஒரு மனிதன் கனவில் பசியால் அவஸ்தைப் படுகிறான். கனவில் விமரிசையான விருந்துண்ட மனிதன் பசியோடு விழித்துக்கொள்கிறான். இதுபோல் விழித்திருக்கும் நிலையில் செய்த செயல்களின் பலன் கனவில் கிடைப்பதில்லை. கனவுச் செயல்களின் பலன் ஜாக்ரதத்தில் கிடைப்பதில்லை. ஆதலால் ஜாக்ரத நிலையும் கனவைப்போல் பொய்யானது.

''ஒருவன் தனக்குக் கைகள் நான்கு இருப்பதாயும் தான் ஆகாயத்தில் பறப்பதாயும் கனவு காண்கிறான். இது பொய்யன்றோ? ஜாக்ரத நிலை இதுபோன்றதல்ல. ஆகவே அது உண்மையானது'' என்று ஆக்ஷேபணை கூறலாம். ஒரு மனிதன் தனது கர்மாக்களுக்கேற்றபடி தேவனாகவோ, மிருகமாகவோ பறவையாகவோ, பிறப்பையடைகிறான். அவன் ஜாக்ரத நிலையில் ஆயிரம் கைகள் படைத்த

இந்திரனுகிருன். ஜாக்ரத நிலையிலேயே அவன் பறவையாகி ஆகாயத்தில் பறக்கிருன். நாற்கால் பிராணியாகிருன், நூறு கால்களுள்ள பூரானுகவோ கால்களேயில்லாத பாம்பாகவோ ஆகிருன். கனவில் சில வஸ்துக்கள் பொய்யாகவும், சில உண்மையாகவும் இருப்பதுபோலவே ஜாக்ரத நிலையிலும் கயிற்றில் பாம்புபோல் சில வஸ்துக்கள் பொய்யாகவும், குடம் துணிபோல் சில உண்மை யாகவும் உள்ளன. ஆத்மா அல்லது பிரம்மத்தைப் போல் கனவு வஸ்துக்களும் சரி, நினைவு வஸ்துக் களும் சரி, பூரணமாக உண்மையல்ல.

சூரியனும், சந்திரனும் நட்சத்திரங்களும் வட்டமாயும், தட்டையாயும் சிறியனவாயும் தோன்றுகின்றன. அவை வானத்தில் மெதுவாகச் செல்லுவதுபோல் தோன்றுகின்றன. ஆனுல் உண்மையில் அவை ஏதோடும் ஒட்டிக்கொண் டிருக்கவில்லை. அவை தட்டையுமல்ல. அவை கிழக்கிலிருந்து மேற்கே செல்லவும் இல்லை. அவை ஒரு இடத்தில் நிலைத்து இருக்கின்றன. ஒவ்வொரு கிரகமும் பூமியைவிட லக்ஷம் மடங்கு பெரியது. பூமிகூட தட்டையாகக் காண்கிறது. ஆகவே பொருள்கள் அவை தோன்றுவதுபோல் இல்லை. காணப்படுபவை மாயமானவை.

ஒரு உத்தியோகஸ்தர் ''இந்தக் கலாசாலையில் தான் நான் இருபது ஆண்டுகளுக்குமுன் படித் தேன்'' என்கிருர். நீ விசாரிக்கப் புகுந்தால் அதே பேராசிரியர்கள் அங்கேயில்லை. அதே கட்டிடம் கூட ஆண்டு இல்லை. பின்புறமிருந்த சிறிய பழைய கட்டிடம் இடித்துத் தள்ளப்பட்டு இப்போது புதுக் கட்டிடம் அமைக்கப்பட்டிருக்கிறது. பழைய கலாசாலையின் பெயர்தான் உளது. எனினும் உத்தியோகஸ்தர் '' இதுதான் நான் படித்த

கல்லூரி'' என்று பாவனை கொள்கிறார். இது அவரது மனக் கற்பனையேயன்றி வேறில்லை.

இதேபோல் ஒரு மனிதனின் உடலிலுள்ள அணுக்களும் பரமாணுக்களும் மாறிக்கொண்டேயிருக்கின்றன. தேகத்தின் வெவ்வேறு அமைப்புகளிலும் உண்டாகும் கிரமங்களும் அழியும் கிரமங்களும் எப்போதும் நடந்துகொண்டேயிருக்கின்றன. ஏழு ஆண்டுகளுக்குள் தேகம் முழுதும் புதிய பரமாணுக்களால் ஆக்கப்பட்டு விடுகிறது. அவனுக்கு முற்றிலும் புதிதான தேகம் உண்டாகி விடுகிறது. எனினும் அவரது மகன், ''பத்து வருடங்களுக்குமுன் இருந்த அதே என் தகப்பனார் தான் இவர்'' என்கிறான். இது பொய் அல்லவா?

கோவிந்தன் இராமனை, ''இது யார் வீடு?'' என்று கேட்டால், இராமன் ''இது என் வீடு'' என்று பதில் கூறுகிறான். இராமன் தன் வீட்டைக் கிருஷ்ணனுக்கு விற்றுவிடுகிறான். யாராவது மறுபடி இராமனை ''யாருடைய வீடு இது?'' என்று கேட்டால், அவன் ''இது என் வீடு அல்ல. இது கிருஷ்ணனுக்குச் சொந்தம்'' என்கிறான். இப்போது கிருஷ்ணன் ''இது என் வீடு'' என்கிறான். வீடு அதுவேதான். ஆனால் வெவ்வேறு உரிமையாளர்கள் ''இது என்னுடையது. இது என்னுடையது'' என்று உரிமை கொண்டாடுகிறார்கள். இதிலிருந்து உரிமை என்பது மனக் கற்பனைதான் என்று முற்றிலும் தெளிவாகிறது.

தனது பாட்டன் புதைத்துவைத்த புதையல் மீது உட்கார்ந்துகொண்டு ஒரு மனிதன், ''நான் பரம ஏழை. என்னிடம் ஒத்தைப் பைசாவுமில்லை'' என்கிறான். ஒரு தனவான் தனது வீட்டின் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருக்கிறான். பின்புறத்து வழியாய் ஒரு கள்வன் நுழைந்து எல்லாப் பொருள்களையும் கொண்டு செல்கிறான். ஒரு சந்யாஸி அப்

பணக்காரனிடம் வந்து ஆஸ்ரமம் கட்டுவதற்கு நன்கொடை கேட்கிறார். அவன் பதினாயிரம் ரூபாய் அளிக்கச் சம்மதிக்கிறான். முதல் மனிதன் தான் ஏழையென்று எண்ணுவதும் இரண்டாமவன் தான் பணக்காரன் என்று எண்ணுவதும் மனக் கற்பனையின் விளைவுகளேயன்றி வேறில்லை.

படக்காட்சி சாலையில் சுருளின் சில படங்கள் பின்புறம் புரண்டு கொண்டிருக்கின்றன. அப் படங்கள் காலியான திரைமீது பேசிக்கொண்டும் நர்த்தனம் செய்து கொண்டும் காட்சியளிக்கின் றன. அதேபோல் உருவங்கள் உலகத்தில் தோன்றி மறைகின்றன. அவை மாயீகமே.

சூரியாஸ்தமனத்துக்குச் சற்றுமுன் மேற் கிலுள்ள மேகங்களைப் பார்த்தால் ஆகாயம் சிவந்து காண்கிறது. சில நிமிஷங்களில் சிவப்பு நிறம் மறைந்து மஞ்சள் நிறம் காணப்படுகிறது. மஞ்சள் நிறம் மறைந்து பச்சை நிறம் தெரிகிறது. சில நிமி ஷங்களில் பச்சை நிறமும் மாறி நீல நிறம் காண் கிறது. பிறகு பல நிறங்கள் கலந்து காண்கின்றன. இதற்குக் காரணம் என்ன? உண்மையில் மேகங் களில் யாதொரு வர்ணமும் இல்லை. ஒளியில் அல் லது சூரிய கிரணங்களில் ஏழு வர்ணங்கள் உண்டு. வெண்மை ஒளி ஏழு வர்ணங்களால் ஆக்கப்பட் டது. அவ்வேழு வர்ணங்கள் மேகங்களில் ஊடுரு விச் செல்கின்றன. காற்றின் விசையினால் மேகங் களின் அடுக்குகளும் அணுக்களும் வெவ்வேறு அடுக் குகளாக அமைக்கப்படுகின்றன. ஏழு வர்ணங்கள் மேகங்கள் மூலம் செல்லும் போது ஆறு வர்ணங்கள் மேகங்களை ஊடுருவிச் செல்லுகின்றன. சிவப்பு வர்ணம் தடைப்பட்டு மேகங்களால் பிரதிபலிக்கப் படுகின்றன. ஆகவே நாம் சிவப்பு நிறத்தைப் பார்க்கிறோம். இன்னொரு மேக அடுக்கில் மஞ்சள்

நிறம் தடைப்படுகிறது. அப்போது மஞ்சள் நிறத்தைக் காண்கிறோம். முப்பட்டைக் கண்ணுடியிலும் வானவில்லிலும் நாம் சூரிய கிரணங்களின் ஏழு வர்ணங்களைத்தான் காண்கிறோம். நாம் இரவில் எதையும் பார்க்காததற்குக் காரணம் என்ன? ஏனெனில் எந்தப் பொருளிலும் வர்ணம் இல்லை. நிறமுள்ள வஸ்துக்களைத்தான் நாம் காண முடியும். சூரிய கிரணங்கள் பகல் நேரத்தில் பொருள்களை ஊடுருவிச் செல்லும். ஒவ்வொரு பொருளிலும் அதனதன் அடுக்குகள், அணுக்கள் அல்லது பரமாணுக்கள் வெவ்வேறு விதமாக அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு பொருளும் வெள்ளை நிறத்தை அதன் ஏழு அம்சங்களாகப் பிரித்து, சில வர்ணங்களை கிரகித்துக்கொண்டு ஒரு குறிப்பிட்ட வர்ணத்தை வெளியில் வீசுகிறது. தள்ளப்பட்ட வர்ணம் அந்தப் பொருளின் வர்ணமாகிறது. அப்போது இன்னின்ன வஸ்து இன்னின்ன வர்ணமுடையது என்கிறோம். உண்மையில் ஒரு பொருளுக்கு ஒரு நிறமும் இல்லை. ஆனாலும் நாம் ''இது பச்சை இலை, இது நீலத்துணி. இது சிவப்புக்கல்'' என்கிறோம். இது எல்லாம் மாயீகம்; பொய்யே.

ஒரு பொருள் ஒரு மனிதனுக்கு இன்பம் அளிக்கிறது. அதே பொருள் இன்னொரு மனிதனுக்குத் துன்பம் விளைவிக்கிறது. ஒருவனுக்குப் பால் வெறுப்பாய் இருக்கிறது. இன்னொருவனுக்குப் பாலில் அபரிமிதமான பிரியம். பெண்களுக்கு ஆண்களிடம் ஆசை. ஆண்களுக்குப் பெண்களிடம் பிரியம். ஒட்டகத்துக்குக் கசப்பான வேப்பிலையில் பிரியம். மனிதனுக்கு வேப்பிலையிடம் வெறுப்பு. தேவர்களுக்குப் பகலில் விருப்பம். அசுரர்களுக்கு இரவில் விருப்பம். உண்மையில் எந்தப் பொருளிலும் இன்பமாவது துன்பமாவது இல்லை. இது எல்லாம் மனக்கற்பனை மட்டுமே.

துணி எதால் ஆக்கப்பட்டிருக்கிறது? நூல் களால். நூல்களால் துணி நெய்யப்படுவதற்கு முன் ஆரம்பத்தில் என்ன இருந்தது ? நூல். இந்தத் துணியை அதன் பாகங்களாகப் பிரித்தால் என்ன நிற்கும்? நூல்தான், ஆரம்பத்திலும், இடை யிலும் முடிவிலும் என்ன இருக்கிறது? நூல். துணி எப்போது தோன்றிற்று ? இடையில்தான். நூலுக்கு வேருக துணி ஏதாவது உண்டா? இல்லை. இது இப்படியானல், இடையில் என்ன வந்தது? துணியின் உருவமும் துணி என்னும் பெயரும் உண் மையில் துணி என்னும் பொருளேயில்லாதபோது, துணியின் பெயரும் ரூபமும் எப்படி வந்தது? துணி பொய் அல்லது மாயீகமே. நூலே நிஜமானது. ஆனல் நூல் பஞ்சைத் தவிர வேறில்லை. நூல் உண்டாவதற்கு முன்னும், நூல் அழிவதற்குப் பின்னும், நூல் தோன்றும்போதும்கூட அதெல் லாம் பஞ்சுமாத்திரமே. நூலும் பொய்யே.

இதேபோல் எல்லாப் பொருள்களும் பொய்யே. பானை பொய். களிமண்தான் முக்காலத்திலும் இருப்புள்ளது. நீர் ஜலவாயுவின் இரண்டுபங்கும் பிராணவாயுவின் ஒரு பங்கும் சேர்ந்த கலவை மாத்திரமே. இவ்விரு வாயுக்களும் இன்றி தனித்த நீர் இல்லை. நீர் பொய்யானதும் மாயீகமுமானது. ஜலவாயு கலப்பின்றி பிராணவாயு தனித்திருந்தால் உலக முழுதும் கண் இமைக்கும் நேரத்தில் எரிந்து விடும். பிராணவாயு நெருப்பின் மற்ருெரு உரு வமே. உபநிஷத்துகள் வாயுவிலிருந்து அக்கினியும் அக்கினியிலிருந்து நீரும் உண்டானதாகக் கூறு கின்றன.

சனி, சுக்கிரன், நெப்த்யூன். யுரேனஸ், பிரகஸ்பதி, பூமி முதலிய கிரகங்கள் சூரியனைச் சுற்றி வருகின்றன. நாம் பார்க்கும் நட்சத்திரங் கள் சூரியனைவிடப் பல மடங்கு பெரியவை. எண்

ணற்ற நட்சத்திரங்களும் சூரியன்களும் நம் கண்களுக்குத் தென்படாமல் இருக்கின்றன. உண்மை அப்படியுள்ளபோது நாம் இச்சிறு உலகத்தை மட்டும் இருப்பதாக நம்புகிறோம். இது பொய் அன்றோ ?

பரமாணுக்கள், பரமாணுக்களைச் சுற்றி மிகுந்த வேகத்தோடு சுற்றுகின்றன. ஒரு சிறு கற்பாறை எண்ணற்ற பரமாணுக்களின் சேர்க்கை. ஆனால் நம் பார்வைக்கு கல் ஒரு அசையாப் பொருளாகப் புலப்படுகிறது. ஒவ்வொரு பொருளும் அசையும் பரமாணுக்களின் பிண்டமே.

திடப்பொருள்களில் பரமாணுக்கள் சிறிய வட்டத்தில் சுழலுகின்றன. திரவப் பொருள்களில் அவை விரிவான வட்டத்தில் சுழலுகின்றன. காற்றில் பரமாணுக்கள் வெகு சுயேச்சையாக இயங்குகின்றன. ஒரு ஈயத்துண்டை உருக்கினால் பரமாணுக்கள் வெகு சுயேச்சையாக இயங்குகின்றன. நாம் நீரைக் காய்ச்சினால் நீரின் பரமாணுக்கள் மிக அதிக சுயேச்சையுடன் இயங்குகின்றன. நீர் ஆவியாக மாறுகிறது.

காட்டில் ஒரு மூங்கில் இன்னொரு மூங்கிலோடு உராயும்போது மூங்கில்களின் பரமாணுக்கள் மிக வேகமாகச் சுழலத் தொடங்குகின்றன. தீ உண்டாகிறது. தீ என்பது பரமாணுக்கள் பயங்கர வேகத்துடன் சுழல்வதேதான். நாம் ஒரு நெருப்புச் சுவாலையில் ஒரு காகிதத்தை நீட்டினால் சாதாரண வேகத்தில் சுழன்ற காகிதத்தின் பரமாணுக்கள் பயங்கர வேகத்தில் சுழலத் தொடங்குகின்றன. காகிதத்தின் பரமாணுக்கள் நெருப்பின் உருவத்தை அடைகின்றன. அப்போது காகிதம் எரிகிறது என்று நாம் சொல்கிறோம். தேகத்தின்

எந்தப் பாகமாவது நெருப்பைத் தொடும்போது, சர்மத்தின் பரமாணுக்களும் உள் இருக்கும் ஜீவாம்சங்களும் பயங்கர வேகத்தில் சுழலத் தொடங்குகின்றன. அப்போது நாம் தேகம் தீப்பட்டது என்கிறோம். மனமும் சூக்ஷ்ம பரமாணுக்களின் சேர்க்கை அல்லது மூட்டையே. மனம் எப்போதும் உடலோடு சேர்க்கப்பட்டிருக்கிறது. தீப்பட்ட பாகத்தின் பரமாணுக்கள் மிக வேகத்தில் சுழலும்போது மனமும் மிகவேகத்தில் சுழலுகிறது. மிகுந்த வேகத்தில் மனம் சுழலுவது அல்லது மனதின் அலைபாயும் நிலையே வருத்தம். மனதின் சாந்த நிலையே இன்பம். நெருப்பு, வெப்பம், துன்பம் ஆகியவை யாவும் சூக்ஷ்ம பரமாணுக்களின் வெவ்வேறு நிலைகள். ஆகவே இவையனைத்தும் பொய்யானவையே. கண் பார்க்கும் பொருள்கள் யாவும் பஞ்ச பூதங்கள் அல்லது மூலப்பொருள்களால் ஆக்கப்பட்டவை. பூதங்களின் நானுவிதச் சேர்க்கையால் எண்ணற்ற பொருள்கள் உண்டாக்கப் படுகின்றன. மூலப்பொருள் பரமாணுக்களின் சேர்க்கையேயன்றி வேறில்லை. பரமாணுக்கள் வெவ்வேறு அடுக்குகளில் அமைந்துள்ளன. ஆகவே அடுக்குகளின் அமைப்பை அநுசரித்து வெவ்வேறு பூதங்கள் இருக்கின்றன. நாம் பரமாணுக்களுக்குள் பார்க்கும்போது மூலப்பொருள்கள் பொய்யானவை. இப்பரமாணுக்கள் அநுலோம பிரதிலோம மின்னணுக்களாலானவை. மின்னணுக்களுக்கு வேருக பரமாணுக்கள் இல்லை. இவற்றைக் கருதுமிடத்து பரமாணுக்களும்கூட பொய்யே. பரமாணுக்கள் ஆகாசம் அல்லது ஈதரைத் தவிர்த்து வேறில்லை; பரமாணுக்கள் ஆகாசத்தின் அம்சங்களே. ஆகாசத்தைத் தவிர வேறு பொருள்கள் எல்லாம் பொய்யே. ஆகாசமும் ஆத்மா அல்லது பிரம்மம் அல்லது பரம் பொருளினின்று உண்டானதே. ஆதலின் எங்கும்

வியாபித்த, சச்சிதானந்தமான நமது சொந்த சொரூபமான அல்லது முக்கிய இயல்பான ஆத்மாவே உண்மை அல்லது மெய்ப்பொருள். பார்ப்பவையாவும் பொய் அல்லது மாயீகமே. இதுவே உபநிஷத்துக்களின் ஸ்பஷ்டமான உறுதிமொழி.

பொருள்கள் அவை தோன்றுபவை போன்றன அல்ல. ஏன்? நாம் வெளி வஸ்துக்களைப் பார்ப்பதில்லை. கண்கள் வஸ்துக்களைப் பார்க்கமுடியாது. கண்கள் உண்மையில் வஸ்துக்களைப் பார்க்கக் கூடுமானுல் அவை காற்றையும் ஆகாசத்தையும் கூடப் பார்க்கவேண்டும். கண்கள் இரவில்கூட வஸ்துக்களைப் பார்க்கவேண்டும். இருட்டில்கூட வஸ்துக்கள் உள்ளன. காற்றும் ஆகாசமும்கூட வஸ்துக்களே. அவை ஏன் இருளில் புலப்படுவதில்லை?

கண்கள் வஸ்துக்களைப் பார்க்கமுடியாவிட்டால், ஜனங்கள் ஏன் "உன் எதிரில் உள்ள மலை வெகு உயரமாக இருக்கிறது. யானை பெரிதாக இருக்கிறது. இந்தச் சிறு பூனை ஓடுகிறது" என்று சொல்லுகிறுர்கள். நாம் வர்ணங்களை மட்டும்தான் பார்க்கிறோம். ஆனுல் வஸ்துக்களையே பார்ப்பதாக எண்ணுகிறோம். உண்மையில் நாம் வஸ்துக்களை பார்க்கவில்லை. தூரத்திலுள்ள வட்டமான வஸ்துவை நாம் தட்டையாகக் காண்கிறோம். நாம் சுவரில் வர்ணச் சித்திரத்தைப் பார்த்தால் சுவரில் ஒரு படம் தொங்கவிட்டிருப்பதாக எண்ணுகிறோம். கண்கள் ஒரு வஸ்துவைப் பார்த்தால் இத்தவறு ஏன் நேருகிறது? கண்கள் வர்ணங்களை மட்டுமே பார்ப்பதால்தான் இந்தத் தவருன எண்ணம் உண்டாகிறது.

கண்ணுடியைப்போல் ஒளிவீசும் கண்களின் மீது வர்ண ஜாலங்கள் விழும்போது அவை கண்ணினுட்படலத்தின் மீது வீசுகின்றன. கண்

கள் வர்ணங்களின் உருவத்தை அடைகின்றன. பயிர் நிலங்களில் பாயும் ஏரிநீர் அந்நிலத்தின் உருவத்துக்குத் தக்கபடி முக்கோணமாகவோ, வட்டமாகவோ நீண்ட சதுரமாகவோ ஆகிறதோ, அதேபோல் மனது பார்க்கும் இந்திரியத்தில் புகுந்து அதன் உருவத்தையும் வஸ்துவின் உருவத்தையும் அடைகிறது. [அஞ்ஞானியான ஜீவன், மனது அல்லது விஷயத்தின் உருவத்தை அனுபவிக்கிறது. இதேபோல மனது, காது முதலிய இந்திரியங்களின் உருவத்தை ஜீவன் அடைய மனது அல்லது விஷயத்தின் உருவ அநுபவத்தை அடைகிறது.]

இதைக் கவனியுங்கள். வெளி வஸ்துக்கள் வர்ணமற்றவை. வஸ்துவுக்குள் ஊடுருவிச் செல்ல முடியாத வர்ணம் பிரதிபலிக்கப்படுகிறது. அது கண்ணுள் படலத்தின்மேல் விழுகிறது. கண் அந்த வர்ணத்தின் உருவத்தை அடைகிறது. அப்போது மனம் அந்த இந்திரியத்தின் உருவத்தை அடைகிறது. ஜீவன் இதை உணர்கிறது அல்லது அநுபவமடைகிறது. வஸ்து எங்கே? ஜீவன் என்ன அநுபவத்தை அடைகிறது? அது அவயவத்திலிருந்து மனதுக்கும் மனதிலிருந்து ஜீவனுக்கும் செல்கிறது. அது வெவ்வேறு வாயில்கள் மூலம் செல்கிறது. ஆகவே ஒன்றினுல் உணரப்படுவது பொய் அல்லது மாயீகமே.

வஸ்துக்கள் வெளியில் இருக்கின்றனவா இல்லையா? ஈசனே அறிவார். அவை மனிதனில் எதையும் உண்டாக்கவில்லை. மனத்தினுல் உண்டாக்கப்பட்ட வஸ்துக்கள் இன்பதுன்பத்தை உண்டாக்குகின்றன. மனத்தின் கற்பனை அல்லது பிரமையே இன்பதுன்பங்களை உண்டுபண்ணுகின்றன. மோகம், பேராசை, பிரமை, கர்வம் ஆகியவை வெளியில் இல்லை. அவை மனதில்தான் இருக்கின்றன. அவை உண்மையில் இருப்புள்ள

வையல்ல. மனதுதான் இம் மாறுதல்களைக் கொள்கிறது. இவற்றின் மூலம் மனிதன் பெருந் துன்பத்தை அடைகிறான். மனது கற்பனை செய்து கொண்டு 'வெளியில் ஒரு அழகான பொருள் இருக்கிறது. நான் அதைக் கைப்பற்றி வைத்துக்கொள்ள முடியுமா?' என்று எண்ணுகிறது. மனதில் ஒரு சங்கல்பம் எழுகிறது. பிறகு அம் மனிதனின் இதயம் இளகுகிறது. அவன் அவ்வஸ்துவைப்பற்றி இடைவிடாமல் எண்ணுகிறான். இரவில் ஒரு மரத்தின் கிளை இப்படியும் அப்படியும் அசைகிறது. ஒரு மனிதன் அதை பேயாக எண்ணிப் பீதியடைகிறான். அவன் தன்னைப் பேயடித்ததாக எண்ணி, இரத்தம் கக்கி இறந்து விடுகிறான். ஒவ்வொன்றும் மனக் கற்பனையும் பொய்யுமே. உலகத்தின் இயல்பையும் உடலின் இயல்பையும் மாயீகமென்று நாம் உணர்வதில்லை. ஆகவே நாம் ஜனன மரணமாகிய சம்சார சக்கரத்தில் அகப்பட்டிருக்கிறோம்.

ஆத்மா ஒன்றே உண்மை. அது நித்தியமானது. அது சச்சிதானந்த ஸ்வரூபம். கடலில் அலை எழுவதுபோல், ஆத்மா அல்லது பிரம்மத்திலும் அலையெழுகிறது. அவ்வலையே மனம். மனக் கற்பனை மூலம் தோன்றுவதே துயரத்தையும் ஜனன மரணத்தையும் அளிக்கும். உலகம் மனத்துக்குப் பிறப்பிடம் அல்லது உற்பத்திஸ்தானம். ஆத்மா, மனமின்றேல் உலகமில்லை. உலகத்துக்குப் பிறப்பிடம் மனம். ஆத்மாவை விட்டு வேறாக மனம் இல்லை. மனத்தை விட்டு வேறாக உலகம் இல்லை. உலகத்துக்கும் ஆத்மாவுக்கும் இடையில் மனம் இருக்கிறது. அது மத்தியில் உளது. மனம் அலைந்தால், துக்ககரமான, மானசீகமான உலகம் தோன்றுகிறது. மனம் சாந்தமுற்று அதன் உற்பத்திஸ்தானத்தில் ஒடுங்கினால் நாம் சச்சிதானந்த ஆத்மாவை அறியலாம். மனதை வெல்வதற்கு

கடவுளின் கிருபையும் குருவின் அருளும் நமக்கு வேண்டும்.

குருவினிடமும் கடவுளிடமும் பக்தி செலுத்து வதன் மூலம் நாம் மனத்தை அடக்கவேண்டும். ஆத்மாவின் பிரகாச ஸ்வரூபமே கடவுள். கடவுளின் அநுக்கிரக ரூபமே குரு. கடவுளிடம் பக்தி செய்து அவர் அருளை அடை. அவர் அருளால் குருவை அடையலாம். குருவின் உபதேசத்தின் மூலமும் கருணையின் மூலமும் பிரம்மத்தின் இயல்பை உணர்ந்து மனத்தைக் கட்டுப்படுத்த லாம். இந்த உபதேசங்களை நம்பிக்கையும் பக்தியும் கொண்டு மாறுபாடின்றிக் கடைப்பிடிக்கவேண்டும். அவருக்கு முழுமனதுடன் சேவை செய்து சச்சிதானந்த சொரூபத்தில் விஸ்ராந்தி யடைவீர் களாக.

''ஆத்மாவைத் தவிர்த்து ஒவ்வொரு பொரு ளும் மாயீகமும் பொய்யுமானதால் கடவுளும் குருவும்கூடப் பொய்யே. பொய்யான கடவுளிட மிருந்தும் குருவினிடத்திருந்தும் நமக்கு என்ன நன்மை கிடைக்கும்?'' இங்கு கூறப்படும் விஷயம் கூடப் பொய்யே. இந்தப்பொய் விஷயங்களை நம்பி ஒருவன் உயர்ந்த நன்மையை எவ்வாறு அடைய முடியும்?'' என்று சிலர் ஆக்ஷேபணை செய்யக்கூடும்.

முள்ளை முள்ளால் வாங்குவதுபோல் துணியின் அழுக்கை வேறொரு அழுக்காகிய வழு மண்ணால் போக்குவதுபோல், இரும்பை இன்னொரு இரும் பால் வெட்டுவதுபோல், இந்தப் பொய் விஷயங் களை அழிக்க நாம் மற்றொரு பொய் விஷயத்தைத் தான் பயன்படுத்த வேண்டியதாயிருக்கிறது. கனவில் காணும் ஒரு பொய் விஷயம் உண்மையான பயத்தை உண்டாக்கி நம்மை எழுப்புகிறது. சில வேளைகளில் நாம் என்ன கனவில் காண்கிறோமோ அது உண்மையாகி விடுகிறது. கடவுளும் குருவும்

பிரம்மத்தைப்போல் அவ்வளவு உண்மையல்லவெனினும், அவர்கள் நம்மை ஜனன மரணமாகிய சாகரத்தை அல்லது சம்சாரத்தைக் கடக்க உதவும் படகுகள். அவர்களது அருளின்றி அமரத்துவத்தையும் நித்தியானந்தத்தையும் நாம் அடைதல் இயலாது.

ஆத்ம ஸ்வரூபா! பிரம்மம் மாத்திரமே உண்மையில் உள்ளது. ஜீவர்களும் உலகமும் பொய். இந்தச் சிறிய ''நான்'' என்பதும் பொய். நாமரூபங்களுக்குமேல் கிளம்பு. இந்தச் சிறிய மாயீகமான அகங்காரத்தை அழி. மாயையைக் கடந்து செல். அவித்யையை அழித்துக்கட்டு. இடைவிடாமல் பிரம்ம சிந்தனையை அப்பியஸித்து உனது முக்கியமான சச்சிதானந்த ஸ்வரூபத்தில் விஸ்ராந்தி அடை.

பிரம்மத்தோடு ஒப்பிடும்போது இவ்வுலகம் உண்மையில்லாதது. உலகத்தில் ஈடுபட்ட ஆர்வம் மிக்க மனிதனுக்கு அது திடமான உண்மை. ஜீவன் முக்தனுக்கு அது எரிந்துபோன துணிபோல் உளது. தேகப் பிரக்ஞையைக் கடந்துவிட்ட விதேக முக்தனுக்கு உலகமேயில்லை. விவேகி அல்லது விசாரித்தறியும் மனிதனுக்கு அதன் வசியமும் கவர்ச்சியும் போய்விட்டன. உலகம் உண்மையில்லை என்று நீ இப்போது உணர்ந்து விட்டதாலேயே நீ உலகத்தைத் துறந்து காடு செல்ல முயற்சிக்க வேண்டாம். தகுந்த யோக்கியதைகளின்றி காடுகளில் புகுந்தால் நீ கெட்டுப்போவாய். உலகம் பொய்; பிரம்மமே மெய் என்ற நம்பிக்கை உன்னிடம் உரம்பெறவேண்டும். இது உனது வைராக்கியத்தையும் மோட்சத்தில் தீவிர இச்சையையும் வளர்க்க உதவும். உலகத்தில் இரு; ஆனால் உலக வாழ்க்கையில் முழுகிவிடாதே. உலகத்தில்

இருந்துகொண்டே மோட்சத்தையடையப் பிரயாசைப்படு.

நண்பர்களே! மாயாவாதத்தையும் அஜாதி வாதத்தையும் குதர்க்கம் செய்துகொள்ளாதீர்கள். மோட்சத்துக்குரிய நான்கு சாதனங்களையும் (சாதன சதுஷ்டயம்) அடைந்து ஒரு சத்குருவை அணுகி சாஸ்திரங்களை உபதேசிக்கக் கேளுங்கள். சிந்தனை செய்யுங்கள். தியானம் செய்து ஆத்மாநுபவத்தையடையுங்கள்.

---

## 13. ஸ்வராட் அல்லது சுயாதிபதி ஆகுக.

சச்சிதானந்த ஸ்வரூபராயும், சித்தத்தின் வ்ரித்திகள் அல்லது குணங்கள் யாவற்றிற்கும் மௌனமான சாட்சியாயும், வேதாந்த சாரமாயும், பிரம்ம ஸ்வரூபமாயும், பிரம்மத்தோடு ஒன்றுபட்டவராயும், நித்தியானந்த சாகரத்தில் திளைத்தவராயும் உள்ள சத்குருவுக்கு வணக்கங்கள்.

பரப்பிரம்மமானது நித்தியமாய், புனிதமாய், எல்லாம் அறிந்ததாய், சுயாதீனமாய், பூரணமாய், இரண்டற்றதாய், பின்னமற்றதாய், எங்கும் வியாபித்ததாய் எல்லையற்றதாய் இருப்பது.

ஒன்பது வாயிலுள்ள இந் நகரத்தில் ஜீவன் அல்லது ஜீவாத்மா உறைகிறான். அவித்யை அல்லது அறிவின்மையாகி அவன் தனது முக்கிய தெய்வீக ஸ்வரூபத்தை மறந்துவிட்டான். பிரம்மத்தினிடமிருந்து அவனைப் பிரிக்கும் திரை காரணமாக பரம்பொருளை அவன் காணமுடியவில்லை. விக்ஷேபசக்தி மனத்தை அலைக்கக் காரணமாயுளது. அதனால் அவன் ஆத்மாவில் தாரணம் செய்ய முடியாதவனாயிருக்கிறான்.

அஹங்காரம் அவனது அமைச்சன். இருபத்து நான்கு தத்துவங்கள் அவனது குடும்பத்தினர். பிரமாத்ரா, பிரமாணம், பிரமேயம் ஆகியவை அவனது மூன்று குமாரர்கள். வித்தேஷணு, தாரேஷணு, புத்ரேஷணு ஆகிய மூன்றும், ஆறு வகைகளான (ஷட்ரிபு) காமக்குரோத லோப மத மாச்சரியம் ஆகியவையும் அவனிடமிருந்து ஆத்ம ஞானமாகிய அரும்பொருளை அபகரித்துச் சென்றன. அவன் எல்லாப் பற்றுதல்களுக்கும் ஆளாகிவிட்டான். அவன் மூன்று தாபங்களால் எரிக்கப்படுகிறுன். நம்பிக்கை கொள்ளுதல் என்னும் காற்றினுல் அவன் அவ்வழியில் கொண்டு செல்லப்படுகிறுன். அவன் தேகப்பற்றுதல் என்னும் மூடுபனியால் மூடப்பட்டிருக்கிறுன். அவன் ''நான் செய்பவன் (கர்த்தா). நான் அனுபவிப்பவன் (போக்தா)'' என்னும் எண்ணங்களால் மயக்க முறுகிறுன். அவன் பஞ்ச கோசங்களாகிய சுகங் களால் பீடிக்கப்பட்டிருக்கிறுன். அவன் சிற்றின் பங்களாகிய ஆழ்ந்த நித்திரை நிலையில் வீழ்ந் துள்ளான்.

மனிதா! இப்போது இவ்விடுக்கண்களை ஒழித்து நித்யானந்தமாகிய பரம லட்சியத்தை அடைய நான் உனக்கு வழி காட்டுகிறேன். கவனமாகக் கேள். நாள் தவறுமல் ஜபம் செய். பலனை எதிர் பார்க்காமல் தன்னலமற்ற தொண்டு செய். கர்த்ருத்வ அபிமானத்தை விட்டுவிடு. உன் கர்மங்கள் யாவற்றையும் ஈசுவரார்ப்பணமாக்கு. பக்தியை வளர். பகவத் கிருபையாகிய பெருநதி யின் கரைகளில் சரவண மனனமாகிய சித்தாசனத் தில் நிதித்யாசனமாகிய ஆலமரத்தின் கீழ் எப்போதும் நிர்விகல்ப சமாதியில் எழுந்தருளி யிருக்கும் சத்குருவின் பாத கமலங்களில் சரண மடை. பக்தியால் நனைந்து அவரை நமஸ்கரி.

அவர் உன்னை உயர்த்துவார். அவர் உனக்கு ஊக்கமூட்டி உனது சந்தேகங்களையும் பாதையிலுள்ள சிக்கல்களையும் நீக்கி அருளி நீ ஆத்ம ஸ்வராஜ்யத்தை அடைய உதவி செய்வார். அவர் உன்னைச் சுதந்திரனுக்குவார்.

அன்புக்குரிய இராமா! அஹங்காரத்தாலும் ஆசைகளாலும் நீ நினது நிஜஸ்வரூபத்தை மறந்து விட்டாய். நீ புனிதமான அழிவற்ற நித்தியனுன ஆத்மா. நீ அதுவாக இருக்கிருய். ''தத் துவம் அஸி''. மோகம் அல்லது பிரமைக்கு மேலாக கிளம்பு. இந்த அசுத்தமான, அழிவுள்ள தேகத்தோடு ஒன்றுபடுவதை ஒழி. சத்குருவின் பாத கமலங்களில் பக்தியாகிய கங்கையில் ஸ்நானம் செய்.

காமம், குரோதம் முதலிய கள்வர்களைக் கொல்லு. ''நான் செய்பவன், நான் இன்பம் நுகர்பவன்'' என்ற எண்ணத்தை விட்டுவிடு. உலகம் உண்மையற்றது என்னும் எண்ணத்தில் நிலைபெறு. இதுவே உனக்குப் பிராணுயாமப் பயிற்சி. முதிதா, கருணை, உபேக்ஷை, சமம், தமம் ஆகியவற்றுடன் நட்புக்கொள். வாசனுக்ஷயம் என்னும் வில்லில் மனோநாசம் என்னும் அம்பை பூட்டு. மூன்று தடைகளான பிரதிபந்தத்திரயம் என்னும் காட்டைக் கொளுத்து. வைராக்கியத்தைக் கேடயமாகவும், விவேகத்தைத் தலைக்கவசமாயும், உபரதியை இரத்தின ஹாரமாயும், சமாதானம் அல்லது ஏகாக்கிர சித்தத்தை உனது துணிவுள்ள துணைவனுயும், பிரம்மாநுசந்தானத்தைக் கவசமாயும், சத்சங்கத்தை உனது நல்லமைச்சனுகவும், ஜீவன் முக்தியை உனது வாழ்க்கைத் துணையாயும் கொள். சுயசாம்ராஜ்யம் அல்லது நிர்விகல்ப சமாதியாகிய அரியாசனத்தில் ஆரோகணி. ஸ்வராட் அல்லது சுயாதிபதியாக ஆவாயாக. அழிவற்ற பதவியாகிய அமுதத்தை

அல்லது பிரம்மமாகிய நித்தியானந்தத்தைப் பருகு. பிரம்ம ஞானத்தால் முடிசூடப்பட்டு, நீ நித்திய மானதும், புனிதமானதும், சர்வவியாபியானது மான ஆத்மா தான் என்றறி. உன்னைத் தவிர்த்து வேறில்லை. நீ அதாக இருக்கிறாய்.

---

## மூன்றும் பாகம்

# 1. பிரம்ம வித்தையும் உபநிஷத்துக்களும்

வேதாந்தம் எனப்படும் தத்வார்த்த சம்பிர தாயம் உத்தரமீமாம்ஸை என்றும் கூறப்படும். வேதாந்த சம்பிரதாயமாகிய தத்துவத்தை உண்டாக்கியவர் பாதராயண வியாஸர். பூர்வமீமாம்ஸ சம்பிரதாயத்துக்குக் கர்த்தா, வியாஸரின் சிஷ்யராகிய ஜைமினியாவர். இவை இரண்டில், பூர்வமீமாம்ஸை என்பது பொதுவாக வேதங்களின் மந்திர பாகத்தைக் குறித்த விசாரணை யாகவும், உத்தரமீமாம்ஸை வேதங்களின் உபநிஷத்துப் பாகத்தைக் குறித்த விசாரணை யாகவும் கொள்ளப்படுகிறது. வேறுவிதமாகக் கூறுமிடத்து பூர்வமீமாம்ஸை கர்ம காண்டத்தைப் பற்றியும், உத்தரமீமாம்ஸை ஞான காண்டத்தைப் பற்றியும் எடுத்துரைக்கின்றன. பாதராயணர் அல்லது ஸ்ரீ வியாஸரின் பிரம்ம சூத்திரங்கள் வேதாந்த தர்ஸனம் என்று சொல்லப்படுகின்றன. அவை வேதத்தின் முடிவு அல்லது அந்தமாகிய உபநிஷத்துக்களை அடிப்படையாகக் கொண்டிருப்ப தால் இப்பெயர் வந்தது. முரண்பாடாகத் தோன்றும் உபநிஷத்து வாக்கியங்களை பாத ராயணர் ஒன்றுபடுத்தும் பொருட்டு இப்பிரம்ம சூத்திரங்களை இயற்றினார். பிரம்ம சூத்திரங்களுக்கு

ஸ்ரீ சங்கராச்சார்யர் எழுதிய பாஷ்யம் (உரை) சாரீரக பாஷ்யம் எனப்படுகிறது.

வேதங்கள் ஒவ்வொன்றும் ஸம்ஹிதை பிராம்மணம், ஆரண்யகம், உபநிஷத் என்ற பாகங்களுடையவை. அவை மீண்டும் கர்ம காண்டம் அல்லது கர்மத்தைப்பற்றிக் கூறும் பாகம், ஞான காண்டம் அல்லது ஞானத்தைப்பற்றிக் கூறும் பாகம் என இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. முதற் கூறப்பட்டது மனிதனை சுவர்க்கம் அல்லது வானுலகில் இன்பங்களையும் போகங்களையும் துய்த்த பின்னர் திரும்ப உலகத்துக்குக் கொண்டுவருகிறது. இரண்டாவது மோட்சம் அல்லது முக்தியை அளிக்கிறது. ஸம்ஹிதையும் பிராம்மணம் என்னும் பிரிவுகளும் சேர்ந்தது கர்ம காண்டமாகும். ஆரண்யக உபநிஷத்துப் பிரிவுகள் ஞானகாண்டமாகும். பிரம்ம வித்யை அல்லது பிரம்மத்தை அடைவதற்குரிய ஞானம் உபநிஷத்துக்களில் எடுத்துரைக்கப்படுகிறது. வேதங்களின் முடிவாகிய பாகம் அல்லது வேதாந்தமே உபநிஷத்துக்கள். ருக் வேதமும் மற்றவைகளின் பிரிவுகளின்மூலம் வேதங்கள் நான்கு எனப்படும். அவற்றின் கிளைகள் பல. அதுபோல்தான் உபநிஷத்துக்களும். ருக் வேதத்தில் இருபத்தொரு கிளைகள் உண்டு. யஜுர் வேதத்தில் 109 கிளைகளும், சாம வேதத்தில் 1000 கிளைகளும், அதர்வண வேதத்தில் ஐம்பது கிளைகளும் உண்டு. ஒவ்வொரு கிளையிலும் ஒரு உபநிஷத் உண்டு. ஸத் என்னும் மூலமொழிக்கு உப, நி என்னும் அடைமொழிகளைச் சேர்ப்பதால் உபநிஷத் என்னும் சொல் ஏற்பட்டிருக்கிறது. ஸத் என்றால் (1) அழி அல்லது கொல்லு, (2) அடை, (3) தளர்த்து என்று பொருள். உபநிஷத் என்னும் சொல்லால் உரை கூறப்படும் நூலினுல் உபதேசிக்கப்படும் அறியக்கூடிய வஸ்துவைப் பற்றிய ஞானம்

என்பதாம். இந்தச் சொல்லிலக்கண முறையால் தெளிவாக்கப்படுகிறது. பார்த்த கேட்ட பொருள்களின் மீது பற்றுதல் இன்றி முக்தியை நாடுபவர்களது, அஞ்ஞானம் முதலிய சம்சார வித்தை அது அழித்துவிடுவது என்னும் அர்த்தம் உள்ளதால் இந்த ஞானம் உபநிஷத் எனப்படுகிறது. இச் சாதகர்களால் உபநிஷத் என்னும் ஞானம் அடையப்படுகிறது என்பது மேலே விவரிக்கப்படும். அவர்கள் அதன் மீது மனதை உறுதியாக நிலைநாட்டி அதையே தியானிக்கிறார்கள். ஏனெனில் "தான் மரணத்தின் வாயிலிருந்து விடுதலை செய்யப்படுவோம் என்று நன்றாக உணர்ந்து" என்பதும் பிறகு கூறப்படும். அல்லது முன் கூறப்பட்ட முக்தியை விரும்பும் மனிதர்களை பிரம்மத்தை அடைய வழிகாட்டுகிறது அல்லது அடையச் செய்கிறது என்னும் விஷயத்தால் பிரம்மஞானம் உபநிஷத் என்று சொல்லப்படுகிறது. பிரம்மத்தை அடைந்து பழுதற்றவனும் அழிவற்றவனும் அவன் ஆகிறான் என்பதும் பிறகு கூறப்படும். அல்லது மூலமொழியின் "தளர்த்து" என்னும் அர்த்தத்துடன் சேர்க்கை காரணமாக உபநிஷத் என்றால் "அக்கினி பற்றிய ஞானம்" என்றும் கூறலாம். ஏனெனில் முதல் உண்டான, ஞானியாயும், பிரம்மத்திடம் பிறந்தவனுமுள்ள அக்கினிபற்றிய ஞானம் இரண்டாவது வரமாகக் கேட்கப்பட்டது. அது ஸ்வர்க்கத்தை அளித்து கர்ப்பவாஸம், ஜனனம், மூப்பு முதலிய உலகத்தில் திரும்பத் திரும்ப உண்டாகும் துக்கத்தை தளர்த்துகிறது". அல்லது பலமற்றதாக்குகிறது. "ஸ்வர்க்கத்தை அடைந்து, அவர்கள் அமரத்துவத்தை அநுபவிகிறார்கள்" என்பதும் பின்னால் கூறப்படும். மாணவர்கள் "நாம் உபநிஷத்தை ஓதுவோம் அல்லது போதிப்போம்" என்னும்போது, உபநிஷத் என்ற சொல்லை அந்த நூலுக்கும் அளிக்

கிறார்களே என்று கேட்கப்படலாம். உபநிஷத் என்பது மூலத்துக்கு அர்த்தமான சம்சார காரணத்தைக் கொல்வது என்பதும் நூலுக்கு மட்டும் பொருந்தாது. அந்த ஞானத்துக்கேதான் பொருந்தும். மேலும் ''நெய் உயிரே'' என்று அது சொல்லுவதுபோல் அந்தச் சொல்லால் அந்த நூலைக் குறிக்கலாம். ஆகவே இது தவறல்ல. ஞானத்தைக் குறிக்க உபயோகிக்கும்போது உபநிஷத் என்னும் சொல் அதன் முக்கியார்த்தத்தில் உபயோகிக்கப்படுகிறது. அது மரியாதைக்காக அல்லது மறு அர்த்தத்தில் அந்த நூலைக் குறிக்கவும் உபயோகிக்கப்படுகிறது. இவ்வாறு உபநிஷத் என்ற சொல்லின் பதச் சேத விளக்கத்தாலேயே, ஞானத்தை அடையப் பூரண பரிபக்குவமானவர்கள் யாவர் என்பதும் கூறப்பட்டது. பிரம்மத்தை அடைவதன் மூலம் சம்சார பந்தத்திலிருந்து பூரண விடுதலையே ஞானத்தின் முழு விஷயம் என்பதும் கூறப்பட்டது.

ஷத் என்னும் மூலத்தின் பல பொருள்களுடன் முன் வரும் உப-நி என்னும் அடைமொழியோடு உபநிஷத் என்பதன் அர்த்தம் பின்வரும் காரணங்களால் இருக்கலாம். கர்ப்பம், ஜனனம், முதுமை, நோய் முதலிய எண்ணற்ற தீமைகளை இந்த பிரம்ம ஞானத்தைக்கொண்டு அதை நம்பிக்கையோடும் பக்தியோடும் அணுகுபவர்களுக்குக் குறைக்கக் காரணமாயிருக்கிறது. அல்லது அது அவர்களைப் பிரம்மத்தை அடையச் செய்கிறது. அல்லது சம்சாரத்துக்குச் காரணமாகிய அஞ்ஞானம் முதலியவற்றை அடியோடு அழிக்கிறது.

ஸ்ரீ ராமர் ஹனுமானுக்குக் கூறுவது: ''முடிவான முக்தியை அடைவதற்கு ஒரே மார்க்கம் மாண்டூக்ய உபநிஷத் மட்டுமே. எல்லாச் சாதகர்களுக்கும் மோட்சத்துக்கு அதுபோதும். அதனால்

ஞானம் கிட்டாவிட்டால், உபநிஷத்துக்களை அடிக்கடி ஓது; உனக்குச் சீக்கிரம் ஞானம் வந்து என் பதவியை அடைவாய். அஞ்சனையின் மகனே உனது ஞானம் திடமாகாவிட்டால், 32 உபநிஷத் துக்களை நன்ருகப்படி. நீ விடுதலை பெறுவாய். உனக்கு விவேக முக்தி முந்தி வேண்டுமாயின் 108 உபநிஷத்துக்களையும் ஆழ்ந்துபடி''.

உபநிஷத்துக்கள் ரிஷிகளின் யோகாநுபவங் களாம். உபநிஷத்துக்கள், கீதை, பிரம்ம சூத்திரங் கள் ஆகியவை சாஸ்திர பரிபாஷைப்படி பிரஸ் தானத்திரயம் எனப்படும். இவை ஹிந்து தத்துவ சாஸ்திரத்தைப்பற்றிய மூன்று பிரமாண கிரந் தங்கள் ஆகும். தன்னை ஆசார்யர் என்று சொல்லிக் கொள்ளும் ஒவ்வொரு ஆசிரியரும் நூதன சமயத்தைத் தொடங்க விரும்புவரும் இம் மூன்று முக்கிய நூல்களுக்கும் பாஷ்யம் எழுதியாக வேண்டும். முன்னிருந்த ஸ்ரீ சங்கரர், இராமா நுஜர், மத்வர் ஆகிய மூவரும் இந்த நூல்களுக்கு உரை செய்துள்ளார்கள்.

---

## 2. பிரம்மம்

''ஏகம் சத் விப்ர பஹுதா வதந்தி — இருப்பு ஒன்றே, ஞானிகள் அதைப் பல பெயர்களால் வழங்குகின்றனர்'' ருக்வேதம் 1-164-146. என்று வேதங்கள் நினைவுக்கு எட்டாத காலத்திலிருந்து முறையிடுகின்றன. கடவுள், பிரம்மம், அல்லா, ஈஸ்வரன், ஜெஹோவா, அஹுர்மஜ்தா முதலிய எல்லாம் ஒன்றே. அந்தப் பரம்பொருளுக்கு, நித்தியமான ஒரே தன்மையதான சாரப் பொரு ளுக்கு, ஆனந்தமும் அறிவும் நிறைந்த அபின்னப் பொருளுக்கு எதை அறிவின் வேறுபாட்டால்

ஞானிகள் பல்வேறு முறைகளில் வர்ணிக்கிறார்களோ அதற்கு, நான் வணக்கம் செலுத்துகிறேன்.

ஆரம்பத்தில் இரண்டாவது இல்லாத ஒன்றாகிய பிரம்மம் மட்டுமே இருந்தது. இருள்மீது இருள் புரண்டுகொண்டிருந்தபோது இருப்பு மட்டுமே இருந்தது. இப்பிரபஞ்சம் எப்படி உண்டாயிற்று என்று யாருக்கும் தெரியாது. ருக்வேதத்தில் "இங்கே இந்த நானாவிதமான பிரபஞ்சம் எங்கிருந்து உண்டாயிற்று என்று யார் அறிவார்? யாரால் கூறமுடியும்? தேவர்கள்கூட அதன் சிருஷ்டிக்குப் பிற்பட்டவர்கள். ஆகவே இது எப்படி வெளி வந்தது என்று யாருக்குத் தெரியும்?'' என்று கூறப் படுகிறது. (ருக்வேதம் VIII-17-6).

ஆத்மா மட்டுமே உள்ளது. பழுது பாம்பாகத் தோற்றமளிப்பதுபோல் அது நாம் பார்க்கும் பொருள்களாகத் தோற்றமளிக்கிறது. ஆத்மாவே காணப்படும் இப் பொருள்களாகக் காட்சியளிக்கிறது. அந்தப் பிரம்மமே எல்லா உயிர்களுள்ளும் உறையும் ஆத்மா. அந்தப் பிரம்மம் காரண காரியம் அற்றது. உள்ளும் புறமும் ஒன்றுமில்லாதது, தவறு அல்லது அசுத்தம் இல்லாதது, நீளமாவது அகலமாவது இல்லாதது. வர்ணமாவது உருவமாவது இல்லாதது. அப்பிரம்மத்துக்கு அங்கங்களாவது, பாதங்களாவது, பெயராவது, ஜாதியாவது, கை, கால்களாவது இல்லை. அப் பிரம்மம் அறிவு, அமைதி, ஆனந்தம் ஆக உருக்கொண்டது. அது தனக்குத்தானே பிரகாசிக்கிறது. அது சுயம் ஜ்யோதியானது. வெளியில் நீ காணும் எல்லாப் பொருள்களும் உண்மையில் பரமாத்மாவில் இருப்புள்ளவை. எல்லாப் பொருள்களும் அதன் பின்னே பிரகாசிக்கின்றன. அதாவது அவை சுயம் ஜோதியான ஆத்மாவினிடமிருந்து ஒளியை இரவல் வாங்குகின்றன. உலக முழுதும் பிரம்மத்

தினுள் இருப்புக் கொண்டிருக்கிறது. கண்ணுடியில் நமது தேகம் தெரிவதுபோல், அது மாயையின் சக்தி மூலம் வெளியில் உள்ளதாகத் தோன்றுகிறது.

பிரம்மத்தின் மகிமையையும் பெருமையையும் எப்படி வர்ணிக்கக்கூடும். வேதங்கள்கூடத் தங்கள் குறுகிய சக்திக்குத்தக்கபடி பிரம்மத்தைப் புகழ்ந்து பாடியிருக்கின்றன. அதன் ஆதியையும் அந்தத்தையும் யாரும் கண்டுபிடிக்க முடியவில்லை. அது கால்களின்றி நடக்கிறது, கைகளின்றிப் பற்றுகிறது, காதுகளின்றி கேட்கிறது, கண்களின்றிப் பார்க்கிறது, நாவின்றி ருசிபார்க்கிறது, மூக்கின்றி முகர்கிறது, சர்மமின்றி ஸ்பரிசிக்கிறது, வாயின்றிப் பேசுகின்றது. ஏனெனில் அது புனிதமான ஞானப் பிண்டம். அது சர்வவியாபி. அதற்கு எங்கும் கைகளும், கால்களும், கண்களும், தலைகளும், முகங்களும் உள்ளன. அது ஒரு அற்புத வஸ்து. அது மனதுக்கும் வாக்குக்கும் அப்பாற்பட்டது. நீ அதை இந்த ஊனக் கண்களால் காண முடியாது. ஆனுல் சித்தத்தைக் கெட்ட போக்குகள் யாவற்றினின்றும் தூய்மைப் படுத்திய பிறகு உனது கூர்மையான, சூக்ஷ்ம புத்தியின் உதவியால் அதை அறியக் கூடும்.

கண் அதைக் காணமுடியாது. மனது அதை எட்ட முடியாது. ஸ்தூலமான லௌகீக புத்தி அதைக் கைப்பற்ற முடியாது. வாக்கு அதை வர்ணிக்க முடியாது. ''அதைப்பற்றி விவரிக்கும் முயற்சிகளில் நாங்கள் தோல்வியுற்ருேம். அதன் மகிமை விவரிக்கவொண்ணுதது. அதை விவரிப்பது அதை மறுப்பதாகும்'' என்று கூறி அதைப் போதுமான சொற்களால் விவரிக்க முடியாததால் வாக்கு மனதுடன் கூடத்திரும்பி விடுகிறது. வரையறையுள்ள மனம் வரையறையற்றதை எவ்வாறு கிரகிக்கமுடியும்? ஆனுல் சாதன சதுஷ்டயங்கள்

கைவரப்பெற்று இடைவிடாமல் தியானம் செய்யும், கூர்மையான தூய அறிவு உள்ள சாதகனுல் அதை நேர்முகமாக உணரமுடியும்.

மகான்கள், ''பிரம்மம் அல்லது நித்திய வஸ்து அது பிரிவினையற்றதற்கும் மேற்பட்டது.'' ''அது காரண கார்யமின்றி பிறப்பற்றது,'' ''அது வாக்கு மனமும் தோல்வியுற்றுத் திரும்பும்படியான வஸ்து'' ''இது அல்ல அது அல்ல — நேதி, நேதி என்று சொல்லும்படியானது'' முதலியவற்ருல் உறுதியாகப் பிரகடனப்படுத்துகிருர்கள். அது உண்மையான நிபந்தனைகளற்ற சத்து. உண்மையிலும் உண்மை (ஸத்யஸ்ய ஸத்யம்).

பிரம்மம் ஞானமயமான பிண்டம் (சித்கன, விஞ்ஞானகன, ப்ரக்ஞானகன). அது வேறுகுணம் குறிகள் ஏதுமில்லாதது. அது எவ்வகையான வேறுபாடும் இல்லவே இல்லாதது. பிருஹதாரண்ய உபநிஷத் IV–13 இல், ''ஒரு உப்புக்கட்டி எப்படி உட்புறம் வெளிப்புறம் என்பதின்றி முழுதும். ஒரே ருசியுள்ளதோ, அதேபோல் இவ்வாத்மா உட்புறம் வெளிப்புறம் இன்றி முழுதும் ஞானமயமான பிண்டம்'' என்று கூறுகிறது. ஒரு உப்புக் கட்டிக்கு உட்புறத்திலும் வெளிப்புறத்திலும், உவர்ப்பு என்ற ஒரே ருசி உள்ளதோ, அதேபோல் பிரம்மத்துக்கு உட்புறத்திலும்சரி வெளிப்புறத்திலும்சரி ஒரே ஞானம்தான் இருக்கிறது. உட்புறமும் வெளிப்புறமும் மனதின் சிருஷ்டி மாத்திரமே. மனது அமைதியில் உருகும்போது, உட்புறம் வெளிப்புறம் என்ற எண்ணங்கள் மறைந்து விடும். ஞானி வரையறையற்ற, ஒரே தன்மையதான ஞானமயமான பிண்டம் ஒன்றையே உணர்கிருர்.

ஆகாசம் அல்லது ஈதர் சூக்ஷ்மமானது, எங்கும் வியாபித்து, பற்றற்றது. ஆகவே அது

பிரம்மத்துக்கு ஒப்பிடப்படுகிறது. சுருதிகள் உறுதி யாக், ''ஆகாசவத்ஸர்வகதநித்ய'' அ த ா வ து ஆகாசத்தைப்போல சர்வ வியாபி நித்தியம் என்று முறையிடுகின்றன. குடம் உடைந்தால் குடத்தி லுள்ள ஆகாசம் எந்த விதத்திலும் மாறுது. ஆகவே அது பற்றற்றது (அசங்க).

எப்படி வீடு யாரோ ஒருவர் உபயோகத்துக் காக இருக்கிறதோ, அதேபோல் காதுகள், கண்கள் கைகால்கள் ஆ கி ய வை காது கண்கள் முதலிய வற்றின் நிர்வாகியின் உபயோகத்துக்காக இருக் கின்றன. அந்த நிர்வாகி காது கண்கள் முதலிய வற்றினின்று மு ற் றி லு ம் வே று ன வ ர். அந் நிர்வாகியே உண்மையான எல்லையற்ற ''நான்'' ஆகும்; அவரே ஆந்த்ரீக ஆட்சிகர்த்தா. அவர் அழிவற்றவர். அவர் புனிதப்பிரக்ஞை, காதுகளின் கேட்கும் சக்தியும், கண்களின் பார்க்கும் சக்தியும் இ ந் த நி ர் வ ா கி யி ன் அறிவை ஆதரவாகக் கொண்டவை. ச ந் தி ர ன் த ன து ஒ ளி யை ச் சூ ரி ய னி ட த் தி லி ரு ந் து பெறுவதுபோல், இந்த இந்திரியங்கள் தங்கள் ஒளியை அதாவது அறிவை உற்பத்தி ஸ்தானத்திலிருந்து அதாவது நிர்வாக கர்த்தாவின் ஆத்மாவினிடமிருந்து அடைகின்றன. ஆகவே ஆத்மாவானது காதுகளின் காது, கண்ணின் கண் பிராணனின் பிராணன், மனத்தின் மனம் என்று கூறுவது முற்றிலும் சரியானதே.

ஆத்மா அறியக் கூடியதிலிருந்து வேறுபட்டது. அவர் அறியக்கூடாததற்கு கூட அப்பாற்பட்டவர். அவர் அறியக்கூடாதவர் அப்படியென்றுல் அவர் அபாயம், சூன்யம், இல்லாத மரீஞபாவம் அல்லது அத்யாத்மீகக் கருத்து மாத்திரமே என்று அர்த்த மல்ல. அவர் ஞானமயமான அல்லது புனிதப் பிரக்ஞை மயமான பிண்டம். கல், பிளாடினம் அல்லது பொன்னைவிட ஞானம் அடர்த்தியானது.

அவர் ஒருவரே உண்மையான உயிருள்ள வஸ்து, எல்லாவற்றிற்கும் அடிப்படை.

---

## 3. பிரம்மன் இருக்கிறார்

காரணமின்றிக் காரணமாயும், இவ்வுலகத்துக்கும் இந்திரிய உறுப்புகளுக்கும் மனதுக்கும் பிராணனுக்கும் உற்பத்திஸ்தானமாயும் உள்ள அந்த இரண்டற்ற பிரம்மத்துக்கு வணக்கங்கள்! சாஸ்திரங்களிலும் ஞானாசிரியரிடமும் சிறந்த நம்பிக்கையும் கடவுளிடம் உள்ளதுபோல் பரமபக்தியும் அவர்களிடம் வைத்தவர்களாய், எந்த புனித புத்தி படைத்த மனிதர்களால், ஸ்ரவண, மனன நிதித்யாஸனம் என்னும் வைதிகமுறைகள் மூலம் எவர் உணரப்படுகிறாரோ, எவர் நமது இதயங்களில் அந்தர்யாமியாக உள்ளாரோ, அன்னாருக்கு வணக்கங்கள்!

பின்வரும் காரணங்களால் பிரம்மம் என்பது இல்லையென்று பிரேரிபிக்கப்படுகிறது :— இருப்பது எதுவும் குடம் முதலியவற்றைப் போல் அதன் சிறப்பான குணங்களால் இந்திரியங்கள் மூலம் காணக்கூடும். இல்லாதது, உதாரணமாக முயல் கொம்பு, ஆகாயத்தாமரை முதலிய அவ்வாறு அறியப்படா. அதன் சிறப்பான குணங்களால் பிரம்மம் அறியப்பட மாட்டாதாதலால் அது அறியப்படவில்லை. பிரம்மமே ஆகாசம் முதலியவற்றிற்குக் காரணமானதால், இந்த வாதம் சாஸ்திரீயமானதுமல்ல, நிலைத்து நிற்கக்கூடியதுமல்ல. பிரம்மம் இருப்புள்ளதல்ல என்று கூறமுடியாது, ஏனெனில் ஆகாசம் முதலியவற்றிற்குக் காரணமான பிரம்மம் இந்திரியங்களால் உணரப்படுகிறது. உலகத்தில் எதிலிருந்து ஒருவஸ்து உண்டாகிறதோ அது இருப்புள்ளது என்று அறிகிறோம். உதாரண

மாக குடம், மரம் முதலியவற்றிற்குக் காரணமான களிமண் விதை முதலியன இருப்புள்ளன. ஆகவே ஆ கா ச ம் முதலியவற்றிற்குக் காரண பூதமான பிரம்மமும் இருப்புள்ளதே. உ ல கி ல் இல்லாத திலிருந்து பிறந்த எதையும் நாம் இந்திரியங்களால் காண முடியாது. நாமரூபம் முதலிய இல்லாத திலிருந்து உண்டானவையாயின், அவை இந்திரியங் களுக்குக் கோசரமாகா. ஆனுல் அவை அவ்வாறு புலப்படுகின்றன. ஆகவே பிரம்மம் உள்ளதே. சுருதியும் ''இல்லாததிலிருந்து ஏதாவது எப்படி காணும்?'' என்று கூறுகிறது. இல்லாததிலிருந்து ஒரு பொருளை எப்படி உண்டாக்குவது என் ப து ச ரி ய ா ன வாதமே. ஆகவே பிரம்மம் இருப்பு உள்ளது என்பதே உசிதமாகிறது.

உனது தலைமயிரின்மீது உனக்கு அதிகப்பிரியம் இருக்கிறது. நீ தினமும் அதை அழகாக வாரி கூந்தல் தைலம் தடவிக் கொள்கிருய், ஆனுல் அதே மயிர் ஒரு கிண்ணப்பாலில் விழுந்தால் அதை வீசி எறிகிருய். அதைத்தொட உனக்குப் பிடிக்கவில்லை. மயிரிடம் பிரியம் வைப்பதில், உனது ஆத்மாவையே தான் நீ நேசிக்கிருய். மயிரானது ஜீவனில் தேகத் தோடும் அத்தேகத்தின் பின் உள்ள சைதன்யம் அ ல் ல து பிரக்ஞையோடும் சம்மந்தப்பட்டிருப்ப தால் அழகாகத் தோன்றுகிறது. நீ ஒரு பட்டுப் புடவையைக் கடையில் பார்த்தால் கவர்ச்சிகரமாக இல்லை. ஆனுல் அதுவே ஒரு மங்கையின் உடலில் இருந்தால் கவர்ச்சிகரமாகவும், அழகாகவும் இருக் கிறது, ஏ னெ னி ல் அது இப்போது சைதன்யத் துடன் சம்பந்தபட்டிருக்கிறது. இ தி லி ரு ந் து ஆத்மா இருக்கிறது என்றும் அந்த ஆத்மா அழகே உருக்கொண்டது என்றும் தெரிகிறது.

பெரிய மன்னனை சாதாரண ம னி த ர் க ளு ம் பயிர்த் தொழில் செய்'யும் குடியானவர்களும் காண

முடியாது. ஆனால் அதே மன்னனை திவான், தாசில்தார் முதலிய பெரிய உத்தியோகஸ்தர்கள் தினமும் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். இதிலிருந்து அவர்கள் நாட்டுக்கு உயர்ந்த அதிபனான அரசன் ஒருவன் இருக்கிறான் என்று அறிகிறார்கள். இதேபோல், எல்லாவற்றிற்கும் பிறப்பிடமும் எல்லா ஜீவர்களுக்கும் அந்தர்யாமியுமான பரமாத்மாவைப் பார்க்கமுடியாது. அவரது உயர்ந்த மகிமையையும் வாக்குக் கெட்டாத தேஜஸையும் வெளிக்காட்டும் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலிய மற்ற அற்புதமான இப் பிரபஞ்ச வஸ்துக்களையும் பார்த்து நாம் அவரது இருப்பை ஊகித்துக் கொள்ளலாம்.

மூச்சு விடுதல் முதலியவற்றிற்கும் சிற்றின் பங்களுக்கும் கூட உற்பத்தி ஸ்தானமாக பிரம்மம் இருக்கிறது என்று சுட்டிக்காட்டவே, சுருதி பிரம்மமே இரண்டுக்கும் காரணம் என்று காட்டத் தொடங்குகிறது.

இதன் காரணமாகவும் பிரம்மம் இருக்கிறது. எதன் காரணமாக ? ஏனெனில் மூச்சு விடுதல் முதலிய பல்வேறு செயல்களும் காணப்படுகின்றன. இவ்வுடலில் பிராணன் அபானன் ஆகியவற்றின் உதவியால் மேல் சுவாசமும் கீழ் சுவாசமும் நடக்கின்றன. பிராணன்கள் புலன்கள் இவற்றின் வேலைகள் தேகமும் புலன்களும் சேர்ந்துள்ளதால் நடைபெறுகின்றன. ஒரு தனி வியக்தியின் நன்மையின் பொருட்டு பரஸ்பரச் சார்பாக இந்தக் கூட்டுறவு சுதந்திரமான ஒரு அறிவுள்ள பொருளின்றி நடைபெற முடியாது, ஏனெனில் வேறு விதமாக நாம் அதைப் பார்த்ததில்லை. உதாரணமாக மணல், சுண்ணும்பு, செங்கற்கள், அவற்றிற்கு வெளியிலிருந்து வீட்டுக்கு எஜமானனுகக்

குடிபுகப் போகும் ஒரு அறிவுள்ள ஜீவனின்றி, தாங்களே கூடி வீடாகமாட்டா.

வெவ்வேறு பூதங்களின் சேர்க்கை அவசியமாக சேரும் பூதங்களிலிருந்து முற்றிலும் வேருன வியக்தியின் பொருட்டேயிருக்கவேண்டும். உதாரணமாக, வெவ்வேறு பொருள்கள் சேர்த்துக் கட்டப்படும் ஒரு வீடு, அப்பொருள்களிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஒரு மனிதன் அல்லது வேறு ஏதாவது உயிருள்ளது வாழ்வதற்கேயாம். ஆகவே வெவ்வேறு பொருள்களாலான இத்தேகம் அவசியமாக அப்பஞ்ச பூதங்களிலிருந்து முழுதும் வேறுபட்ட ஒன்றிற்காகவே ஆக்கப்பட்டதாகும். பிரகிருதி அல்லது ஜட பதார்த்தத்தின் வெவ்வேறு மாறுபாடுகளால் உண்டாக்கப்பட்ட தேகத்தில் வசித்தாலும், அதனின்று முற்றிலும் வேறுபட்ட புருஷன் அல்லது புனிதமான ஞானத்வத்தின் இருப்பை நிரூபிப்பதற்கு சாங்கிய சம்பிரதாயத்தாரால் கைக்கொள்ளப்படும் வாதங்களில் இது ஒன்ருகும்.

ஆத்மா ஈண்டு இந்த தேகமாகிய மாளிகையில் உறையும் அரசனுகவும், அவன் பொருட்டு புலன்களாகிய வெவ்வேறு உத்தியோகஸ்தர்கள் முறைப்படி தங்கள் கடமைகளைச் செய்வதாகவும், கொள்ளப்படுகிறது.

ஆனந்தமும் உல்லாஸமும் (ரஸம்) உருக்கொண்டதாயும், நமது இருப்புக்கு மையமாயும், நமது வாழ்க்கைக்கும் புலன்களின் செயல்களுக்கும் இருப்பிடமாயும் பிரம்மம் உள்ளது என்று சுருதி பறையறைகிறது. பிரம்மமின்றி, கண் காண முடியாது, காது கேட்கமுடியாது, பிராணன்கள் முறைப்படி தங்கள் தொழில்களைச் செய்ய முடியாது. இருப்பின் முடிவும் குறிக்கோளும் அல்லது வாழ்க்கையின் இலட்சியம் நித்தியானந்தமயமாகிய பிரம்மத்தை அடைவதே. மனிதன் நிலைத்த இன்

பத்தை வேண்டுகிறுன். அஞ்ஞானம் காரணமாக அவன் அதை வெளி விஷயங்களில் தேடுகிறுன். இந்தத் திசையில் அவன் தோல்வியுறுகிறுன். பிறகு அவன் விவேகத்தை உபயோகித்து, உள்ளே தேடத் தொடங்கி மனதை உட்புறம் திருப்பித் தன்னையே அல்லது ஆத்மாவையே தியானித்து அழிவற்ற ஆனந்தத்தைக் கண்டு கொள்ளுகிறுன். சிற்றின்பப்பிரியன் கொள்ளும் மார்க்கம் உயர்ந்த ஆனந்தத்தின் இருப்பிடத்தை நோக்கிச் செல்லும் கோணலான வழியே. வாழ்க்கையில் ஒவ்வொரு நிமிஷமும் சச்சிதானந்த பிரம்மம் ஒன்றை மட்டும் நோக்கிச் செல்வதற்கே.

இந்த ஆனந்தம் இருதய குகையில் சிரேஷ்ட ஆகாசத்தில் இல்லாவிட்டால், உண்மையில் உலகத்தில் யார் மூச்சு விடமுடியும்? ஆகவே பிரம்மம் உளது.

பிரம்மமானது அறிவற்றவனின் அச்சத்துக்குக் காரணமாயும் அறிவாளியின் அச்சமின்மைக்குக் காரணமாயும் உள்ளது. இருப்புள்ள ஏதோ ஒன்றுடன் தன்னை ஒட்டிக்கொண்டு ஒருவன் பயமற்றவனுக ஆகலாம். பயத்தினின்று நீக்கம் இருப்பில்லாத ஒன்ருல் அடையமுடியும் என்பது வாதத்துக்குப் பொருந்தாது. இருப்பில்லாத ஒரு வஸ்துவை அடைந்து பயமின்மை உண்டாகவே உண்டாகாது.

ஆத்மாவை அறிந்தவன் ஆத்மாவிலேயே லயித்திருக்கும்போது, அவன் தனக்குச் சொந்தமான சச்சிதானந்த ஸ்வரூபத்தில் சாந்தியடைந்திருக்கும்போது, அவன் வேறு எதையும் பார்ப்பதுமில்லை, கேட்பதுமில்லை, ருசி பார்ப்பதுமில்லை. நீ இன்னொருவனிடம் பயப்படலாம், ஆனுல் உன் ஆத்மாவிடமே பயப்படவேண்டியதில்லை. தன்னையே (தன் ஆத்மாவையே) எங்கும் காண்

பவனுக்கு பயம் எப்படியிருக்க முடியும்? ஆகவே அறிபவனுடைய பயமின்மைக்கு பிரம்மமே காரணம். இவ்வுலகில் பயத்துக்குப் பல்வேறு காரணங்கள் இருக்கும்போது, அறிபவர்கள் அல்லது ஜீவன் முக்தர்கள் பயமற்றவர்களாயிருக்கிருர்கள். அறிபவன் அல்லது ஞானியை எல்லாப் பயங்களி னின்றும் நிவர்த்தி செய்கிற பிரம்மம் இல்லா விட்டால், பிராமணர்கள் பயமின்மையை அடைய முடியாது. ஆகவே இப் பிராம்மணர்கள் (பிரம்ம ஞானிகள்) பயமில்லாதவர்களாகக் காணப்படு வதால், அவர்களது பயமின்மைக்குக் காரணம் இருக்கவேண்டும்.

பயம், கவலே, விசாரம் ஏதுமில்லாத பரமானந்த மயமான பிரம்மத்தை நீங்கள் யாவரும் அடைந்திடுவீர்களாக; சமம், தமம், ஷட்சம்பத் முமுக்ஷுத்வம் ஆகிய சாதன சதுஷ்டயத்தைக் கைவரப்பெற்று ஸ்ரவண மனன நிதித்யாஸனம் செய்து, உயிர் வாழ்வதின் சிரேஷ்ட நன்மையை அதாவது வாழ்க்கையின் லட்சியத்தை நீங்கள் யாவரும் எய்துவீர்களாக!

---

## 4. சிருஷ்டி

எல்லா ஜீவர்களுக்கும் அந்தர்யாமியாயும், உலகத்தைப் படைத்துக் காத்துத் தன்னுள்ளே ஒடுக்குவதாயும், இந்த ஸ்தூலத் தோற்றத்துக்குப் பின்னுள்ள மாறுதலற்ற அடிப்படையாயும், கர்மேந்திரியங்கள் ஞானேந்திரியங்களின் செயல் களேயும் பிராணன்களின் வேலேயையும் நடத்து வதாயும், வெளி உலகத்து மேற்பூச்சான மாறுதல் களுள்ள எல்லா நிலேகளிலும் அதேபோல் இருப் பதாயும் ஒவ்வொருவருக்கும் ஆதாரமாயும், ஆறுதலாயும், வழிகாட்டியாயும், அடைக்கலமாயும்

உள்ள மிகப் பூஜிக்கத் தக்க சிரேஷ்டமான பரப் பிரம்மத்துக்கு வணக்கங்கள்.

இவ்வுலகிலுள்ள சிருஷ்டியைப்பற்றி யோசனை யுள்ள சாதகன் ஒருவன் பொதுவாகத் தன்னுள்ளத் துள் கொள்ளும் ஐயங்களில் சில:— உலகம் ஈஸ்வரனால் படைக்கப்பட்டதானால் அவர் அதே சமயத்தில் அகர்த்தாவாகவும் எப்படி இருக்க முடியும்? இப்போதைய பிறப்பு முன்கர்மாவின் பயனானால் முதல் மனிதன் எந்தக் கர்மாவைக் கொண்டு தன் வாழ்க்கையைத் தொடங்கினான்? உண்மையில் இவ்வுலகத்தைப் படைத்தது யார்? தத்துவசாஸ்திர மாணவன் விசாரணை செய்து கொண்டே போகும்போது அவனை இவைகளும் இன்னும்பல சந்தேகங்களும் துன்புறுத்துகின்றன. சாதனத்தில் ஒழுங்காயும், பகவானிடம் உள்ள தற்குச் சமமாக தன்ஆசிரியரிடமும் பக்தியுள்ள வனாயும் தெளிவான நுண்ணிய அறிவு படைத்த வனாயும் தினமும் சில நேரத்தைத் தியானத்தில் கழிப்பவனாயும் உள்ள சாதகனுக்கு எல்லாச் சந்தேகங்களும் சூரியனது ஒளியைப்போல் தெளிவாகிவிடும்.

சிருஷ்டி ஒரு மர்மம். சிருஷ்டி அனாதியானது (ஆரம்பமில்லாதது) சிருஷ்டி என்பது முன் இருந் ததையே வெளித்தள்ளுவது மாத்திரமே. அது பிரம்ம சங்கல்பம் மாத்திரமே.

க்ர்மத்தின் வழி மர்மமானது, கர்மம் அனாதி யானது. ஆத்மஞானம் கைவரப் பெற்றபோது தான் உனக்கு பிரமை தெளிந்து கர்மவாதம் சிருஷ்டிவாதம் முதலிய மற்ற மிஞ்சின கேள்வி களுக்கும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் முற்றிலும் தெளிவாக விடை கிடைத்துவிடும். உலகத்தை யாளும், சர்வவியாபகமான சட்டம் செய்யும் வேலைகளின் நுட்பங்களை, பலவீனமான மனித

புத்தியானது, சகஜ ஞானமும் பகவத் கிருபையும் உதவி புரிந்தாலன்றி கிரகிக்க முடியாது.

ஹிந்து மதமானது மனிதன், மிருகம் முதலிய அடங்கிய இவ்வுலகத்தைக் கடவுள் தமது லீலையாக (விளையாட்டாக)ப் படைத்தார் என்று போதிக்கிறது. தமது சங்கல்ப மாத்திரத்தால் (சிந்தனை சக்தி) அவர் உலகமுழுதையும் படைத்ததோடு நமது வேதங்களில், மனு என்னும் பெயரால் அறியப்படும் முதல் மனிதனையும் படைத்தார். பூரணமான மனிதன், தனக்குப் பின்வந்தவர்களின் பொருட்டு மனித வர்க்கத்துக்கு எல்லாச் சட்டங்களையும் அமைத்தான். இது மனு தர்ம சாஸ்திரம் எனப்படும். இதில் எல்லா தர்ம விதிகளும், நீதிகளும், அரசியலும் விஞ்ஞானமும், பிரபஞ்சம் ஒழுங்காக வேலை செய்வதற்குரிய எல்லாச் சட்டங்களும் அடங்கியிருக்கின்றன. முதல் மனிதனாகிய மனு, பகவானது பாகம் அல்லது அம்சம். அவன் தனது பூர்வ வினைகள் அல்லது கர்மா காரணமாக உற்பவித்தவன் அல்ல. மனு பிரம்மாவின் மானஸ புத்ரன் (சங்கல்பமாத்திரத்தால் உண்டான குமாரன்).

இவ்வுலகம் பகவானின் பிரத்யக்ஷமான தோற்றம். சிருஷ்டி இல்லாதபோது ஆரம்பத்தில் அவர் தனியாய் இருந்தார். சிருஷ்டிக்குப் பிறகும் அவர் பற்றுதலின்றியும் குடத்திலுள்ள ஆகாசம் போல் சுயேச்சையாயும் இருக்கிறார். மண் குடத்துக்கு உள்ளும் வெளியும் ஆகாசம் நிறைந்துளது எனினும் குடம் இருப்பதாலும் இல்லாததாலும் ஆகாசம் (ஈதர்) எவ்விதத்திலும் மாறுபாடு அடைவதில்லை. அதேபோல் பகவான் எல்லா ஜீவர்களுக்கும் உள்ளேயும் வெளியேயும் சர்வவியாபியாயும் நிறைந்து இருந்தாலும் எப்போதும் பற்றுதலின்றியிருக்கிறார். அவர் எல்லா ஜீவர்களது

செயல்களையும் நடத்தி வைத்தாலும் செய்யும் கர்த்தா அல்ல. அவர் உறுப்புகளின் நடவடிக்கை களுக்கு சாட்சிமாத்திரமே. அவர் உறுப்புகளுக்கு சக்தியையும் பலத்தையும் அளிக்கிறார். ஆ க வே அவரை கர்த்தர் எனலாம். ஆனாலும் அதே சமயத் தில் அவர் அகர்த்தா (செயலில்லாதவர்) அசங்கர் (பற்றுதலில்லாதவர்).

சிருஷ்டியைப்பற்றி வெ வ் வே று ஆசார்யர் களால் அல்லது வெவ்வெறு தர்சன கர்த்தாக்களால் வெ வ் வே று கொள்கைகள் கொள்ளப்பட்டிருக் கின்றன. கேவல அத்வைத மதத்தின் ஸ்தாப கரான ஸ்ரீ சங்கரர் சிருஷ்டி என்பது பகவானிடம் இயல்பாயுள்ள மாயீக சக்தியல்லது மா யை யே என்கிறார். சிருஷ்டி என்பது பாம்பு பழுதையின் மீது சுமத்தப்பட்டுள்ளது போலும், பாலைவனத் தில் நீர் சுமத்தப்பட்டுள்ளது போலும், சுமத்தப் பட்டிருப்பதே (அத்யாஸம்) என்று கூ று கி றா ர். பழுதையில் பாம்பாவது பாலைவனத்தில் நீராவது கிடையாது. பகவான் மாயையைத் தனது பூரண மான கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறார். ஜீவாத்மா மாயை அல்லது அவித்யையின் அடிமை. ஜீவன் அஞ்ஞான நிவர்த்தியை அடையும்போது, மாறு தலற்ற ஆத்மாவைப்பற்றிய அறிவை அடைகிறான்.

சிருஷ்டியைப்பற்றி உ ப நி ஷ த் து க் க ளா ல் இன்னும் வேறொரு கொள்கை ஆதரிக்கப்படுகிறது. இவ்வுலகம் எவ்வாறு படைக்கப்பட்டது? இதற்கு உபநிஷத்துக்கள் இவ்வாறு பதில் கூறுகின்றன:— குயவன் குடத்தை வனைவதுபோல் க ட வு ள் இவ் வுலகத்தைப் படைக்கவில்லை. ஆனால் மனிதனது உடலிலிருந்து உரோமம் வளர்வதுபோல் உலகம் கடவுளிடமிருந்து உண்டாயிற்று. மனிதன் தனது த லை யி லு ம் மு க த் தி லு ம் மயிர் வளர்வதை அறியாததுபோல், கடவுளிடமிருந்தே உ ல க ம்

தோன்றியிருந்தபோதிலும் உலக சிருஷ்டியை அவர் அறிவதுமில்லை. அதனால் யாதொரு மாறுதலும் அடைவதுமில்லை. பகவான் சிருஷ்டி விஷயத்தில் கர்த்தாவாகவும் அகர்த்தாவாகவும் இரண்டு விதமாகவும், இருப்பது இவ்விதத்தில்தான். சிலந்தி தன் உமிழ் நீராலேயே வலையைப் பின்னி முடிவில் அதைத் தன்னுள்ளேயே இழுத்துக்கொள்கிறதோ அதேபோல் பகவானுக்கும் உலக சிருஷ்டியின் பொருட்டு வெளி உதவி அவசியமில்லை. அவர் முடிவில் இப்பிரபஞ்சத்தைத் தம்முள்ளேயே கிரகித்துக் கொள்கிறார். அவர் சுயமான இருப்புள்ளவர் சுயம்ஜோதி. அவர் எல்லாம் நிறைந்தவர். அவர்தான் முக்கிய காரணம்.

ஸ்ரீ கௌடபாதாசார்யரால் தெரிவிக்கப்பட்ட அஜாதிவாதம் உலக சிருஷ்டி என்பதையே பூர்ணமாய் மறுக்கிறது. அவரது கொள்கைப்படி சிருஷ்டி என்பதே கிடையாது. இறந்த கால, நிகழ் கால, எதிர்காலங்களாகிய முக்காலங்களிலும் உலகம் என்பது இல்லை. பிரம்மம் மாத்திரமே உளது. அதில் வேறுபாட்டின் சுவடுகூட கிடையாது. கடவுள் மனிதன் பல்வேறு நாமரூபங்களுடன் கூடி உலகம் ஆகிய அஞ்ஞானத்தின் விளைவு மாத்திரமே. அவர் எதிர்வாதங்கள் யாவற்றையும் நிராகரித்து முக்காலத்திலும் சிருஷ்டியே கிடையாது என்று உறுதியாய்க் கூறி சந்தேகமின்றி நிரூபிக்கிறார். இன்றளவும் நிராகரிக்க முடியாமல் நிற்கும் வேதாந்த சாஸ்திரத்தின் உச்சநிலை ஈதேயாகும்.

சிருஷ்டியை உண்மையென்று நீ கருதினால் தான் அதை சிருஷ்டித்தது யார், அது எவ்வாறு சிருஷ்டிக்கப்பட்டது முதலிய கேள்விகள் எழுகின்றன. கூர்மையான பகுத்தறிவும் புத்தியில்லாதவர்களும், வேதாந்த உண்மைகளின் ஆழ்ந்த

முக்கியத்தை உணர்ந்து அந்த உபதேசங்களின் கருத்துப்படி வாழ முடியாதவர்களும்தான், இந்தச் சிக்கலான பிரச்னைகளோடு போராடுவார்கள். ஆயினும் அடிப்படையான உண்மையை அவர்கள் உணர்ந்த நிமிஷத்திலேயே பிரகாசமான விளக்கின்முன் இருளைப்போல் எல்லாச் சந்தேகங்களும் மறைந்து விடுகின்றன.

உலகம் சிருஷ்டிக்கப் படாததால், ''உலகத்தை யார் படைத்தது, அது எவ்வாறு ஏன் படைக்கப் பட்டது'' முதலிய கேள்விகள், நமக்குப் பூரண திருப்தியளிக்கும் வகையில் இதுவரையில் பதில் கூறப்படாமலே இருக்கின்றன. இருப்பு இல்லாத ஒரு வஸ்துவை எவ்வாறு வர்ணிப்பது? காக்கைக்கு எத்தனை பற்கள்? யானை எத்தனை முட்டை இடும்? பாலைவனத்தின் நீர் எவ்வளவு ஆழம்? முயலுக்கு எத்தனை கொம்புகள்? மலடிக்கு எத்தனை பிள்ளைகள்?'' போன்ற விஷயங்களை ஒருவர் ஏன் விவாதிக்கவேண்டும்? இவை பயனற்ற பொருந்தாத கேள்விகள்.

உண்மையில் ஜீவன் அல்லது ஜீவாத்மா தனது அஞ்ஞானமும் பிரமையும் காரணமாக இந்த நாமரூபங்கள் கொண்ட உலகத்தை சிருஷ்டித்துக் கொள்கிறான். அவன் தனது ஆத்மீக ஞானாசிரியர் அருளால் ஆத்ம ஞானத்தை அடையும்போது வெளி உலகத்தைத் தன்னுள் ஒடுக்கிக்கொண்டு தன்னையே எங்கும் காண்கிறான். அவன் எங்கும் ஏகீ பாவத்தைக் காண்கிறான். துவைத உலகத்தை நினைக்குங்கால் அவன் ஆச்சரியம் அடைகிறான். வேறுபாடுகள் கொண்ட உலகம் அவனுக்குக் கனவுபோல் தோன்றுகிறது. அவன் ஆச்சரியத்தோடு ''இந்த நிமிஷம் வரையில் என் கண் முன் காந்தியோடு மின்னிக்கொண்டிருந்த

மாயையின் மந்திர ஜாலங்கள் நிறைந்த இவ்வுலகம் எங்கே மறைந்துவிட்டது?'' என்று கூவுகிறான்.

---

## 5. மாயா வாதம்

வேதாந்தத்தின் அல்லது ஸ்ரீ சங்கரரின் கேவல அத்வைத சம்பிரதாயத்தின் முக்கிய சிறப்பாகிய மாயையின் உண்மையான கருத்தை நீங்கள் உணர முயலவேண்டும். மாயை என்னும் பெயர் ஸ்வேதாஸ்வர உபநிஷத்திலும் கீதையிலும் (VII-14 மமமாயா துரத்யயா—எனது தெய்வீக மாயை—) வருகிறது. ஸ்வேதாஸ்வர உபநிஷத் IV-10. மாயையே உலகத்துக்கு உபாதான காரணம் என்றும் அம் மாயையை உடையவர் பரமாத்மா என்றும் கூறுகிறது. மாயை என்பது ஆதியான ஜடப்பிரகிருதியில் ரஜோதமோ குணங்களால் ஒடுக்கப்படாத சுத்த சத்வமுள்ள பாகமே. வேறு சொற்களால் கூறுமிடத்து, சுத்த சத்யம் மேல் தூக்கி நிற்கும் பாகமே மாயை. உலகத்தை உண்மையானது என்று ஏற்றுக்கொள்ள முடியாத தால் அது மாயையாகக் கருதப்படுகிறது.

மாயை உண்மையில் இருக்கிறதா இல்லையா? அத்வைதி கூறும் பதிலாவது:— இந்த அறிவுக் கெட்டாத, விவரிக்க வொண்ணாத மாயை இருக் கிறது என்றும் கூறமுடியாது. இல்லையென்றும் கூறமுடியாது. அது இயற்கையின் சட்டத்தால் காரணம் கூறமுடியாத ஒரு விசித்திர சம்பவம். மாயை அநிர்வசனீயமானது அதாவது விவரிக்க வொண்ணாதது. அது பிரம்மத்தைப்போல் சத்தும் அல்லது மலடி மகன், முயல் கொம்பு, ஆகாசத் தாமரை ஆகியபோல் அசத்தும் (பொய்யும்) அல்ல. மந்திரவாதியினால் உண்டாக்கப்படும் அற்புதங்கள் உண்மையில் இருப்புடையவை

அல்ல. ஏனெனில் அவை சீக்கிரமே மறைந்து விடு கின்றன. மந்திரவாதிக்கு அது பிரமை மாத்திரமே என்று நன்ருகத் தெரியும். ஆனுலும் நாம் சிறிது நேரத்திற்காவது அந்த அற்புதங்களை அறிவதால், அவை இல்லவே இல்லையென்று கூற முடியாது. ஆகாசத்தாமரை போன்ற இருப்பே இல்லாத வஸ் துக்களைப் பற்றி நாம் ஒரு போதும் மனமார அறிவ தில்லை. பிரம்மத்தினிடமிருந்து வேருகக் கற்பனை செய்யப்படும் பிரபஞ்சமாகிய அற்புதமும் இதே போல் தான்; அது முத்துச் சிப்பியை வெள்ளியாகத் தவறுதலாய் எண்ணிக்கொள்வது போல்தான். வரையறை, இல்லாதது தன்னுள்ளிருந்தே, வரை யறையுள்ளதற்கு எவ்வாறு வெளி வருகிறது என்று எ ண் ணு வ து கடினமானது. ஒன்றுமில்லாத திலிருந்து மந்திரவாதி நம் எதிரில் ஒரு மாமரத்தை வர வழைக்கிருன். நாம் அதை விளக்கிக்கொள்ள முடியாத போதிலும், மரம் ஆண்டுளது. ஆகவே நாம் அதை மாயை அல்லது ஜாலம் என்கிருேம்.

பிரம்மத்தின் இயல்பை நாம் அறிவோமானுல் நாமரூபங்கள், வரையறைகள் யாவும் மறைந்து விடும். பிரம்மத்தினது எல்லையற்ற மெய்ப் பொரு ளின் சாரமான உண்மையாக உலகம் இல்லாத தனுல் அது மாயை, எவ்வாருே உலகம் இருக்கி றது, பிரம்மத்துடன் அதன் தொடர்பு விவரிக்க வொண்ணுதது (அனிர் வசனீயம்). பி ர ம் ம ஞானத்தை அடைந்தால் இப் பிரமை நீங்கிவிடு கிறது. பரமாத்ம ஞானம், உதயமானவுடன் மாயை முழுதும் மறைந்து விடுகிறது என்று ஞானி களும், ரிஷிகளும் வற்புறுத்திக் கூறுகிருர்கள். சுருதிகளும் அவ்வாறே பறையறைகின்றன. இந்த அர்த்தத்தில்தான் அதாவது ஒருபோதும் இருட்டி லும் ஒளியிலும் குறையாத, சுயமான இருப்பும் சுயம் ஜோதியும் உள்ளதான பிரம்மத்திற்கு எதிர்

வேறுபாடாக, ஆத்ம ஞானம் வந்தவுடன் இவ்வுலகம் மறைந்து விடுவதால் இந்த அதிசய உலகம் பொய்யானது (மித்யை) என்று கூறப்படுகிறது. நித்யவஸ்து எப்போதும் தன் சொந்த இயல்பிலேயே நிலை நிற்கிறது. அது தனக்கே சொந்த இயற்கையான புராதன மகிமையில் அமர்ந்துளது.

சுருதிகள் ''எல்லாம் உண்மையில் பிரம்மமே'' என்று உறுதி கூறுகின்றன. இது விடுதலை பெற்ற ஞானிகளின் அநுபவம். சாங்யர்களும் தார்க்கீகர்களும் ஆத்மாவின் உண்மை இயல்பை அறிவதாலும் ஆத்மாவைப் பிரகிருதியினின்று பகுத்து உணர்வதாலும் முக்தியடையப் படுகிறது என்று போதிக்கிறார்கள். நாமரூபங்கள் கொண்ட உலகம் ஒரு ஞானியின் பார்வையிலிருந்து முற்றிலும் மறைந்து விடுகிறது. இது ஒரு பிரமைதான்; இதை ஞானத்தால்தான் நீக்க முடியும். தவறுதலாய்ப் பாம்பாகக் கொள்ளப்பட்ட பழுதை, தெரிந்து கொள்ளப்பட்டவுடன் பாம்பு என்ற பிரமையான கருத்து நீக்கப்பட்டது. ஆகவே, ஆத்ம ஞானத்தால் நீக்கப்படும், பிரபஞ்சம்கூட பிரமையென்று ஐயப்பாடின்றி ஒப்புக் கொள்ளப்பட வேண்டும்.

செய்தித் தாள்களைப் படிப்பதை நீ முற்றிலும் நிறுத்தி ஒரு மாதத்துக்கு ஒரு அறையில் புகுந்து கொண்டு ஆழ்ந்த தியானத்தில் மூழ்குவாயானால் உன் உள்ளத்தில் உலகைப்பற்றிய வெகு லேசான ஞாபகம்தான் இருக்கும். படிப்படியாக இந்த லேசான ஞாபகமும் அழிந்துவிடும். இராகத்துவேஷமாகிய இரு போக்குகளின் லீலைதான் உலகமேயொழிய வேறில்லை. இவ்விரு போக்குகளும் அழிக்கப்பட்டால், உலகம் மறைந்துவிடும். உலகத்தில் ஆழ்ந்த மக்களின் மனம் தீவிர ஆசைகள், பற்றுதல், பிரமை ஆகியவற்றால் நிறைந்திருப்பதால் உலகம் உண்மையாகத் தோற்றமளிக்கிறது.

ஆரம்பத்திலேயே உலகம் பொய்யானது என்று கூறினால் சாதகர்கள் குழப்பமடைவார்கள் என்று, சில தத்துவ ஞானிகள் இவ்வுலகம் உண்மையானது என்று கூறுகிறார்கள். இந்தத் தடுமாற்றத்தைத் தடுக்கும் உத்தேசத்துடன்தான் பிரபஞ்சம் உண்மையானது என்று சொல்லப்படுகிறது.

## அவித்யை என்னும் கோட்பாடு

ஆதியான ஜடப் பிரகிருதியில் ரஜோதமோ குணங்களால் சத்வம் ஒடுக்கப்பட்டுள்ள பாகமே அவித்யையாம். இது மலின சத்வம் எனப்படும். ஏனெனில் ரஜோதமோ குணங்கள் ஆதிக்கம் அடைந்திருப்பது காரணமாக அது அசுத்தமாயுளது. மாயை ஈசனின் பிரதிபிம்பம். இது ஜீவனின் பிரதிபிம்பம். சத்வத்தின் ஆதிக்கம் காரணமாக மாயை சுத்த சத்வம் எனப்படுகிறது. அவித்யையின் சக்தி காரணமாகவே இந்த அனுபவமாகிய உலகம் உள்ளது. அவித்யையின் ஆற்றலே நம்மைச் சம்சார சாகரத்தில் ஆழ்த்துகிறது. அது நமது தெய்வீக இயல்பை நாம் மறக்கச் செய்யும் எதிர்மறையான சக்தி. அவித்யை மனத்தின் மூலம் வேலை செய்கிறது. மனமோ காலம், இடம், உற்பத்தி ஆகியவற்றின் மூலம் தொழில் புரிகிறது. தெய்வீகத்தைக் கோடிக்கணக்கான துண்டுகளாகச் சிதரப்படுத்தும் ஒரு மாயீக சக்தியே அவித்யை. இன்பம், துன்பம், ஆசை, கர்மம், கவர்ச்சி, வெறுப்பு, பிரமை, கர்வம், மோகம், அகங்காரம், கோபம், அசூயை, மூன்று சரீரங்கள், பஞ்சகோசங்கள் ஆகிய யாவும் அவித்யையின் விளைவுகளே. அவித்யையே அஞ்ஞானம், பாவம், துயரம் ஆகியவற்றிற்கு உற்பத்தி ஸ்தானம். அவித்யை ஆதியில்லாதது (அனாதி) ஆனால் அந்தமுள்ளது.

ஒருவனுக்கு ஆத்மஞானம் வந்தவுடன், அவித்யை முடிவடைகிறது. இருளில் பழுதை பாம்பாகத் தோன்றுவதுபோல், பிரம்மம் அவித்யை காரணமாக உலகமாகத் தோன்றுகிறது. நாம் விளக்கைக் கொணர்ந்தால், பாம்பு மறைந்து பழுதை மாத்திரம் நிற்கிறது. அதேபோல், நாம் பிரம்மஞானத்தை எய்தியவுடன், உலகத் தோற்றம் மறைந்துவிடும். அவித்யை எதிர்மறையானதல்ல. நேர்முகமானதே (பாவ ரூபம்). அது ஞானம் இல்லாமையே. அது தவறுதலான ஞானம். காரண சரீரத்தை உண்டாக்குகிற அவித்யை அல்லது அஞ்ஞானமே, ஸ்தூல சூக்ஷ்மமாகிய இரு சரீரங்களுக்கும் காரணமாம்.

அவித்யையின் இயல்பை இன்னதென்று அறிவது அசாத்தியம். அது அநிர்வசனீயம். அது ஆத்மஞானம் உதித்தவுடன் மறைந்து விடுவதால் உண்மையல்ல. அது பொய்யுமல்ல. ஏனெனில் முயல் கொம்பு, மலடி மகன் போலல்லாமல் அதை அநுபவத்தில் காண்கிறோம். அது ஆத்ம ஞானத்தால் அழிக்கப்படுவதால் சூன்யமல்ல. அவித்யையின் சக்தியால்தான் அறியாமையில் ஆழ்ந்த ஜீவன் அசுத்தமான அழிவுள்ள உடலைப் புனிதமான அறிவற்ற ஆத்மாவாகக் கொண்டு, ''நான் பிராம்மணன், நான் பண்டிதன், நான் ஒரு கிரகஸ்தன், நான் அழகானவன், நான் மெலிந்தவன், நான் வைத்தியன்'' முதலியவாறு கூறிக்கொள்கிறான்.

இந்த மயக்கும் அவித்யையின் எழுச்சிக்கு ஒரு விளக்கமும் கூறமுடியாது. எவ்வாறோ இது ஆச்சரியமாக இருப்படைந்து விட்டது. அதன் உற்பத்தியும் காரணவிளக்கமும் கூறுவது நமது சக்திக்கெட்டாததாயினும், மனஸ்திதியில் அது புரியும் வேலை தெளிவாகத் தென்படுகிறது. அவித்யை

பிரம்மத்தினது அல்ல. ஏனெனில் அது புனித ஞானமே உருக்கொண்டதாகும். சூரியனிடம் இருள் எப்படி இருக்கமுடியும்? அது ஆத்மாக்களுக்கு உரியதாகவும் இருத்தல் இயலாது. ஏனெனில் ஆத்மாக்கள் பிரம்மத்தினிடமிருந்து வேறல்ல. அவித்யை ஆத்மாவின் முக்கிய குணமாயின், அதை ஒருபோதும் நீக்கிக்கொள்ள முடியாது.

எவ்வாறே நீ அவித்யையின் கைப்பிடியில் அகப்பட்டுக்கொண்டிருக்கிறாய். ''இந்த அவித்யை எங்கிருந்து வருகிறது? கிம்ப்ராந்திக் ஞானம் ? யதிப்ராந்தி ஸகஸ்ய? — அவித்யை யாருடையது ? அவித்யை என்று ஏன் ஒன்று இருக்கவேண்டும்?'' என்னும் கேள்விகளால் மூளையைக் குழப்பாதே. இந்த சம்சாரத்தீ அல்லது அஞ்ஞான சாகரத்திலிருந்து வெளிப்பட முயற்சி செய். இதுவே உன் கடமை. இந்த சம்சார சாகரத்தைக் கடப்பதற்கு இரு வழிகள் உள. இவை புராதன ரிஷிகளாலும் ஞானிகளாலும் தெளிவாக வகுக்கப்பட்டிருக்கின்றன. உனக்கு ஆத்மஞானம் கைவந்தவுடன், பயங்கரமான அவித்யைப்பற்றிய ''ஏன், எப்படி'' என்பதன் இயல்பு தெளிவாக விளங்கும். கடுமையான வயிற்றுவலியால் துடிக்கும் ஒருவனுக்கு அவனது நண்பன் தக்க மருந்து கொண்டுவந்தால், ''நீ இம்மருந்தை எங்கிருந்து கொண்டுவந்தாய் ? அதில் என்னென்ன சேர்ந்திருக்கின்றன? அதன் விலையென்ன? அந்த மருந்தை யார் அளித்தது ?'' என்று விசாரித்துக் கொண்டிருப்பானா? அதை உடனே உட்கொள்ள மாட்டானா? உடை தீப்பற்றிக் கொண்ட மனிதன் அதை உடனே அணைக்க நீரை நாடி ஓடுவானேயன்றி ''இந்த நெருப்பு எப்படி வந்தது?'' முதலிய கேள்விகளை ஆராய்ந்து கொண்டிருப்பானா?

## மாயையும் அவித்யையும்

புத்தியின் பிரதிபிம்பமே மாயை. அதற்கு ஆரம்பமில்லை, அதை விவரிக்க முடியாது. அது ஜட உலகத்துக்கு முதற்காரணம். அது ஈஸ்வரன் அல்லது பரம் பொருளாகிய ஞானத்தோடு மட்டும் தொடர்புடையது. அம்மாயையின் எண்ணற்ற சிறு பாகங்களின் பிரதிபிம்பங்கள் உண்டாகின்றன. அப்பாகங்களுக்கு மறைக்கும் சக்தி வெளித் தள்ளும் சக்தி ஆகிய இரு சக்திகள் உண்டு. அவற்றிற்கு அவித்யை எனப் பெயர். இப்பிரதி பிம்பங்கள் ஜீவர்கள் எனப்படும்.

இந்த நோக்கத்தில் பார்க்குமிடத்து மாயையும் அவித்யையும் ஒரே பொருளாய் ஒன்றுக்கொன்று முழு வஸ்துவுக்கும் அதன் பாகங்களுக்கும் சம்பந்த முள்ளதாய்த் தோன்றுகிறது. முதலாவது ஈசனின் உபாதி, இரண்டாவது ஜீவனின் உபாதி (பிராக்ருத விவரணம்).

பஞ்சதசியின் ஒரு அத்தியாயமாகிய தத்வ விவேகத்தில், விஷயம் இவ்வாறு விளக்கப்பட்டிருக்கிறது:—

ஆதியான ஜடவஸ்து (மூலப் பிரகிருதி) மூன்று குணங்களும், (1) மாயை (2) அவித்யை ஆகிய இரு உருவங்களும் கொண்டது. அவ்வாக்கியப்படி, ''அந்த ஜட வஸ்து ஈசன் ஜீவன் இருவரின் பிரதி பிம்பங்கள் போன்ற மாயை அவித்யை என்றும் இரு உருவங்களாகத் தன்னை வகுத்துக்கொண்டது.

மாயையானது ஆதியான ஜட வஸ்துவில் ரஜோதமோ குணங்களுக்கு உட்படாத சுத்த சத்வ பாகமே. வேறு சொற்களால் கூறுமிடத்து, சுத்த சத்வம் மேல்பட்டிருக்கும் பாகம் மாயை, சத்வம் ரஜஸாலும் தமஸாலும் அடக்கப்பட்டு அதன்

காரணமாய் அசுத்தமானதோ, அப்பாகம் அவித்யை. மாயையிலும் அவித்யையிலும் புத்தியின் பிரதிபிம்பங்கள் முறையே ஈசனும் ஜீவனும் ஆகும்.

வேறு சில இடங்களில் ஈசன் ஜீவன் இவர்களது பிரதிபிம்பங்களாகிய மாயையும் அவித்யையும் பின் வருமாறு வேறுபடுத்தப்படுகிறது:—

''அதன் வெளித்தள்ளும் சக்தி அதிகமாயிருப் பதை நோக்கும்போது முக்கியமாக ஒன்றேயான ஆதி ஜடசக்தி மாயை எனப்படுகிறது. அதன் மறைக்கும் சக்தி அதிகமாயிருப்பதை நோக்கு மிடத்து அவித்யை எனப்படுகிறது. மறைக்கும் சக்தியைவிட வெளித்தள்ளும் சக்தி அதிகமா யிருக்கும். பிரகிருதி ஈசனை வரையறுக்கும் நிலை (உபாதி). அதே பிரகிருதியில் மறைக்கும் சக்தி அதிகமாயிருப்பது ஜீவனை வரையறுக்கும் நிலை. ஜீவனுக்கு எல்லேகோலும் விசேஷ குணமான அவித்யை வேறுவிதமாக அஞ்ஞானம் என்றும் சொல்லப்படும்.

ஈசன் இப் பேருலகைப் படைத்ததிலிருந்து ஈசனிடம் வெளித்தள்ளும் (உண்டாக்கும்) சக்தி அதிகமென்று கூறப்படுகிறது. அவர் எப்போதும் தம் சுதந்தர நிலையை அறிந்திருப்பதால், ஆவரண சக்தி (மறைக்கும் சக்தி) அவரை ஒன்றும் அசைக் காது. இதற்கு மாருக, அவரிடம் வேலை செய்யும் ஜட சக்தியின் மறைக்கும் சக்தி அதிகமாயிருப்பதன் காரணத்தால் ஜீவன் தனது உண்மை இயல்பான பிரம்மத்தை அறியாமல் உழல்கிருன். அவனுக்கு வெளிப்படுத்தும் சக்தி அதிகம் இல்லாததால் இப் பெரிய பிரபஞ்சத்தைப் படைக்கச் சக்தியற்றவஞ யிருக்கிருன்.'' வேதாந்த சித்தாந்தபேதம்.

# 6. ஏன் இப்படி நிழலைப் பின்பற்றி ஓடவேண்டும்

சில ஜனங்கள் கூறுவதாவது:— நாம் அரசியல் சுதந்தரத்தை அடைந்ததோடு பாமர மக்களின் பொருளாதார நிலையை உயர்த்துவதில் நமது சக்தியைச் செலவிடவேண்டும். கீதை படிப்பது, சங்கீர்த்தனம் செய்வது, ஆத்மீகக் கொள்கைகளைப் பிரசாரம் செய்வது ஆகியவற்றில் நமது காலத்தையும் சக்தியையும் வீணுக்காமலிருந்தால் நாம் பொருளாதார மேம்பாட்டைச் சீக்கிரம் அடையலாம். பிறகு விருப்பமுள்ளவர்கள் தத்வ ஞானத்தையும் மதத்தையும் கைக்கொள்ளலாம்.

''உண்ண உணவின்றித் தவிக்கும் பாமரர்களும் மத்தியதரமக்களும் தங்கள் தேகபாதை நிவர்த்தியாகாமல் எவ்வாறு இப் போதனைகளை ஏற்க முடியும்?''

''ஆத்மீக வாழ்க்கையை அதிகம் வற்புறுத்தியதால் நமது வீழ்ச்சியும் அடிமைத்தனமும் ஏற்பட்டது. அதனுல்தான் நாம் இன்றும் ஏழ்மை மிகுந்த பிற்பட்ட மக்களாயிருக்கிறோம். முற்காலத்தில் நாம் லௌகீக முன்னேற்றத்தைப் புறக்கணித்ததால் மற்றவர்கள் நம்மை அடக்கியாளலாயினர். ஆதலால் மேனுடுகளைப்போல் அதே முன்னேற்றத்தையும் அதிகாரத்தையும் வாழ்க்கை வசதிகளையும் அடையும் பொருட்டு நமது பொருளாதாரத்தையும் உடற் சக்தியையும் அபிவிருத்தி செய்யவேண்டும். பின்புதான் தத்துவம் போன்றவற்றில் தலையிடலாம்.''

''உலக வரலாற்றில் வேதம் ஓதுவதாலும் தெய்வீக வாழ்க்கை வாழ்வதாலும், பஜனை சங்கீர்த்தனம் செய்வதாலும் எந்த நாடும் சுதந்தரத்தை

யும் பொருளாதார முன்னேற்றத்தையும் அடைந்ததில்லை.

''நாம் ஆத்மீக வாழ்க்கைக்கும் லௌகீக வாழ்க்கைக்கும் ஒரு சமநிலை காண வேண்டும். ஆத்மீக விஷயத்தை அதிகம் வற்புறுத்தி, நாம் இக்கதியடைந்தோம். ஆகவே இந்திய இளைஞர்களைப் பொறுத்தவரையில் அதைத் தளர்த்தி, லௌகீக முன்னேற்றத்தையும் தொழில் முன்னேற்றத்தையுமே வற்புறுத்தவேண்டும்.''

இந்த ஜனங்களுக்கு மதப்பற்றுதல் இல்லை. அவர்களுக்கு உயர்ந்த, மேம்பட்ட விஷயங்களில் அறிவு இல்லை. அவர்களுக்கு ஸ்தூலமான அளவுள்ள நோக்கம்தான் இருக்கிறது. அவர்கள் எப்போதும் இதே நிலையில், இதேபோல் வாதம் செய்வார்கள். அவர்களுக்கு சமய சம்ஸ்காரங்களாவது தெய்வபக்தியாவது இல்லை. அவர்கள் கீதை 16-ம் அத்தியாயத்தில் கூறப்பட்டவர்கள் மாதிரி அழிக்கும் முறையில் குறை கூறுபவர்கள்.

சமூக விஷயமாக மத விஷயமாக, ஆக இரு விதம் வேலை செய்பவர்கள், இவ்வுலகத்துக்கு அவசியம். சமூகத் தொண்டர்கள் தங்களுக்கு உரிய முறைகளில் செயலாற்றுவார்கள். மதப் பிரசாரகர்கள் ஞானத்தைப் பரப்புவதில் விசேஷப் பிரசாரத்தை மேற்கொள்வார்கள். தச்சன் தனக்குரிய வேலையையும் மின்சாரத் தொழிலாளி அவனுக்குத் தக்க வேலையையும் செய்கிறார்கள். தச்சனை மின்சார வேலையையும் மின்சாரத் தொழிலாளியைத் தச்சு வேலையையும் செய்யச் சொல்லமுடியுமா? சமூக, பொருளாதார, ராஜீய, தொழில் முன்னேற்றமும் இத்திசையில் நிர்மாண வேலையும் மிக அவசியம். இவற்றைப் புறக்கணித்தல் கூடாது.

ஆனால் மதம்தான் மக்களைக் காக்கும். மதமின்றி மனிதன் ஏதுமில்லை. ராஜீய மண்டலத்திலும் மற்றவற்றிலும் வேலை செய்பவர்கள் கூட, தங்களை ஒழுங்கு முறையில் பயிற்றிக்கொள்ளாமலும், ஆத்மீக அடிப்படையின்றியும், சமயப் பயிற்சியின்றியும், அஹிம்ஸை, சத்தியம், பிரம்மசர்யம் ஆகியவற்றைக் கைக்கொள்ளாமலும், நன்கு வேலை செய்ய முடியாது. தன்னலமும் ஊழலும் உள்ள தலைவர்கள் சமூகத்தைப் பாழ்படுத்துகிறார்கள். அவர்கள் தங்கள் தங்கள் உயர்வுக்கும் அதிகாரத்துக்கும் சண்டைபோடுகின்றனர்.

அரசியல் சுதந்தரம் உலகத்துத் துன்பங்களை வேரறுக்காது. அரசியல் சுதந்தரத்தின் மூலம் மேலும் சிறிது வாழ்க்கை வசதிகளைப் பெறலாம். ரொட்டியும், வெண்ணெயும், பழவர்க்கங்களும் ருசிகரமான பிஸ்கட்டுகளும் உனக்கு நித்திய சாந்தியை அளிக்கமாட்டா. வாழ்க்கை வசதிகள் ஆத்மீக வாழ்க்கைக்கும் அமைதிக்கும் சத்துருக்கள். அவை மனிதனைக் கீழ்நோக்கி இழுக்கின்றன. பார்க்குமிடத்து, உலகத்தில் மனிதனின் தேவைகள் மிகக் கொஞ்சம். நீ துன்பங்களில் உழலும் போதுதான், கடவுளைச் சிந்திப்பாய். தேவையானது, அள்ளக் குறையாத ஆத்மீகச் செல்வமே.

மனிதனது அஞ்ஞானத்தை நீக்கி ஆனந்தத்தை அளிக்கும் தொழில் எதுவோ அதுவே மனிதனின் துன்பங்களை அறவே நீக்கி நித்தியானந்தத்தை அளிக்கும். அத்தொழில் ஆத்மீகப் பிரசாரமே. அத்தொழில் பக்தியையும் யோக வேதாந்த ஞானத்தையும் பரப்புவதே. அது மனித முயற்சிகளில் சிகரம்போல் மகிமை வாய்ந்தது. இதுவே சிறந்த யக்ஞம், அல்லது யோகம். இதே யக்ஞங்களில் தலை சிறந்த ஞானயக்ஞம்.

இந்தியா மாத்திரமே சிறந்த தெய்வீகச் செல்வத்தைப் பெற்றிருக்கிறது. உலகத்தில் பல்வேறு பாகங்களில் உள்ள செல்வந்தர்கள் கூட யோகாப்பியாஸம் செய்வதற்கும், ரிஷிகள், மகான்கள், யோகிகள், ஞானிகள் ஆகியவர்களின் உபதேசத்தைப் பெறுவதற்கும் இந்த அழிவற்ற செல்வத்தை அடைவதற்கும் இமாலயத்துக்கு வருகிறுர்கள்.

பாரத தேசத்தின் இச் செல்வத்தை யாரும் கொள்ளைகொள்ள முடியாது. பாரத தேசம் எப்போதும் செல்வம் நிறைந்தது. எப்போதும் லௌகீகத்திலும் சரி ஆத்மீக விஷயத்திலும் சரி இரு விதங்களிலும் நிறைந்தேயிருக்கும், அநேகரால் இந்நாடு தாக்கப்பட்டு கொள்ளையடிக்கப்பட்டது எனினும் அதன் வளம் மிகுந்தே இருக்கிறது. அது எப்போதும் சுதந்தரமுடையது. எப்போதும் சுதந்தர முடையதாகவே இருக்கும். உலக முழுவதிலும் அதன் பண்பாடும் நாகரீகமும் தலை சிறந்து விளங்குகின்றன

செல்வத்திலிருந்து ஆனந்தம் வராது. ஏராளமான செல்வம் இருந்தும் மேனுடுகள் அமைதி அறியாதிருக்கின்றன. இதனின்று ஆத்மீக வாழ்க்கைதான் உண்மையான நித்திய சாந்தியையும் பரமானந்தத்தையும் அளிக்கும் என்று நாம் ஊகித்துக்கொள்ளக் கூடும்.

இந்த ஜனங்களின் மனம் தவறுன சம்ஸ்காரங்களால் நிறைந்திருப்பதால் இவர்களை நம்பிக்கை பெறச் செய்வது கடினம். அனுதிகாலத்திலிருந்து அரசியல் பிரசாரகர்களுக்கும் ஆத்மஞானப் பிரசாரகர்களுக்கும், துவைதிகளுக்கும் அத்வைதிகளுக்கும், சந்நியாஸிகளுக்கும், எது மேலானதென்ற

சண்டை நடந்து கொண்டேயிருக்கிறது. இப்படிப் பட்டவர்களோடு மத விஷயத்தில் வேலை செய்பவர்கள் வாக்குவாதத்தில் இறங்கக்கூடாது. அது காலத்தையும் சக்தியையும் வீணுக்குவதாகும். அவர்கள் ஊக்கம் குன்ருமல் தங்கள் பணியைத் தொடர்ந்து செய்தல் வேண்டும்.

இவ்வுலகிலும் அரசியலிலும் அளவுக்கு மீறிய ஈடுபாடுடையவர்களாயும், வாழ்க்கையில் ஆத்மீக பாகத்தை அறவே புறக்கணித்தவர்களாயும், உடலையும் அதன் வசதிகளையும் அதிகம் நினைப்பவர்களாயும், தங்களது முக்கிய தெய்வீக இயல்பை முற்றிலும் மறந்தவர்களாயும், தங்கள் இதயத்தில் மறைந்திருக்கும் விலையற்ற ஆத்மீக ஆபரணத்தை அசட்டை செய்து நிழலின்பின் ஓடுபவர்களாயும் உள்ள மக்களுக்கு உண்மையான விவேகமும் ஒளியும் உதிப்பதாக!

---

## 7. ஆந்திரீக அரசாங்கம்

ஆந்திரீக அரசாங்கத்தின் அடிப்படையாயும், ஆந்திரீக அரசாங்கத்தின் அதிசிரேஷ்ட அதிபதியாயும், தேவகணங்களில் சர்வ சிரேஷ்ட புருஷனுயும் (புருஷோத்தமனும்), ஞானமும் ஆனந்தமும் உருக்கொண்டவனுயும் உள்ள பரப்பிரும்மத்துக்கு வணக்கங்கள்.

இவ்வுலகத்துள் உறைபவராயும் உலகுக்குள் உள்ளவராயும், உலகத்தால் உணரப்படாதவராயும், அவருடைய தேகமே உலகமாயும், உள்ளிருந்து உலகத்தை ஆள்பவராயும் உள்ளவர் எவரோ அவரே உள்ளுக்குள் உள்ள ஆத்மா, அழிவற்ற ஆந்திரீக அதிபதி. அவரே ஆந்திரீக அரசாங்கத்தின் அதிசிரேஷ்ட அதிபதி.

உடலில் உறைபவராயும், உடலுக்குள் உள்ளவராயும், உடலால் உணரப்படாதவராயும், இவ்வுடலே தமது உடலாயும், இவ்வுடலுக் குள்ளிருந்து உடலை ஆள்பவராயும், உள்ளவர் எவரோ, அவரே உனது உள்ளுக்குள் உள்ள ஆத்மா வும், ஆந்திரீக அதிபதியுமாவார்.

கண்களில் உறைபவராயும், கண்களுக்குள் உள்ளவராயும், கண்களால் உணரப்படாதவராயும் கண்களே தமது சரீரமாயும், கண்களுக்குள்ளிருந்து கண்களை ஆள்பவராயும், உள்ளவர் எவரோ அவரே ஆந்திரீக அரசாங்கத்தின் அதிசிரேஷ்ட அதிபதி என்று அறி.

காதுகளில் உறைபவராயும், காதுகளுக்குள் உள்ளவராயும், காதுகளால் உணரப்படாதவரா யும், காதுகளே தமது சரீரமாயும், காதுகளுக் குள்ளிருந்து காதுகளை ஆள்பவராயும், உள்ளவர் எவரோ அவரே ஆந்திரீக அரசாங்கத்தின் அதிசிரேஷ்ட அதிபதி என்று அறி.

மனதில் உறைபவராயும், மனதுக்குள் உள்ள வராயும், மனத்தால் உணரப்படாதவராயும், மனதே தமது சரீரமாயும், மனத்துக்குள்ளிருந்து மனத்தை ஆள்பவராயும், உள்ளவர் எவரோ அவரே ஆந்திரீக அரசாங்கத்தின் அதிசிரேஷ்ட அதிபதி என்று அறி.

பிராணனுக்குள் உறைபவராயும், பிராணனுக் குள் உள்ளவராயும், பிராணனுல் உணரப்படாத வராயும், பிராணனே தமது சரீரமாயும், பிராணனுக்குள்ளிருந்து பிராணனை ஆள்பவராயும், உள்ளவர் எவரோ அவரே ஆந்திரீக அரசாங்கத்தின் அதிசிரேஷ்ட அதிபதி என்று அறி.

புத்தியில் உறைபவராயும், புத்திக்குள் உள்ள வராயும், புத்தியால் உணரப்படாதவராயும்,

புத்தியே தமது சரீரமாயும், புத்திக்குள்ளிருந்து புத்தியை ஆள்பவராயும், உள்ளவர் எவரோ அவரே ஆந்திரீக அரசாங்கத்தின் அதிசிரேஷ்ட அதிபதி என்று அறி.

நாட்டை ஆள்வதற்கும் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநிறுத்துவதற்கும் எல்லா நாடுகளிலும் அரசாங்கம் இருப்பதுபோல், இந்தப் பிரபஞ்சத்திலும் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்ட ஒரு ஆந்திரீக அரசாங்கம் இருக்கிறது.

ஆந்திரீக அற்புத அரசாங்கத்துக்கு, சத்தியமே விருதுக்கொடி, தர்மமே (நேர்மை) முத்திரை, ஓங்காரமே வாத்தியம், விவேகமே குலவிருது, விரக்தியே கேடயம்.

இது ஒரு நித்தியமான அரசாங்கம். இந்த அரசாங்கத்தாருக்கு சாதகர்கள் ஆத்மானுபவம் அடைய உதவி செய்வதாகிய ஒரே மாறுதலற்ற அரசு முறைதான் உண்டு. அவர்கள் ராஜ்யங்களைச் சேர்த்துக்கொள்ள ஆவல் கொண்டவர்கள் அல்ல. அவர்களது பொக்கிஷம் வற்றாதது. அவர்களது செல்வம் சிறந்த சாந்தி, நித்தியானந்தம், வற்றாத மகிழ்ச்சி, சாசுவதமான திருப்தி, தெய்வீக ஞானம் அல்லது உபநிஷத்துக்களின் ஞானம் ஆகியவை அடங்கியது.

அரசாங்கத்தலைவர் ஒரு ஜனாதிபதியோ சர்வாதிகாரியோ, மன்னனோ அல்லது மகாராஜாவோ இருப்பதுண்டு. ஆந்திரீக அரசாங்கத்தின் தலைவர் ஈஸ்வரன் அல்லது பரமாத்மா. அவர் சிருஷ்டியின் பொருட்டு பிரம்மா அல்லது ஹிரண்ய கர்ப்பனாகவும், சம்ரக்ஷணை அல்லது காத்தலின் பொருட்டு விஷ்ணுவாகவும், அழிக்கும் பொருட்டு ருத்திரனாகவும் மூன்று உருவங்களைக் கொள்கிறார். அவரே அந்தர்யாமி அல்லது ஆந்திரீக அதிபதியும் ஆத்மீக நிர்வாகியுமாவர்.

ஈஸ்வரனுக்குமேல் மௌனமான சாட்சியும் சிரேஷ்ட தலைவருமாக இருப்பது பரப்பிரம்மம். அவரது கட்டளையால் பூமியும் ஆகாயமும் வேறு வேறாக நிற்கின்றன. அவரது கட்டளையாலேயே சூரிய சந்திரர்கள் எப்போதும் தீப்பிழம்புகளாய்ச் சுழல்கிறார்கள். அவரது கட்டளையாலேயே ஆறு களும் கடல்களும் தங்கள் எல்லைகளை மீறாது நிற்கின் றன. அவரது கட்டளையாலேயே பருவகாலங்களும் அயன சந்திகளும், ஆண்டுகளும் அதிக்கிரமிப்ப தில்லை. அவரது கட்டளையாலேயே கர்மங்களும் அவற்றைச் செய்பவர்களும் அவற்றின் பலன்களும் தங்கள் குறித்த காலத்தைக்கடந்து செல்வதில்லை. அவரது கட்டளையாலேயே வானம், சூரியன் சந்திரன் ஆகியவை தங்கள் தங்கள் ஸ்தானத்தில் நிற்கின்றன.

இப்பூரண பிரபஞ்சமும் பிரம்மத்தினிட மிருந்து வெளிவந்து உயர்ந்த பிரம்மத்திலேயே இயங்குகிறது. அப்பிரம்மம் உயர்த்திய வச்சிரா யுதம் போல், பெரும்பயத்தை விளைப்பதாக உளது. இதை அறிகிறவர்கள் அழிவற்ற பதமடைகின் றனர். பிரம்மத்துக்குப் பயந்தே நெருப்பு எரி கிறது, சூரியன் ஒளி வீசுகிறது, இந்திரனும், வாயுவும் யமனும் ஓடுகின்றனர்.

ஆந்திரீக அரசாங்கத்தின் கார்ய நிர்வாகத்தில் பரிபூர்ண நியாயம் நிலவுகிறது. தேவர்கள் தங்கள் பதவிகளைத் தங்கள் யோக்கியதைக்கும் நல்வினைக் கும் ஏற்றபடி அடைகிறார்கள்.

பகவானுக்கு உதவியாக எட்டு லோக பாலகர் கள் அல்லது அஷ்டதிக்குப் பாலகர்கள் உள்ளார் கள். அவர்கள் இந்திரன், வருணன், அக்கினி யமன், நைருதி, மருத், குபேரன், ஈசானன். யமன், வருணன், இந்திரன், பிரகஸ்பதி, சூரியன்

ஆகியோர் ஆந்திரீக அரசாங்கத்தின் அதிபருக்குப் பிரதான மந்திரிகள். அவர்களுக்கு சூக்ஷ்மமான தும் தீப்போன்றதுமான உடல் உண்டு. அவர்கள் இஷ்டம்போல் எந்த உருவத்தையும் எடுத்துக் கொள்ளக்கூடும். அவர்களுக்குப் பெருஞ் சக்திகள் உண்டு.

அஷ்டவசுக்களும், பதினொரு ருத்திரர்களும், பன்னிரண்டு ஆதித்யர்களும் கூட ஆந்திரீக அரசாங்கத்தின் கார்ய நிர்வாகத்தில் தங்களுக்குரிய பங்கெடுத்துக் கொள்கிறார்கள். தேவர்களுக்குத் தலைவன் இந்திரன், யோக்கியதையுள்ளவர்கள் யாராயினும் இந்திரனாகலாம். அதாவது இந்திர பதவி யடையலாம். இந்திர பதவி தேவர்களின் ஆதிபத்தியத்தில் ஒரு அந்தஸ்து.

காற்று வீசுதல், சூரியன் உதயமாதல், ருது மாறுதல்கள், மழை பொழிதல் அல்லது பொழியா திருத்தல் ஆகிய யாவும் தேவதைகளால் நடத்தப் படுகின்றன.

தேவர்களின் சுவர்க்காதிபத்தியம் இருக்கிறது. வெவ்வேறு பதவிக்குரிய வரிசையாய் படிப்படியான பெயர்கள் உண்டு. வேதங்களைப் பூரணமாக ஓதிய, நன்னெறி பயின்ற, திடமும் பலமும் பொருந்திய ஒரு நல்ல இளைஞன் இருப்பதாக வைத்துக்கொள் வோம். செல்வம் நிறைந்த இப்பூமி முழுதும் அவனுக்குரியதாக வைத்துக்கொள்வோம். இது ஒரு மனுஷ்யானந்தம். இதைப்போல் நூறுமடங்கு கொண்டது மனுஷ்யகந்தர்வர்களின் ஆனந்தம். மனுஷ்யகந்தர்வர்களின் ஆனந்தத்தை ஒன்றாக வைத்துக்கொண்டால், அதைப்போல் நூறுமடங்கு கொண்டது தேவகந்தர்வர்களின் ஆனந்தம். இந்த ஆனந்தத்தை ஒன்றாகக் கொண்டால் அதைப்போல் நூறுமடங்கு கொண்டது கர்ம தேவர்களின் ஆனந்தம். இதைப்போல் நூறு பங்கு கொண்டது

தேவர்களின் ஆனந்தம். தேவர்களின் ஆனந்தத்தைப் போல் நூறுமடங்கு கொண்டது இந்திரனின் ஆனந்தம். இந்திரனின் ஆனந்தத்தைப்போல் நூறுமடங்கு கொண்டது பிரகஸ்பதியின் ஆனந்தம். பிரஹஸ்பதியின் ஆனந்தத்தைப்போல் நூறு மடங்கு கொண்டது பிரஜாபதியின் ஆனந்தம். பிரஜாபதியின் ஆனந்தத்தைப்போல் நூறு மடங்குள்ளது பிரம்மாவின் ஆனந்தம். ஆந்திரீக அரசாங்கத்தின் சர்வ சிரேஷ்ட அதிபதியின் ஆனந்தத்தோடு ஒப்பிடும்போது பிரம்மாவின் ஆனந்தம் அணுவுக்குச் சமானம்.

ஆந்திரீக அரசாங்கத்தின் மந்திரிசபை மாறுதல் ஒரு மகா கல்பத்தின் தொடக்கத்தில் ஏற்படுகிறது.

பரமாத்மா சர்வசக்திமான். அவர் சங்கல்ப மாத்திரத்தாலேயே ஒவ்வொன்றையும் செய்கிறார். அவருக்கு கைகால்கள் முதலிய உறுப்புகள் அவசியம் இல்லை. அதேபோல் தேவர்களும் செய்கிறார்கள்.

கிறிஸ்தவர்கள் மதப்பிரகாரம், தேவர்கள் கூட்டம் (ஏஞ்சல்கள்) மூன்று பிரிவுகளாயும் வெவ்வேறு சக்திக்கும் மகிமைக்கும் தக்கபடி ஒன்பது குழுக்களாயும் பிரிக்கப்பட்டுள்ளனர். (1) ஸெராபின், செருபிம் (2) ராஜ்யாதிகாரங்கள் அல்லது ராஜ்யங்கள், நற்குணங்கள், அதிகாரங்கள். (3) ஆதிபத்தியங்கள், ஆர்ச் ஏஞ்சல்கள், ஏஞ்சல்கள், ஏஞ்சல் என்றால் தேவதூதன் அல்லது தெய்வ குமாரன். ஏஞ்சல் ஹிந்துக்களின் தேவதைக்குச் சமானம். ஆர்ச் ஏஞ்சல் உயர்ந்த வகுப்பு ஏஞ்சலாகும்.

இத்தேகம், மனம் புலன்கள் கூட பிரபஞ்சத்தின் ஒரு பாகமாகும். இவைகளும் வெவ்வேறு

தேவர்களால் பரிபாலிக்கப்படுகின்றன. ஈண்டும் ஆந்திரீக அரசாங்கம் உண்டு. வருணன் நாக்குக்கும், இந்திரன் கைகளுக்கும், விஷ்ணு பாதங்களுக்கும், சூரியன் கண்களுக்கும், வாயு சர்மத்துக்கும், காதுகளுக்குத் திக்குகளும், மூக்குக்கு அஸ்வினி தேவர்களும், வாக்குக்கு அக்கினியும், ஆஸனத் துவாரத்துக்கு யமனும், உற்பத்தி உறுப்புக்குப் பிரஜாபதியும், மனத்துக்கு சோமனும், புத்திக்கு பிரம்மாவும், சித்தத்துக்கு விஷ்ணுவும், அஹங்காரத்துக்கு ருத்திரனும் அதிபர்கள். பஞ்ச பூதங்களும் கூட அததற்குரிய தேவதைகளால் நடத்தப் படுகின்றன.

நாம் இத் தேவதைகளைப் பக்தியோடு அண்டினால் அவர்கள் நமக்கு வழிகாட்டி தெய்வீக மகிமையின் சிகரத்தை நாம் ஏறுவதற்கு நமக்குக் கைகொடுத்து உதவுகிறார்கள். அவர்கள் ஆத்மீக பாதையில் தடைகளை விலக்கி ஒளி வீசுகிறார்கள். அவர்கள் உலகத்தின் சாந்தியைக் காக்கிறார்கள். மந்திரங்களையும் தோத்திரங்களையும் உச்சாரணம் செய்வதாலும், நெய்யையும் நீரையும் நைவேத்தியம் செய்வதாலும் அவர்கள் திருப்தியுறுகிறார்கள். ஈஸாவாஸ்ய உபநிஷத்தில் அக்கினிக்கும் சூரியனுக்கும் தோத்திரங்கள் காணப்படுகின்றன.

ஆந்திரீக அரசாங்கம் பொருத்தமாகப் பணி புரிவதை உணர்ந்து அதற்குப் பொருத்தமாகத் தானும் நடந்து கொண்டு ஆந்திரீக அரசாங்கத்தின் அதிசிரேஷ்ட அதிபதியையும் அறிகிறவன் நல்வாழ்வையும், அழிவற்ற கீர்த்தியையும், மகத்துவத்தையும், நித்தியானந்தத்தையும் அமரத்துவத்தையும் அடைவான்.

---

# 8. விஞ்ஞான யோகம்

பரமாத்மாவைப்பற்றிய ஞானமே விஞ்ஞானம். நிர்விகல்ப சமாதி மூலம் ஆத்மாவைப்பற்றி நேர் முகமான சகஜ அறிவே விஞ்ஞானம். உபநிஷத்துக்களையும் வேதாந்த இலக்கியங்களையும் படிப்பதன் மூலம் உண்டாகும் அநுபவமற்ற அறிவு ஞானமாகும்.

மாயை பகவானைச் சார்பாக உடையது. அது பகவானிடமிருந்தே வெளிவருகிறது. அது சக்தி அல்லது பகவானின் ஆற்றல் எனப்படும். குண விசேஷங்கள் அற்ற பிரம்மத்தை மாயை மூடும் போது, அது வேதாந்திகளால் அவ்யாக்ரதம் (வெளிப்படாதது) எனப்படும். சிலர் அதை மூலப் பிரகிருதி (ஆதிசக்தி) என்பர். அது ஸன்ஸ்ருதி (உலகப் போக்கு), பந்தம் முதலிய பெயர்களாலும் வழங்கப்படும்.

பகவானால் ஊக்கப்பட்டு அது மஹத் தத்வத்தை (பேரறிவை) சிருஷ்டிக்கிறது. பகவானது சக்தியால் தூண்டப்பட்டு மஹத்தான அஹங்காரத்தைச் சிருஷ்டிக்கிறது. மஹத் தத்துவத்தால் மூடப்பட்டு, அஹங்காரம், சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று பிரிவுகளாகிறது. தமஸ் தத்வத்திலிருந்து ஐந்து சூக்ஷ்ம தன்மாத்திரைகள் உண்டாகின்றன. அங்கிருந்து ஆகாசம், வாயு, அக்கினி, நீர், பூமி ஆகிய ஐந்து ஆதியான ஸ்தூல பூதங்கள் உண்டாகின்றன. இவை ஒவ்வொன்றும் அதன் அதன் முன்னதன் குணத்தில் பங்கெடுத்துக் கொள்கிறது.

ரஜோ குணமும் அஹங்காரமும் சேர்ந்ததிலிருந்து கர்மேந்திரியங்கள் உண்டாயிருக்கின்றன. சத்வகுணமும் அஹங்காரமும் சேர்வ

திலிருந்து அந்தந்த இந்திரியத்தின் அதிதேவதையும் மனதும் உண்டாகின்றன.

சத்வகுணத்தோடு சம்பந்தப்பட்டு, பரமாத்மா உலகத்தைக் காப்பவரான விஷ்ணு என்னும் நாமத்தால் உணரப்படுகிறார், தமஸோடு சம்பந்தப்பட்டு, அவர் ருத்ரன் எனப்படுகிறார்.

புத்தியின் தர்மங்கள் காரணமாக விழித்திருக்கும் நிலை (ஜாக்ரத), கனவு (ஸ்வப்னம்) ஆழ்ந்த தூக்கம் (சுஷுப்தி) ஆகிய நிலைகள் ஏற்படுகின்றன. அவை ஆத்மா அல்லது பரம்பொருளில் இல்லை. ஆத்மன் அவற்றிற்குச் சாக்ஷியே. அது புத்தியின் இயல்பேயுடையதாய் அழிவற்றது.

மாயை எப்போதும் வித்யை (அறிவு) அவித்யை (அறிவின்மை) ஆகிய இரட்டையாகத் தோன்றுகிறது. அவித்யையின் பிரபாவத்தில் ஆட்பட்டவர்கள் கர்மமார்க்கத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். வேதாந்தத்தைப் படிப்பதில் ஈடுபட்டவர்கள் பூரணமாகச் சித்த சுத்தியடைந்தபிறகே, நிவிருத்தி மார்க்கத்தைக் கைக்கொள்கிறார்கள். பகவந் நாமங்களை ஜபிப்பதில் ஈடுபட்டவர்களிடமிருந்து மாயை பறந்தோடிவிடும்.

அவித்யை அல்லது அஞ்ஞானத்தின் பிரபாவத்தில் ஆட்பட்டவர்கள் எப்போதும் சம்சாரத்தில் உழன்று கொண்டிருப்பவர்கள். உள் நோக்கு, ஜபம், கீர்த்தனம், தியானம், வேத நூல்களை ஓதுதல் ஆகியவற்றில் பழகுபவர்கள் எப்போதும் முக்தியடைந்தவர்களே.

பகவத் பக்தர்களாய் தினந்தோறும் பூஜை செய்பவர்களுக்கு ஆத்மஞானம் தானாக உதயமாகும். பக்திமான்கள் ஐயமின்றி முக்தியடைகிறார்கள். பக்தியாகிய அமுதம் இல்லாதவர்கள் கனவில்கூட விடுதலையடைய முடியாது.

சாதுக்களின் சங்கம் விடுதலைக்கும் காரண மாகும் என்று பறையறையப்படுகிறது. மனச் சஞ்சலம் இல்லாதவர்களும், பேராசை இல்லாதவர் களும், ஆசையை வென்றவர்களும், தங்களது புலன்களையும் ஆந்திரீக இயல்பையும் அடக்கத் துக்குக் கொண்டுவந்தவர்களும், பகவானிடம் ஈடுபட்டவர்களும், எதிலும் ஆசையில்லாதவர் களும், இன்பதுன்பத்தில் ஒரே மாதிரியாயிருப்பவர் களும், பற்றுதலின்றி யிருப்பவர்களும், எப்போதும் பகவானையே ஸ்மரிப்பவர்களும், தன்னடக்கத்தின் தர்மங்கள் உள்ளவர்களும், தானாகக் கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைபவர்களும் எவர்களோ, அவர்களே சாதுக்கள் அல்லது மகாத்மாக்கள்.

எவ்விதமாகவோ ஒரு மனிதன் சாது சங்கத்தை அடைந்து விடுவானானால், அவன் பகவத் லீலைகளைக் கேட்க அன்பு கொள்ளும்படி தூண்டப்படுகிறான். அதிலிருந்து பகவத் பக்தி அபிவிருத்தியாகிறது. பக்தி சிரத்தை அடைந்தவுடன், ஞானம் பூரண மாக உதயமாகிறது.

அனாத்மாவிலும், தேகத்திலும் மற்றவற்றிலும் ஆத்மாவை பாவிப்பது உண்மையிலே மாயை. மாயை மூலமாகத்தான் இவ்வுலகம் இருப்புள்ளதா கிறது. மனத்தின் செயல் காரணமாகத்தான் இந்த உலகமாகிய பிரமை உண்டாகிறது. அதற்கு உண்மையாக இருப்பு இல்லை.

மாயைக்கு ஆவரண சக்தி (மறைக்கும் சக்தி) விக்ஷேப சக்தி (அசைக்கும் சக்தி) ஆகிய இரு உருவங்கள் உண்டு. முன்னது எல்லா ஞானத் தையும் மறைக்கிறது. பின்னைய சக்தி மகாதத்வ மும் பிரம்மம் முதல் புல் அறுதியாக, ஸ்தூலமாக வும் சூக்ஷ்மமாகவும் வகுத்து, உலக சக்கரத்தை சிருஷ்டிக்கிறது. பழுதையின் மீது பாம்பைப் போல், மாயையால் பரம்பொருள்மீது இவ்வுலகம்

சுமத்தப்பட்டுள்ளது. பிரம்மம் துவைதமற்றது. உண்மையில் பிரம்மத்தைத் தவிர வேறொன்றும் இல்லை. கேட்கப்படுவது, பார்க்கப்படுவது, நினைவு கூறப்படுவது முதலிய யாவும் கனவு அல்லது மனோராச்சியம் உண்டாக்கப்படுவதுபோல்தான்.

இந்த உடலே இவ்வுலக விருட்சத்தின் ஆழ்ந்த வேராகக் கொள்ளப்படுகிறது. அதில் மனைவி மக்களின் பற்றுதல் வேர்கொண்டிருக்கிறது. உடல் இல்லையெனில், இப் பொருள்கள் இல்லாமற் போகின்றன. தேகம் அல்லது க்ஷேத்திரம் ஸ்தூல மாகவும், சூக்ஷ்மமாகவும் இருக்கிறது. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமாகிய பஞ்ச பூதங் களால் ஆக்கப்பட்டதே ஸ்தூலமானது. அகங் காரம், மனது, புத்தி, ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் ஆகிய ஐந்து சூக்ஷ்ம பூதங்களால் ஆக்கப்பட்டது; சூட்சுமமானது. சைதன்யத்தின் பிரதிபிம்பமே ஜீவன்.

பரமாத்மா நோயும் க்ஷீணமுமற்றவர். அவர் சுயம் ஜோதி, பிறப்பற்றவர், மரணமற்றவர், நித்தியமானவர், சர்வவியாபி, பின்னமற்றவர். அவர் இரண்டாவதல்லாத ஏகமானவர். அஞ்ஞா னம் அழிந்தவுடன், ஜீவன் தன்னைப் பிரம்மத்தோடு ஐக்கியமாக்கிக்கொள்ளத் தொடங்குகிறது. புத்தி, பிராணன்கள், தேகம், அகங்காரம் ஆகியவற்றி லிருந்து பிரம்மம் வேறானவர். அவர் எப்போதும் புனிதமானவர். அவர் சாட்சி. அவரே புத்தி. அவர் எங்கும் நிறைந்தவர். அவர் பரமானந்தமே உருவானவர். அவர் புத்தி முதலியவற்றின் வரை யறைகள் யாவற்றிற்கும் மேற்பட்டவர். அவர் மாறுதலற்றவர், காலமற்றவர், இடைவெளியற்ற வர். அவர் தமது சுயம்பிரகாசத்தால் உடலையும் மற்றவற்றையும் பிரகாசப்படுத்துகிறார். அவர்

வேறு எதாலும் மறைக்கப்படாதவர். அவரது இயல்பே உண்மையும் ஞானமும்.

கபடம், கொலை முதலியவற்றைத் தவிர்ப்பது, பழிச்சொல்லைப் பொறுமையாய்ச் சகிப்பது, மற்றவர்களிடம் எப்போதும் மோசு நினைவின்றி நடந்து கொள்வது; மனம், வாக்கு, காயத்தால் பக்தியுடன் ஆசிரியருக்குத் தொண்டு செய்வது; உள்ளும் வெளியும் சுத்தமாய் இருப்பது; நற்கருமங்கள் போன்றவற்றில் விடாமுயற்சி, மனம் வாக்கு காயத்தைக் கட்டுப்படுத்துவது; இந்திரிய விஷயங்களைத் தவிர்ப்பது; அகங்காரமின்மை, பிறப்பு, மூப்பு, மரணம் முதலிய குற்றங்களைப் பரிசோதிப்பது; மக்கள், மனைவி, பணம் ஆகியவற்றில் பற்றுதல் இல்லாதிருப்பது; இன்பதுன்பத்தில் மனத்தின் சமநிலையைக் காப்பது; பகவானிடம் ஏகாக்கிரமான பக்தி, மனித சங்கமின்றி திவ்ய க்ஷேத்திரத்தில் வாசம், உலகப்பற்றுள்ள மனிதர்களுடன் சகவாசம் இல்லாதிருப்பது; ஆத்ம ஞானத்தை அடைவதற்கு இடைவிடாத முயற்சி, வேதாந்த அர்த்தத்தைச் சிந்தித்தல் — இவற்றின் மூலம், ஆத்மஞானம் அடையப்படுகிறது. அவற்றிற்கு முரணானவற்றால் மதிமயக்கம் உண்டாகிறது.

எதனால் பரமாத்மா அறியப்படுகிறதோ அது ஞானம். அதே ஞானம், அறியப்படும்போது, நேர்முக அறிவாகிறது. சுயம்பிரகாசமுடைய மகான் பற்றுதலற்றவர். அவர் ஞானத்தால் ஆத்மானுபவம் பெறுகிறார். ஆத்மஞானம்பெற்ற முனிவரின் உபதேசங்கள்மூலம், ஜீவாத்ம பரமாத்ம ஏகத்வ பாவம் உதிக்கும்போது, அஞ்ஞான வேர் தன் பலமான உபகரணங்களுடன் பரமாத்மாவில் ஐக்கியமாய் விடுகிறது. தவறான துவந்த்வ பாவத்தை நீக்குவது விடுதலையாகும். புதிதாக

ஒன்றும் அடையப்படவில்லை. ஆத்மாவை அது உள்ளதுபோல் அறிவதேயாம்.

பகவத் பக்தியில்லாதவர்கள் ஞானத்தை அடைவது கடினம். கண்ணுள்ளவர்கள் கூட இரவில் வழியறிய முடிவதில்லை. ஆனால் விளக்கு கொண்டு போகிறவர்களுக்கு வழி தெரிகிறது. அதேபோல் பகவத் பக்தியுள்ளவர்களுக்கு, ஆத்மன் தனது உண்மை இயல்பில் தோன்றுகிறது.

மகாத்மாக்களின் சங்கம் பகவானுக்கும் அவரது அடியார்களுக்கும் தொண்டு செய்தல், ஏகாதசி போன்ற தினங்களில் உபவாஸம், சிவ ராத்திரி, ஸ்ரீ கிருஷ்ண ஜன்மாஷ்டமி போன்ற பகவானின் புனித நாட்களைக் கொண்டாடுவது, இராமாயணம், பாகவதம் முதலிய பகவத் கதைகளைக் கேட்பது, படிப்பது, விவரிப்பது, பகவானை வழிபடுவது, பகவந் நாமங்களை ஜெபிப்பது — இவை பகவத் பக்தியை அடைவதற்கு மார்க்கங்களாம்.

எப்போதும் பகவானிடம் ஈடுபாடுள்ளவர்களுக்கு பகவானிடம் ஆழ்ந்த பிரேமை உண்டாகிறது. அப்போது பகவத் பிரேமை நிறைந்தவருக்கு பற்றுதலின்மை, ஞானம், ஆத்மானுபவம் அல்லது முடிவான முக்தி ஆகியவை கிடைக்கின்றன.

நன்மையில் ஏகாக்ர மனதுள்ள பக்தி நிறைந்தவராயும் பகவானிடம் பக்தி பூண்டவர்களோடு இடைவிடாமல் கூடியிருப்பவராயும், பகவானைத் தியானிப்பவராயும், தூய இருதயமும் சாந்த மனதும் படைத்தவராயும், மனித சமூகத்துக்குச் சேவை செய்வதில் எப்போதும் ஆனந்தம் கொள்பவராயும், எவர் உள்ளாரோ அவ்வறிவாளியே, முக்தி பெற்ற ஞானி அல்லது பாகவதர் அல்லது தத்துவமுணர்ந்த யோகியாவர்.

## நான்காம் பாகம்

# 1. ஆத்மா மூன்று சரீரங்களினின்றும் வேறானது

ஸ்தூல சரீரம், சூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் ஆகிய மூன்று சரீரங்கள் உண்டு. ஆத்மாவை விட்டு சுதந்தரமாக சரீரங்களுக்கும் கோசங்களுக்கும் இருப்பு கிடையாது. ஸ்தூலக் கண்களால் பார்க்கப்படுவதும், சதை, எலும்புகள், கொழுப்பு, சர்மம், நரம்புகள், உரோமம், இரத்தம் முதலியவற்றால் ஆக்கப்படுவதும் எதுவோ அதுவே ஸ்தூல சரீரம். அதற்கு பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, மாறுதல், சிதைவு, மரணம் ஆகிய ஆறு மாறுதல்கள் உண்டு. இச்சரீரம் வாலிபத்தில் வளர்கிறது. விருத்தாப்பியத்தில் க்ஷீணமடைகிறது. நல்ல புஷ்டியான உணவை அளித்தால் சரீரம் விருத்தியடைகிறது. அவ்வுணவு அளிக்கப்படாவிட்டாலும், ஏதாவது நோய் வந்தாலும் அது க்ஷீணமடைகிறது. சீதளமும் க்ஷீணமுமடைவதால் அது சரீரம் எனப்படுகிறது. மரணத்துக்குப் பிறகு எரிக்கப்படுவதால் அது தேஹம் எனப்படுகிறது. சூக்ஷ்ம சரீரம் ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், பஞ்சப் பிராணன்கள், சித்தம், அறிவு ஆகிய பதினேழு தத்துவங்களால் ஆக்கப்பட்டது. சூக்ஷ்ம தேகம் ஆழ்ந்த அபிமானம் அல்லது அகங்காரத்தாலும் பலத்த ராகத்துவேஷத்தாலும் விருத்தியடைகிறது. அகங்காரமும் ராகத்துவேஷமும் அழிந்தால் அல்லது குறைந்தால் சூக்ஷ்மதேகம் க்ஷீணிக்கிறது. அத்யாத்மீக ஆதிபௌதிக ஆதிதெய்வீகமாகிய மூன்று தாபங்களால் சூக்ஷ்மதேகம் எரிக்கப்படுகிறது. அஞ்ஞானம் அல்லது அவித்யையே காரண சரீரத்தை அமைக்கிறது. ''நான்

ஜீவன்'' என்கிற எண்ணத்தினுல் காரண சரீரம் விருத்தியாகிறது. இந்த எண்ணம் அழிந்து அல்லது குறைந்து ''நான்'' என்பது பிரம்மத்தோடு ஒன்றுகும்போது காரண சரீரம் க்ஷீணிக்கிறது. சூக்ஷ்ம சரீரமும் காரண சரீரமும் உலகப் பற்றுள்ளவர்களுக்குத் தடித்தும் ஊக்கமுள்ள சாதகர்களுக்கு மெலிந்தும் உள்ளன. ஞானுக்னி (அறிவுச்சுடர்) சூக்ஷ்ம காரண சரீரங்களைப் பூரணமாக அழித்துவிடும். சூக்ஷ்ம சரீரமான ஒருவனுக்கு கேட்டல், உணர்தல், பார்த்தல், ருசித்தல், முகர்தல் ஆகிய அநுபவங்கள் உண்டாகவும் தியானத்தின் மூலம் ஆத்மாவை உணரவும் உதவுவதால் லிங்க சரீரம் என்றும் கூறப்படும். ஸ்தூல சரீரத்துக்கும் சூக்ஷ்ம சரீரத்துக்கும் காரணமாயிருப்பது காரண சரீரம்.

நாம் ஸ்தூல சரீரத்தைத் தெளிவாகப் பார்க்க முடியும். நாம் சூக்ஷ்ம சரீரத்தைப் (நுண்ணுடலை) பார்க்க முடியாததால், சில வேளைகளில் சூக்ஷ்ம சரீரம் இருக்கிறது என்று நாம் எப்படிக் கூறமுடியும் என்று கேட்கப்படுகிறது. பதினேழு உறுப்புக்கள் செய்யும் காரியங்களிலிருந்து சூக்ஷ்ம சரீரம் இருக்கிறது என்று அறியலாம் அல்லது ஊகிக்கலாம். இந்தப் பதினேழு விதமான செயல்களும் ஸ்தூல சரீரத்தால் (பருவுடலால்) செய்யப்படுகின்றன என்று நாம் ஏன் கூறக்கூடாது? ஆழ்ந்த தூக்கத்திலும், மூர்ச்சையிலும், மரணத்திலும், இந்தப் பதினேழுவிதமான செயல்களும் ஸ்தூல சரீரத்தால் செய்யப்படுவதில்லை. ஆகவே இவை ஸ்தூல சரீரத்துக்குச் சொந்தமானவையென்று நாம் கூறமுடியாது. ஆகவே ஸ்தூல சரீரம் எப்படியிருப்பினும் பதினேழு தத்வங்கள்கொண்ட ஒரு சூக்ஷ்ம சரீரம் உளது என்று நாம் ஒப்புக்கொள்ள வேண்டும்.

''ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்கள் தனித்தனியாய் வேலே செய்யவில்லே. அவை கேட்டல், பார்த்தல் முதலிய காரியங்களேச் சேர்ந்தே செய்கின்றன'' என்று ஆக்ஷேபணே எழக்கூடும். நீ நன்கு சிந்தித்தால், சூக்ஷ்ம சரீரமே எல்லா வேலேகளேயும் செய்கிறதேயொழிய இரண்டும் சேர்ந்து அல்ல என்று கண்டுகொள்ளலாம். இந்த விஷயத்தை ஒரு உதாரணம் மூலம் விளக்கலாம். விறகின் உதவியினுல் நெருப்பு உணவைச் சமைப்பது முதலிய காரியங்களேச் செய்கிறது. எனினும் சமையல் என்னும் செயல் நெருப்பினுலேயேயன்றி விறகின் காரணமாகவல்ல. இதேபோல் பார்த்தல், கேட்டல் முதலிய காரியங்களே சூக்ஷ்ம சரீரம் ஸ்தூல சரீரத்தின் ஆதாரத்தைக்கொண்டே தன் கிரியைகளேச் செய்தாலும், இவை சூக்ஷ்ம சரீரத்தினுல் நடைபெறுகின்றனவேயன்றி ஸ்தூல சரீரம் காரணமாகவல்ல. இப்போது விளங்குகிறதா? ஆதலின், சந்தேகத்தின் நிழல்கூட இன்றி பதினேழு தத்வங்கள் கொண்ட சூக்ஷ்ம சரீரம் இருக்கிறது என்று வெளிப்படையாக ஒப்புக்கொள்ளப்படவேண்டும்.

ஸ்தூல சரீரம் ஜடமானது. அதற்கு ஆதியும் அந்தமும் உண்டு. அது அசுத்தங்கள் நிறைந்தது. அழியக்கூடியது. பஞ்சபூதங்களின் சேர்க்கை. அது பாகங்கள் நிறைந்தது. அதை ஸ்தூலக் கண்ணுல் காணலாம். அது எல்லேயுள்ளது (பரிச்சின்னமானது), மாறுதலுள்ளது. ஆகவே அது சுயமாக இருப்புள்ளதாயும், சுயம்பிரகாசமுள்ளதாயும், சச்சிதானந்தமாயும் இருக்க முடியாது.

சூக்ஷ்ம சரீரம்கூட ஜடமானதே. அதற்கும் ஆதி அந்தம் உண்டு. அது ஐந்து தன்மாத்திரைகள் அல்லது சூக்ஷ்ம பூதங்களின் சேர்க்கை. அது மாறுதலுள்ளது, அழியக் கூடியது. அதுவும் பரிச்

சின்னமுள்ளதே. இது எப்போதும் புனிதமான அறிவுள்ள ஆத்மாவாக இருக்க முடியாது.

அஞ்ஞானம் அல்லது ஆதி அறியாமையே காரண சரீரம். இதன்றி வேறில்லை. அதுவும் ஜடமே. மனிதன் ''நான் அஞ்ஞானி'' என்று சொல்லிக் கொள்கிறான். அது ஆரம்பமற்ற தெனினும், அதற்கு முடிவுண்டு. ஒருவனுக்கு ஆத்ம ஞானம் கைவந்தவுடன் காரண சரீரம் மரிக்கும். இது நித்தியமான, புனிதமான, முடிவற்ற ஆத்மாவல்ல.

மூன்று சரீரங்களினின்றும் ஆத்மா முற்றிலும் வேறானது. தனது ஆத்மனை அறிந்து தான் மூன்று சரீரங்களினின்றும் முற்றிலும் வேறு என்று உணர்ந்தவனே விடுதலைப் பெற்றவன். அவன் சம்சார சாகரத்தைக் கடந்தவன். அவன் பிரம்மமேயாம். அவன் மூன்று உலகங்களாலும் கொண்டாடப்படுகிறான். அவனது மகிமை விவரிக்கவொண்ணாதது.

---

## 2. ஆத்மா மூன்று நிலைகளுக்கும் சாட்சி

ஜாக்ருதம் (விழிப்பு நிலை) ஸ்வப்னம் (கனவு) சுஷுப்தி (ஆழ்ந்த தூக்கம் அல்லது கனவின்றிய தூக்கம்) ஆக மூன்று நிலைகள் (ஸ்திதிகள்) உண்டு. அவஸ்தை என்றால் ஒரு நிலை. ஜாக்ருத, ஸ்வப்ன, சுஷுப்தி ஆகிய மூன்று வாழ்க்கை நிலைகள் அல்லது அவஸ்தைகளைப் பரீட்சித்து ஆராய்தல், பெரிதும் முக்கியமென்று வேதாந்த சிந்தனை சம்பிரதாயத்தார் கருதுகின்றனர். இந்த நாம ரூபங்களில் மறைந்து மூன்று நிலைகளுக்கும் சாட்சியான அறிவாய் விளங்கும் ஆத்மஸ்வரூபத்தை ஒருவன்

தியானிக்கத் தொடங்கும்முன் இந்த மூன்று நிலைகளையும் பூரணமாக விசாரணை செய்ய வேண்டுமென்று வேதாந்தம் வற்புறுத்துகிறது.

மாண்டூக்ய உபநிஷத் பின்வருமாறு கூறுகிறது; ''முதல் பாதம் வைஸ்வானரன். அவன் இருப்பிடம் ஜாக்ருத நிலை, அதுவெளி விஷயத்தை உணர்கிறது. அது ஏழு அங்கங்களும் பத்தொன்பது வாய்களும் உள்ளதாய் ஸ்தூல உலகத்தை அநுபவிக்கிறது.'' ஏழு அங்கங்களாவன (சப்தாங்கங்கள்) ;— ''ஒளியுள்ள உலகம் (சுவர்க்கம்) தலை, சூரியன் கண், திசைகள் யாவும் வீசும் காற்றே மூச்சு, அக்னி வாய், சர்வ வியாபியான ஆகாசம் அடிமரம் அல்லது இடைப்பாகம், சமுத்திரம் மூத்திரப்பை, பூமி பாதம்.'' பத்தொன்பது வாய்களாவன (ஏகோனவிம்சதிமுகம்) :— ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, பிராணன் ஐந்து, மனது, புத்தி, சித்தம், அஹங்காரம்.

இரண்டாம் பாதம் தேஜஸன்; அவன் இருப்பிடம் ஸ்வப்னம் உள்பிரக்ஞை யுடையது, ஏழு அங்கங்களும் பத்தொன்பது வாய்களும் உண்டு. சூக்ஷ்ம வாசனைகளை நுகரும், ஸ்வப்ன நிலையை அனுபவிப்பவன், முழுதும் தேஜஸின் சாரமாக இருப்பதால் தேஜஸன் எனப்படுகிறான். வாசனைகளே முழுதும் நிறைந்ததாய் தானே பல ரூபங்களைக் கொள்கிற மனதை வெளி விஷய சம்பந்தமின்றி உணர்கிறது.

தூங்குபவன் எதையும் கற்பனை செய்து கொள்ளாமலும் யாதொரு கனவும் காணாமலும் உள்ள ஆழ்ந்த தூக்க நிலை இது. ஆகவே மூன்றாம் பாதம் பிராக்ஞன் எனப்படும். அவனது இருப்பிடம் சுஷுப்தி (ஆழ்ந்த தூக்கம்), எல்லாம் உருகி ஒருவனாய் நிற்பவன், பிரக்ஞையே வடிவானவன்,

ஆனந்தமயன், ஆனந்தமே அனுவல், வெளி விஷயத்துக்குப் பிரக்ஞையின் மார்க்கம்.

சூரியன் முதலிய அதிதேவதைகளைக் கொண்ட மனம் முதலிய பதினுன்கு அங்கங்களின் மூலம், சப்தம் முதலிய ஸ்தூல இந்திரிய விஷயங்களை ஜீவாத்மா அநுபவிக்கும் ஸ்திதியே ஜாக்ரதமாகும். ஸ்தூலமான சப்தம் முதலிய இல்லாது போயினும், அச்சமயத்துக்கு வாசனைகளின் உருவமாகச் சிருஷ்டிக்கப்பட்ட சப்தம் முதலிய விஷயங்களை, ஜாக்ரத நிலையில் வாசனைகளோடு சம்பந்தப் பட்ட பதினுன்கு அங்கங்களின் மூலம் ஜீவாத்மா அநுபவிக்கும் நிலையே ஸ்வப்னமாகும். இந்த அங்கங்கள் இல்லாததால் அநுபவிக்கும் சிறப்பான உணர்ச்சியின்றி, பதினுன்கு அங்கங்களின் வேலை களும் ஓய்ந்திருப்பதிலிருந்து, ஜீவாத்மா சப்தம் முதலிய இந்திரியங்களின் விஷயங்களை அநுபவிக்கா மல், சுஷுப்திநிலையை அநுபவிக்கிறது.

ஈஸ்வரனின் கட்டளைகளின்கீழ் விராட் இந்த மனித சரீரத்தில் புகுந்து, புத்தியை வாகனமாகக் கொண்டு விஸ்வன் என்னும் ஸ்திதியை அடைகிருன். அப்போது அவனுக்கு விஞ்ஞானுத்மா, சிதாபாஸன் வியவஹாரிகன், ஜாக்ரத நிலையிலுள்ள ஸ்தூல சரீரத்துக்கு எஜமானன், கர்மாவினுல் உற்பவித்த வன் என்னும் பொதுப் பெயர்களை அடைகிருன். சூத்திராத்மா (ஹிரண்யகர்ப்பன்) ஈஸ்வரனின் கட்டளைகளின்படி சூக்ஷ்ம மனித சரீரத்தில் புகுந்து, மனதை வாகனமாகக் கொண்டு தேஜஸன் நிலையை யடைகிருன். அப்போது அவனுக்கு தேஜஸன், பிரதிபாஸிகன், ஸ்வப்ன கல்விதன் (கனவினுல் வளர்க்கப்பட்டவன்) என்றும் பெயர்கள் வழங்கப் படுகின்றன. பிறகு ஈஸ்வரன் கட்டளைகளின்படி, மாயையின் வாகனமாகிய அவ்யக்தத்தோடு சேர்ந்து, காரண மனித சரீரத்தில் புகுந்து பிராக்

ஞன் ஸ்திதியை அடைகிறான். அப்போது அவனுக்கு பிராக்ஞன், புவிச்சின்னன், அபரமார்த்ரிகன் சுஷுப்தி அபிமானி (சுஷுப்தியை ஆதிக்கம் செய்பவன்) என்னும் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

ஜாக்ரதஸ்திதியில் ஜீவனின் ஸ்தானம் கண். வாக்கு வைகாரி. ஸ்தூலமான போகங்களை அநுபவிக்கிறான். ஜீவன் ஸ்தூல இந்திரிய சுகங்களை அநுபவிக்கிறான். வேலை செய்யும் சக்தி கிரியா சக்தி. ரஜோகுணம் ஆதிக்கம் கொண்டிருக்கிறது. அந்த அவஸ்தையில் ஒன்றியிருப்பவன் அல்லது அபிமானி விஸ்வன் எனப்படுவான்.

ஸ்வப்னாவஸ்தையில் ஜீவனின் இருப்பிடம் கழுத்து (ஹிதநாடி), வாக்கு மத்தியமம். ஜீவன் வாசனைகள் மூலம் சூக்ஷ்ம இன்பங்களை நுகர்கிறான். வேலை செய்வது ஞானசக்தி. சத்வகுணம் ஆதிக்கம் வகிக்கிறது. அந்த அவஸ்தையில் ஒன்றியிருப்பவன் அல்லது அபிமானி தேஜஸன் எனப்படுவான்.

ஆழ்ந்த நித்திராவஸ்தையில் ஜீவனின் ஸ்தானம் இருதயம். வாக்கு பஸ்யந்தி. ஜீவன் ஆத்மானந்தத்தை அநுபவிக்கிறான். சக்தி திரவ்ய சக்தியாகும். தமோகுணம் ஆதிக்கம் வகிக்கிறது. அந்த அவஸ்தையில் ஒன்றியிருப்பவன் அல்லது அபிமானி பிராக்ஞன் எனப்படுவான். கீழ் கொடுக்கப்பட்டிருக்கும் அட்டவணை வெவ்வேறு விஷயங்களை மிக எளிதாக நினைவில் வைத்திருப்பதற்கு உதவும்.

| ஜாக்ரத அவஸ்தை | ஸ்வப்ன அவஸ்தை | சுஷுப்தி அவஸ்தை |
|---|---|---|
| 1. ஜீவனின் ஸ்தானம் கண் | ஸ்தானம் கழுத்து | ஸ்தானம் ஹிருதயம் |
| 2. வைகாரி (வாக்) | மத்யமம் | பஸ்யந்தி |
| 3. ஸ்தூல போகம் | சூக்ஷ்ம வாசனாமயமானபோகம் | ஆனந்தம் (போகம்) |

| | | | |
|---|---|---|---|
| 4. | கிரியா சக்தி | ஞான சக்தி | திரவ்ய சக்தி |
| 5. | ரஜோகுணம் | ஸத்வகுணம் | தமோகுணம் |
| 6. | அபிமானிப்பவன் விஸ்வன் | அபிமானிப்பவன் தேஜஸன் | அபிமானிப்பவன் பிராக்ஞன் |

ஒரு குடத்தில் கடல் நீரை நிரப்பி, அதைக் கயிற்ருல் சுருக்கிட்டு கடலில் அமிழ்த்து. குடத்தின் நீர் கடல் நீரோடு ஒன்ருயிருப்பினும், அது பானை என்னும் வரையனுக்கும் விசேஷம் (உபாதி) காரணமாகத் தனியாயிருப்பதுபோல் காண்கிறது. நீ கயிற்றினுல் அக்குடத்தை மேலே தூக்கும்போது, குடத்து நீர் வேருக ஆகிறது. ஆனுல் நீருள்ள குடத்தையும் கடலையும் தாங்கும் ஆகாசம் (ஈதர்) எப்போதும் மூன்று காலத்திலும் ஒரே சுஜாதீய மான சாரத்தாலாக்கப்பட்டது.

இதேபோல், ஜீவனுடைய சூக்ஷ்ம சரீரம் அல்லது லிங்க சரீரமாகிய குடம் அஞ்ஞானமாகிய கடல் நீரினுல் நிரப்பப்பட்டு அதிருஷ்டம் (நல்வினை தீவினையாகிய ஸம்ஸ்காரம்) என்னும் கயிற்றினுல் சுருக்கிடப்பட்டு ஆழ்ந்த தூக்கத்தின்போது ஈஸ்வரனது உபாதியாகிய மாயையான சமஷ்டி அஞ்ஞானத்தில் உட்படுகிறது. ஜீவனின் உபாதி யாகிய வியஷ்டி அஞ்ஞானத்தில் உட்படுகிறது. ஜீவனின் உபாதியாகிய வியஷ்டி அஞ்ஞானம் அல்லது தனித்தனியான அறிவின்மை எல்லாத்தனி அஞ்ஞானங்களின் சேர்க்கையாகிய சமஷ்டி அஞ் ஞானத்தோடு இப்போது ஒன்ருய் விட்டபோதிலும், லிங்கசரீரம் என்றும் உபாதி காரணமாக தனியா யிருப்பதுபோல் தோன்றுகிறது. ஆந்திரீக அதிபன் அல்லது அந்தர்யாமி அதிருஷ்டமாகிய கயிற்றை இழுக்கும்போது, அது வேருகிறது. அப்போது ஜீவன் ஜாக்ரத நிலைக்குத் திரும்ப வருகிறது. சூக்ஷ்ம சரீரத்துக்கு ஆதாரமாயும், தனிப்பட்ட அஞ்ஞானமாகிய நீருடனும் அஞ்ஞான சேர்க்கை

யாகிய கடலோடும் சம்பந்தப்பட்டதாயும் உள்ள சிதாகாசன் அல்லது ஆத்மன் அல்லது மூன்று அவஸ்தைகளுக்கும் மௌனமான சாட்சியானது எப்போதும் மூன்று காலத்திலும் ஒரே சுஜாதீய மான சாரத்தால் ஆக்கப்பட்டது.

மற்றொரு மனிதனை அல்லது அவனது நிலைகளை அல்லது அந்நிலைகளில் அவனது செயல்களை கவனித்தும் தான் அதனால் எவ்வித மாறுதலையும் பெறாதவனே சாட்சியாவான். உதைப்பந்து அல்லது மட்டைப்பந்து (cricket) ஆட்டப் பந்தயத் தைப் பார்ப்பவன் ஒரு சாட்சி. அந்த ஆட்டப் போட்டியில் வெற்றி தோல்வி அவனை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை. அவன் உண்மையில் ஆட்டத்தைக் கண்டு களிக்கும் காட்சி மாத்திரமே.

ராமதாஸ் ஒரு கோவிலில் ஜபம் செய்து கொண்டிருந்தான். ஸ்ரீ ஜோஷியும் ஸ்ரீ பானர்ஜி யும் ராமதாஸ் எதிரில் அமர்ந்து ஒரு மணி நேரம் ஜபம் செய்தார்கள். பிறகு ஜோஷி பானர்ஜியை அவன் இரண்டு ஆண்டுகளுக்குமுன் தன்னிடமிருந்து கடன் வாங்கிக் கொண்ட தொகையைத் திருப்பிக் கொடுக்கும்படி கேட்டான். அவர்கள் இருவரும் ஒரு மணிநேரம் சாந்தமாகப் பேசிக் கொண்டிருந் தனர். பிறகு ஜோஷி கடுமையாகப் பேசத் தொடங்கி அவனை உடனே தன் பணத்தைத் திருப் பிக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டான். பானர்ஜி பணத்தைத் திருப்பிக் கொடுக்க மறுத்தான். இரு வரும் சண்டையிடத் தொடங்கினர். உடனே ஜோஷி ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரிடம் சென்று ''ஸ்ரீ பானர்ஜி இரண்டு வருஷத்துக்கு முன் என் னிடம் பணம் கடன் வாங்கிக் கொண்டார். நான் அதைத் திருப்பிக் கொடுக்கும்படி கேட்டேன். அவர் என்னைத் திட்டி அடிக்கிறார்'' என்று முறை யிட்டுக் கொண்டான். போலீஸ் உத்தியோகஸ்தர்

ஜோஷியை ''உங்களுக்குச் சாட்சி உண்டா?'' என்று கேட்டார். ஜோஷி ''ஆகா, சாட்சியிருக்கிறார். கோவிலில் ஜபம் செய்து கொண்டிருந்த ராமதாஸ்தான் சாட்சி'' என்றான். சண்டை போடும் இருவரைச் சம்மந்தமில்லாமல் பார்த்துக் கொண்டிருக்கும் சாட்சியைப் போலவே, ஆத்மனும் ஜாக்ரதம், ஸ்வப்னம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளிலும் தான் யாதொரு விதமும் சம்பந்தப்படாமல் சாட்சியாக இருக்கிறது.

மேற்கூறிய உதாரணத்தில், ஜபம் செய்யும் போது ஜோஷியும் பானர்ஜியும் இருந்த மௌன நிலை ஆழ்ந்த தூக்க நிலைக்குச் சமானம். இந்த நிலையில் வியாபாரத்ரியம் இல்லை. ஜோஷியும் பானர்ஜியும் அவஸ்தாவாஸிகள். ராமதாஸ் சாட்சி. அவர்கள் சாந்தமாகப் பேசிக்கொண்டிருந்த நிலை ஸ்வப்னாவஸ்தைக்குச் சமானம். அவர்கள் சண்டை போட்டுக் கொண்டிருந்த நிலை ஜாக்கிரதாவஸ்தைக்குச் சமானம். உதாரணங்கள் எப்போதும் ஏகதேசமானவை. அவற்றை அதிகமாக நீட்டாதே. அவை ஒரு விஷயத்தைத்தான் விளக்குகின்றன. விவஹாரம் அல்லது காரியங்கள் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று வகையானவை. ஜோஷி பானர்ஜி இருவரின் செயல்களையும் ராமதாஸ் பார்த்துக் கொண்டிருந்தான். அவர்களது செயல்களோடு அவன் எவ்விதத்திலும் சம்பந்தப்படவில்லை. மூன்று நிலைகளையும், மூன்று நிலைகளின் செயல்களையும், ஜீவர்களையும் கூடப்பார்த்துக் கொண்டிருப்பவன் தான் சாட்சி.

ஜாக்ரத நிலையை ஒரு பெரிய நகரத்துக்கும் ஸ்வப்ன நிலையை நகரத்தின் கோட்டை கொத்தளங்களுக்கும் சுஷுப்தி நிலையை நகரத்துக்குள் மத்தியிலுள்ள அரச மாளிகைக்கும் ஜீவனை அரசனுக்கும் ஒப்பிடலாம். அரசன்

மாளிகையை விட்டு வெளிவந்து தன் ரதத்தில் நகரத்தைச் சுற்றி பலவித விஷயங்களை அநுபவித்துத் தன் அரண்மனை திரும்பி அரசியோடு குலவுகிருன். ஜாக்ரத நிலையில் ஜீவன் ஸ்தூல சரீரத்தின்மீது ஆதிக்கம் செலுத்தி, மனத்தாலும், வாக்காலும், காயத்தாலும் மூன்றுவிதமான செயல்களில் ஈடுபடுகிருன். அவன் விஸ்வன் என்னும் பெயரால் அறியப்படுகிருன். அவன் சூக்ஷ்ம சரீரத்தைச் செலுத்தி வாசனைகள் மூலம் ஸ்வப்ன நிலையை அனுபவிக்கிருன். அவன் தேஜஸன் எனப்படுகிருன். அவன் சுஷுப்தி அவஸ்தையின்போது காரண சரீரத்தை நடத்துபவனுய் ஆழ்ந்த நித்திரையாகிய ஆனந்தத்தை அநுபவிக்கிருன். அவன் பிராக்ஞன் எனபடுகிருன். முன்னுள் நீ அநுபவித்த மூன்று நிலைகளையும் நீ தினந்தோறும் நினைவு கூறுகிருய். அநுபவமின்றி எதைப்பற்றியும் நினைவு இருக்க முடியாது.

ஜீவன் மாறுதலுக்கு ஆளாகிறது. அவனை சாட்சி என்று கூறமுடியாது. ஏனெனில் ஆழ்ந்த தூக்க நிலையில் அவன் மறைந்து விடுகிருன். அவன் உண்மை அல்லாதவன். அவன் மனத்தில் பிரதி பிம்பம் மாத்திரமே. மனது ஆழ்ந்த தூக்கத்தின் போது, மூல அஞ்ஞானத்தில் மூழ்கியிருக்கும்போது, சுயம் ஜோதியான ஆத்மன் பிரகாசிக்கிருன். அவன் எல்லா ஜீவர்களின் ஆழ்ந்த தூக்க நிலையையும் பார்த்துக்கொண்டிருக்கிருன். ஆத்மன் மாறுதலற்றதானதால், ஆத்மா சாட்சியாகத்தான் இருக்க முடியும். சுருதிகள் ''ஆத்மா சாட்சி, புனிதமான அறிவு, இரண்டாவது இல்லாத ஏகமானது, குணம் குறிகள் இல்லாத ஒரே சுஜாதீயமான சாரம்'' என்று உறுதியாகக் கூறுகின்றன. ஜீவன் ''நான் இப்போது சந்தோஷமாக இருக்கிறேன். நான் துக்கப்படுகிறேன். எனக்குத் தூக்கம் வருகிறது. நான் நேற்றிரவு கனவு கண்டேன். நான் இப்போது

பூரணமாக விழித்து இருக்கிறேன். நான் முற்றிலும் அசட்டையாயிருக்கிறேன்'' என்று கூறுகிறான். இந்த மூன்று நிலைகளையும் உணர்கிற ஒரு அறிவுள்ள புருஷனை, ஜீவனின் இம் மூன்று நிலைகளுக்கும் சாட்சி என்றுதான் கூறலாம். அந்த அறிவுள்ள புருஷன் சச்சிதானந்த ஆத்மா அல்லது பிரம்மம்.

மூர்ச்சை நிலையில் இருக்கும் ஸ்மரணையற்ற மனிதனுக்கு பாதிச் சேர்க்கை இருக்கிறது. மூர்ச்சையாகப் படுத்திருக்கும் மனிதனை விழித்திருக்கிறான் என்று சொல்ல முடியாது. ஏனெனில் அவன் தனது புலன்களால் வெளி விஷயங்களை உணர்வதில்லை. மூர்ச்சையிலிருந்து பிரக்ஞைக்குத் திரும்பும் மனிதன் ''அவ்வளவு நேரம், நான் ஒன்றையும் உணரவில்லை. நான் ஆழ்ந்த இருளில் அடங்கியிருந்தேன்'' என்கிறான். விழித்திருக்கும் மனிதன் தன் சரீரத்தை நிமிர்த்தி நிற்கிறான். ஆனால் மூர்ச்சையிலிருக்கும் மனிதனது சரீரம் தரையில் குப்புற விழுகிறது. அவன் மூச்சு விட்டுக்கொண்டும் தேகம் சூடாயுமிருப்பதால் அவன் இறக்கவில்லை. தண்ணீரை முகத்தில் வீசினால், அவன் படிப்படியாக பிரக்ஞைக்குத் திரும்புகிறான்.

சில சமயங்களில் மூர்ச்சையுற்ற மனிதன் வெகு நேரம் வரையில் மூச்சு விடுவதில்லை. அவனது சரீரம் துடிக்கிறது. அவனுடைய கண்கள் அகலத் திறந்து வெறித்துப் பார்க்கின்றன. தூங்குகின்ற மனிதனது முகம் சாந்தமாயிருக்கிறது. அவன் மூச்சு ஒழுங்காக வருகிறது, கண்கள் மூடியிருக்கின்றன, அவனது சரீரம் துடிப்பதில்லை. தூங்குகிற மனிதனைக் கையினால் மெதுவாக அசைத்தே விழிக்கச் செய்யலாம். மூர்ச்சை நிலையிலுள்ளவனைத் தடியால் அடித்துக்கூட எழுப்ப முடியாது. தலையில் அடிபட்டால் மூர்ச்சையுண்டாகிறது. தூக்கம் களைப்பினால் உண்டாகிறது.

ஸ்மரணையின்மை பாதி ஆழ்ந்த தூக்கத்தையும், மறுபாதி மரணத்தையும் சேர்ந்தது. ஆத்மாவுக்கு அலுவல் பாக்கியிருந்தால், பேச்சும் மனமும் திரும்புகின்றன. நூதன அலுவல் பாக்கியில்லாவிட்டால், மூச்சும் வெப்பமும் அவனை விட்டுப் பிரிகின்றன. ஆகவே பிரம்மத்தை அறிபவர்கள் மூர்ச்சையை பாதிச் சேர்க்கை என்று கூறுகிறார்கள்.

ஆத்மா மேற்கூறிய மூன்று நிலைகளின் இருப்புக்கு சாட்சியாயுள்ள நிலையே துரியம். அந்நிலையில் அவைகளின் இருப்பும் இல்லாமையுமின்றி ஆத்மா இருப்பதோடு இடையறாத சைதன்யமாகவே உளது. அந்தச் சைதன்யம் மூன்று நிலைகளுடன் சம்பந்தப்பட்டதும், அம்மூன்று நிலைகள் இல்லாததும், தூய்மையானதுமானது.

ஜாக்ரத நிலை உனக்குத் தெரியும். ஸ்வப்ன நிலையிலும் சுஷுப்தி நிலையிலும் ஜாக்ரத நிலையில்லையென்பதும் தெரியும். ஆகவே, நீ ஜாக்ரத நிலையல்ல. அது உனக்குஉரியதேயல்ல. அது ஸ்தூல சரீரத்துக்கு உரியது. இந்த மேஜை நாற்காலிக்கு நீ சாட்சியாய் இருப்பதுபோல், ஜாக்ரத நிலைக்கும் நீ சாட்சி மாத்திரமே. நீ ஜாக்ரத நிலையினின்று முற்றிலும் வேறானவன். ஜாக்ரத அவஸ்தையிலும் சுஷுப்தி அவஸ்தையிலும் ஸ்வப்ன அவஸ்தையில்லாமின்மையை நீ அறியாய். ஆகவே நீ சுவப்னாவஸ்தை அல்ல. அது உனக்குச் சொந்தமேயல்ல. அது சூக்ஷ்ம சரீரத்தைச் சேர்ந்தது. இந்த நாற்காலி மேஜைக்கு நீ சாட்சியாயிருப்பது போலவே, ஸ்வப்னாவஸ்தைக்கு நீ சாட்சி மாத்திரமே. நீ ஸ்வப்ன நிலையிலிருந்து முற்றிலும் வேறானவன். நீ சுஷுப்தி அவஸ்தையை அறிவாய். ஜாக்ரத அவஸ்தையிலும் ஸ்வப்ன அவஸ்தையிலும் சுஷுப்தி நிலையின் இன்மையும் உனக்குத் தெரியும்.

ஆகவே, நீ சுஷுப்தி அவஸ்தையல்ல. அது உனக்குரியதேயல்ல. அது காரண சரீரத்துக் குரியது. இந்த மேஜை நாற்காலிக்கு நீ சாட்சியா யிருப்பது போலவே, சுஷுப்தி நிலைக்கு நீ சாட்சி மட்டுமே. நீ சுஷுப்தி நிலையிலிருந்து முற்றிலும் வேறானவன்.

மாண்டூக்ய உபநிஷத்திற்குத் தமது ஒப்பற்ற அபூர்வ பாஷ்யத்தைத் தொடங்கும் பின்வரும் பிரார்த்தனைச் செய்யுளில் சங்கரர் இந்த எதிரின்றிய அவஸ்தை முறையை அடிப்படையாகக் கொண்ட வேதாந்த சாரத்தை விளக்குகிறார்:—

''எல்லா வஸ்துக்களிலும் தனது கிரணங் களால் வியாபித்து ஸ்தூலத்தை அநுபவித்த பிறகு — பூரண நிர்விகாரமான சைதன்யம் — பல்வேறு சராசரப் பிரபஞ்சத்தில் எது எப்போதும் இருக்கிறதோ, கர்மத்தாலும் அவித்யையாலும் உந்தப்பட்டு ஆந்திரீக ஞான உறுப்பின் சிருஷ்டி கள் யாவற்றையும் தனக்குள் மறுபடி ஜீரணித்துக் கொண்ட பிறகு, எது எப்போதும் இனிமையாய் உறங்குகிறதோ, எனினும் பிரமை மூலம் நமக்கு கர்மபலத்தை எது அளிக்கிறதோ, எது (ஸ்தூல, சூக்ஷ்ம, காரணமாகிய மூன்றை ஒன்று சேர்த்து) நான்காவதோ, எது எப்போதும் ஒன்றாய் ஆதியற்ற ஆனந்தமாயுளதோ அந்த பிரம்மத்தை நான் வணங்குகின்றேன். நான்காவதாயிருந்து, விராட்புருஷனாய் அஞ்ஞானம் பற்றுதல் ஆகிய வற்றின் பலத்த பயன்களை அநுபவித்து, பிறகு ஆந்திரீக ஞான உறுப்பால் சூக்ஷ்ம பலன்களை உண்டாக்கிக் கொண்டு, தனது ஒளியாலேயே பிரகாசிக்கப்பட்டு, கடைசியாக இந்த நிலைகள் யாவற்றையும் தனக்குள்ளேயே எது இழுத்துக் கொள்ளுகிறதோ இந்த ஏகமான, வரையறையற்ற,

வேறுபாடில்லாத, குணமின்றிய பொருள் நம்மைக் காப்பதாக.''

மேனுட்டுத் தத்வ சாஸ்திரிகள் ஜாக்ரதம், ஸ்வப்னம், சுஷுப்தி ஆகிய மூன்று பிரக்ஞை நிலை களையும் ஆலோசனையில் எடுத்துக்கொள்வதில்லை. அவர்கள் ஜாக்ரத நிலையின் அநுபவங்களை மட்டுமே ஆராய்ந்திருக்கிறார்கள். ஆகவே அவர்களது தத்வ சாஸ்திரம் பூரணமானதல்ல. இந்த மூன்று நிலை களை முழுவதும் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ள வேண்டும். இம் மூன்று நிலைகள் மனிதனின் முழு அநுபவத்தையும் கொண்டிருக்கின்றன. ஜாக்ரத நிலையைப் போலவே ஸ்வப்ன நிலையும் அவ்வளவு உண்மையானதே. சுஷுப்தி நிலை இன்னும் அதிக உண்மையானது. ஏனெனில் ஜீவன் பரமானந்த மெய்ப்பொருளோடு (பிரம்மம்) சம்பந்தப்பட்டு பிரம்மத்தின் பரமானந்தத்தை அநுபவிக்கிறது. சில ஜனங்கள் கற்பனை செய்வதுபோல் இது ஒரு எதிர்மறை நிலையல்ல. ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் இடையில் மோஹ அஞ்ஞானமாகிய மெல்லிய அஞ்ஞானத் திரை மட்டுமே உளது. இந்தத் திரை யும் நீக்கப்பட்டால், உயர்ந்த ஞானுபவம் உண்டாகி சாதகன் புராதன பிரம்ம தேஜஸோடு பிரகாசிக்கிறான்.

இடையரு த ஆழ்ந்த சாதனத்தின் மூலம் ஆத்மாவை மூன்று நிலைகளின் சாட்சியாக உள்ளபடி உணர்ந்த பாக்கியவானான முனிவர் உண்மையான விடுதலையடைந்த ஞானி. அவர் தாமே பிரம்ம மானதால் அவரை யாவரும் போற்றவேண்டும்.

## மூன்று அவஸ்தைகள்

ஸ்வப்னத்தில் ஒரு மனிதன் மன்னனாகி ஆசைப் படும் எல்லாச் சுகங்களையும் அநுபவிக்கிறான். பிறகு

விரோதியால் தோற்கடிக்கப்பட்டு, கானகம் சென்று தவம் புரிகிறுன். பின்பு அவன் தான் பிச்சைக்காரனுகக் கனவு காண்கிறுன். அரை மணிக்குள், அவன் எண்பது ஆண்டுகள் உயிர் வாழ்ந்ததாகக் கற்பனை கொள்கிறுன். தான் பாம்பினுல் கடியுண்டு இறந்ததாகக் கனவு காண்கிறுன். அவன் பயந்து கண்விழித்து யாவும் கனவுதான் என்று உணர்கிறுன். விழித்திருக்கும்போது, ஒரு மனிதன் ஸ்வப்னத்தில் கண்ட பொருள்களைக் காண்பதில்லை. அதேபோல் ஒரு ஞானி பிரம்ம ஞானத்தை யடைந்தபோது பிரபஞ்சத்தைக் காண்பதில்லை.

நீ விழித்தவுடன் கனவு பொய்யாய் விடுகிறது. கனவில் ஜாக்ரத நிலைக்கு இருப்பு கிடையாது. ஆழ்ந்த தூக்கத்தில் ஸ்வப்ன ஜாக்ரத நிலைகள் இல்லை. கனவிலும் ஜாக்ரத நிலையிலும் ஆழ்ந்த தூக்கம் கிடையாது. ஆகவே மூன்று நிலைகளும் உண்மையற்றவையே. அவை ஸத்வ, ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களால் உண்டாக்கப் படுகின்றன. பிரம்மம் அல்லது பரம்பொருள் மூன்று நிலைகளுக்கும் மௌனமான சாட்சி. அது முக்குணங்களையும் கடந்தது. அது புனிதமான ஆனந்தமும் ஞானமுமாகும், அது சச்சிதானந்தம்.

---

## 3. ஆத்மா பஞ்சகோசங்களிலிருந்தும் வேறுபட்டது

ஆத்மா பஞ்சகோசங்கள் அல்லது உறைகளிலிருந்து வேறுனது. அன்னமய கோசம், பிராணமய கோசம், மனேமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமயகோசம் ஆகியவையே பஞ்ச கோசங்கள். ''மானய'' என்றுல் பூரணம். ''கோசம்'' என்றுல் உறை அல்லது கவசம்.

உறை உடைவாளை மறைத்திருப்பது போலும், மேல் ஓடு புளியம் பழத்தை மறைத்திருப்பது போலவும், சட்டை சரீரத்தை மறைத்திருப்பது போலவும், இவ்வைந்து உறைகளும் ஆத்மாவை மறைத்திருக்கின்றன. இதனுல்தான் கோசம் என்னும் அர்த்தமுள்ள பெயர் வந்துள்ளது. கோசகார புழு (கூட்டுப் புழு) தனது கூட்டில் அடைபடுவதுபோல், ஜீவனும் கோசங்களுக்குள் அடைபட்டுக் கிடக்கிறது.

அன்னமய கோசம் என்பது இந்த ஸ்தூல சரீரம். இதுதான் மிக நெருக்கமான உறை. இது சுக்கில சுரோணிதச் சேர்க்கையால் உண்டானது. அது உணவினுல் உண்டானது. ஏனெனில் சுக்கிலம் (விந்து) உணவிலிருந்துதான் உருவாக்கப் படுகிறது. சரீரம் உணவினுல் போஷிக்கப்படுகிறது. உணவில்லாவிடில் மரிக்கிறது. மரணத்துக்குப் பிறகு அன்னமயமான மண்ணில் அது ஒன்ருகிவிடுகிறது. அது இன்ப துன்ப அநுபவத்துக்கு இருப்பிடம். அது ஆறு மாறுதல்களுக்கு (ஷட்பாவ விகாரங்கள் அதாவது பிறப்பு, இறப்பு, வளர்ச்சி, மாறுதல், சிதைவு, மரணம்) உட்பட்டது. ஆகவே அன்னமய கோசம் என்று பெயர்.

அன்னமய கோசம் ஸ்தூல சரீரம் ஆகிறது. பிராணமய, மனேமய, விஞ்ஞானமய கோசங்கள் அடங்கினதே சூக்ஷ்ம சரீரம் அல்லது லிங்க சரீரம். ஆனந்தமய கோசமே காரண சரீரம். ஐந்து கர்மேந்திரியங்களும் பிராணமய கோசத்தில் அடங்கியுள்ளன. ஐந்து ஞானேந்திரியங்களும் மனேமய கோசத்தில் அடங்கியுள்ளன.

சூரிய கிரணங்களால் உண்டாக்கப்பட்டு சூரியனுலேயே இருப்புள்ள மேகங்கள், எப்படி சூரியனையே மறைக்கின்றனவோ, நெருப்பினுலேயே

உண்டான புகை எப்படி நெருப்பையே மறைக்கிறதோ, பழுதையினுலேயே உண்டான பாம்பு எப்படி பழுதையே மறைக்கிறதோ, களிமண்ணுல் உண்டாக்கப்பட்ட குடம் எப்படி களிமண்ணையே மறைக்கிறதோ, பொன்னுல் செய்யப்பட்ட கடுக்கன்கள் எப்படி பொன்னையே மறைக்கின்றனவோ, அவ்வாறே ஆத்மாவினுலேயே ஆக்கப்பட்ட ஐந்து கோசங்களும் ஆத்மாவையே மறைக்கின்றன.

மனித உள்ளத்தின் இயல்பான போக்கு ஆத்மாவை பஞ்ச கோசங்களோடு ஒன்றுபடுத்திக் கொள்வது. இதற்குக் காரணம் அஞ்ஞானமே (அவித்யை). இதற்குக் காரணம் அத்யாஸம் அல்லது மேல் சுமத்துதல். மந்த புத்தியுடைய மூடமனிதன் ஸ்தூல சரீரத்தோடு தன்னை ஒன்ருக்கிக் கொள்கிருன். ஏனையோர் தன்னை அல்லது ஆத்மாவை பிராணன், மனது, புத்தி அல்லது காரண சரீரத்தோடு தங்கள் தங்கள் புத்தி நிலைக்குத் தக்கபடி ஒன்றுபடுத்திக் கொள்கின்றனர். ஆத்மன் ஐந்து உறைகளுக்கும் அப்பாற்பட்டது. அது பஞ்ச கோசங்களினின்றும் முற்றிலும் வேறுபட்டது. நீ ஆத்மஞானத்தை அடைய விரும்பினுல், நீ இந்த ஐந்து உறைகளையும் ஊடுருவிச் செல்ல வேண்டும். இப்பஞ்ச கோசங்கள் ஒரு குகை; அக் குகையில் ஆத்மா அடைபட்டுள்ளது. சுயம் ஜோதியான ஆத்மா பிராணன்களுக்கு மத்தியில் இருதயத்தில் பிரகாசிக்கிறது. நீ ஆத்மஞானத்தையடைந்து ''நேதி நேதி'' என்னும் வேதாந்தக் கொள்கையை அனுபவிக்க விரும்பினுல், பஞ்ச கோசங்களைப் பற்றிய விவரமான அறிவு அல்லது விரிவான விளக்கம் ஒரு முக்கியமான தேவையாகும்.

அன்னமய கோசம் அல்லது ஸ்தூல சரீரத்தினின்று ஆத்மன் முற்றிலும் வேறுபட்டது

என்பதைப் பின்வரும் வாதங்கள் நிரூபிக்கின்றன. சர்மம், சதை, இரத்தம், எலும்பு ஆகியவற்ருேடு மற்றும் ஏராளமான அசுத்தப் பொருள்கள் சேர்ந்ததே ஸ்தூல சரீரம். அது ஒருபோதும் நித்திய சுத்தமான, சுயமான இருப்புள்ள பிரம்ம மாக இருக்க முடியாது. பிறப்புக்கு முன்பும் மரணத்துக்குப் பின்பும் அதற்கு இருப்பு கிடை யாது. அது சிறிது காலமே இருக்கிறது. அது பாகங்கள் நிறைந்தது. அது எப்போதும் மாறிக் கொண்டேயிருக்கிறது. அதற்கு ஆரம்பமும் முடி வும் உண்டு. அது ஜடமானது. அது தமோ குணத்தின் காரியம். அது பஞ்ச பூதங்களின் சேர்க்கையாலானது. எல்லா வஸ்துக்களின் மாறுதல்களுக்கும் மௌனமான சாட்சியான தானேயாக அது எப்படியிருக்க முடியும்?

பிணத்துக்கு உணர்ச்சியில்லே. ஸ்தூல சரீரமே தான் ஆத்மஞயின், உயிருள்ள சரீரத்தைப் போலவே ஜடமான பிணமும் உணர்ச்சியுள்ள தாயிருக்க வேண்டும். ஸ்வப்ஞவஸ்தையில் ஸ்தூல சரீரம் பிணம் போல் கிடக்கிறது. ஸ்தூல சரீரம் நித்தியமானதல்ல. அது மரணத்துக்குப் பிறகு நசிந்து விடுகிறது. ஸ்தூல சரீரத்துக்கு ஆதியும் அந்தமும் இருப்பதால், அதுவும் குடத்தைப்போல் ஒரு காரியமே. சில அவயவங்கள் போய் விட்டா லும், கால் கைகள் வெட்டப்பட்ட போதிலும் ஒருவன் உயிரோடிருப்பதால், சரீரம், தாஞக (ஆத்மஞக) இருக்க முடியாது. சரீரம், அதன் குண விசேஷங்கள், செயல்கள், நிலேமைகள் ஆகிய வற்றிற்கு மௌனமான சாட்சியாய் விளங்கும் ஆத்மா அவற்றினின்றும் முற்றிலும் வேறுபட்டது என்பது தாஞகவே விளக்கமாகிறது. அதற்கு நிரூபணம் ஏதும் தேவையில்லே. எலும்புகளால் பொதிந்து, சதையால் போர்த்தி, ஆபாசம்

நிறைந்து மிக அசுத்தமான ஜடசரீரம், சுயம் ஜோதியாயும், சுயமாக இருப்புள்ளதாயும், அறிபவனுயும் சரீரத்தினின்று எப்போதும் வேறுபட்டவனுயும் உள்ள ஞானமயமான ஆத்மாவாக இருத்தல் எவ்வாறு இயலும்?

மூட மனிதன் மாமிசம், கொழுப்பு, சர்மம், எலும்புகள், அசுத்தம் ஆகியவற்ருல் அமைந்த சரீரத்தை, தாஞக எண்ணிக் கொள்கிருன். விவேகியோ இந்த அழியும் சரீரத்திலிருந்து தான் வேறுபட்டவன் என்று அறிந்திருக்கிருன். மூடன் சரீரமே தாஞகக் கருதுகிருன். சில சமய நூல்களைப் படித்த பண்டிதன் தன்னை, சரீரம் ஆத்மாவின் கலப்பாகக் கருதுகிருன். ஆனுல் முக்திபெற்ற ஞானியோ நித்தியமான, மாறுதலற்ற ஆத்மாவையே தாஞகக் கொள்கிருன். படித்துத் தேர்ந்த பண்டிதன் வேதாந்தத்தில் வித்வாஞக இருப்பினும், இந்தப் பொய்யான, அழியும் சரீரத்தைத் தாஞகக் கருதும் தவற்றை விட்டொழித்தாலொழிய அவனுக்கு முக்திக்கு மார்க்கமில்லை. ஜடசரீரத்தோடு ஒன்றிக் கொள்வதுதான் ஜனன மரணத்தையும் அதன் உடனிகழ்ச்சிகளான துன்பங்களையும் உண்டாக்கும் மூலகாரணமாகும். ஆகவே இந்த ஒன்றுதலை ஒழி. மறு பிறப்புகளுக்கு மேலும் சந்தர்ப்பமில்லை. அறிவற்ற லௌகீக மனிதனே! அசுத்தம், மாமிசம், எலும்புகளாலாகிய இந்த ஜட சரீரத்தில் மோகத்தை விட்டொழி. எல்லாவற்றிற்கும் ஆத்மாவான புனிதமான பிரம்மத்தோடு ஒன்றுபடுத்திக் கொண்டு அமரத்துவத்தையும் நித்திய சாந்தியையும் அடைவாயாக.

அந்யோன்ய அத்யாஸம் அல்லது பரஸ்பரம் மேல் சுமத்துவதன் மூலம் அன்னமய கோசத்துக்கும் ஆத்மனுக்கும் மாயீகமான தொடர்பு இருக்கிறது. அதனுல் அன்னமய கோசத்தின் தர்மங்கள் அல்லது

குணங்கள் ஆத்மன் மீதும் ஆத்மாவின் தர்மங்கள் அன்னமய கோசத்தின் மீதும் சுமத்தப் படுகின்றன.

இந்திய தர்க்க சாஸ்திரத்தில் சமவயம், சம்யோகம் எனும் இரண்டு விதமான சம்பந்தங்கள் இருக்கின்றன. சமவய சம்பந்தம் பிரிக்கப்பட முடியாதது. இந்தச் சம்பந்தம்தான் ஒரு மனிதனுக் கும் அவனது அவயவங்களுக்கும், ஒரு மனிதனுக்கும் அவனது குணங்களுக்கும், செய்பவனுக்கும் அவனது செயல்களுக்கும் உள்ளது. ஆத்மாவுக்கும் பஞ்ச கோசங்களுக்கும் சமவய சம்பந்தம் இல்லை. ஒரு பறைக்கும் அதை அடிக்கும் கொம்புக்கும் உள்ள சம்பந்தமே சம்யோக சம்பந்தம். ஆத்மா பஞ்ச பூதங்களால் ஆக்கப்பட்ட ஒரு வஸ்துவல்ல வானதால், ஆத்மாவுக்கும் பஞ்ச கோசங்களுக்கும் சம்யோக சம்பந்தம் இருக்கமுடியாது. ஆனால் ஆத்மாவுக்கும் பஞ்ச கோசங்களுக்கும் உள்ள சம்பந்தம் பழுதைக்கும் பாம்புக்கும், அல்லது சிப்பிக்கும் வெள்ளிக்கும், அல்லது இருளில் தூணுக் கும் திருடனுக்கும் அல்லது ஆகாயத்துக்கும் நீல நிறத்துக்கும் உள்ளதாகிய அத்யாஸ சம்பந்தம். (மாயீகமான அல்லது சுமத்தப்பட்ட) மாயீகம் ஒன்றினால் இன்னொன்றுக்கு ஏற்பட்டதா, அல்லது பரஸ்பரமானதா? அது பரஸ்பரமே (அந்யோன்ய அத்யாஸம்), ஏனெனில் ஆத்மாவும் அஹங்கார மும் சேர்ந்திருப்பதோடு உலக நடவடிக்கையில் ஒன்று மற்றொன்றாகக் குறிக்கப்படுகிறது.

மனிதருடைய தினசரிப் பேச்சிலிருந்து ஆத்மா வுக்கும் அன்னமய கோசத்துக்கும் உள்ள பரஸ்பர மாயீக சம்பந்தம் தெளிவாக விளங்கக் கூடும். ஜனங்கள் ''நான் ஒரு மனிதன். நான் ஒரு ஆண் மகன், நான் உயிர் வாழ்கிறேன். நான் வளர் கிறேன். நான் மரணமடைவேன். நான் ஒரு

பையன். நான் ஒரு வயது வந்த மனிதன். நான் ஒரு கிழவன். நான் ஒரு பிராம்மணன். நான் க்ஷத்திரியன். நான் வைசியன். நான் சூத்திரன். நான் பிரம்மசாரி. நான் கிரகஸ்தன். நான் சந்நியாஸி. நான் இந்தியன். நான் ஆங்கிலேயன். நான் பண்டிதன். நான் எழுதப்படிக்கத் தெரியாதவன். நான் நோயாளி. நான் ஏழை. நான் பருத்திருக்கிறேன். நான் மெலிந்திருக்கிறேன். நான் ரோகி. நான் ஆரோக்கியவான்'' என்று சொல்லிக் கொள்கிறார்கள். ஈண்டு அன்னமய உறையின் குணங்கள் யாவும் பிரமையால் ஆத்மாவுக்கு ஆரோகணிக்கப்படுகின்றன. ''எனது சரீரம் இருக்கிறது. எனது சரீரம் பிரகாசிக்கிறது. எனது சரீரம் பிரியமானது'' ஆகியவை போன்ற உதாரணங்களிலிருந்து சச்சிதானந்தத்தின் குண நலன்கள் பொய்யாக அன்னமய கோசத்திற்கு அளிக்கப்படுவதைக் காணலாம். ஆத்மாவுக்கும் அன்னமய கோசத்துக்கும் ஒரு பரஸ்பரமான மாயீக சம்பந்தம் இருக்கிறது என்பதை இப்போது நீ தெளிவாக உணரலாம். ஆகவே ஆத்மன் அன்னமய கோசம் அல்ல. இந்த உணவு உறை உளதல்ல. இது ஸ்தூல சரீரம். நீ ஆத்மா. உணவு உறையை ஆத்மா உணர்வதால், அது உணவு உறையினின்று வேறுபட்டது.

இரண்டாவது கோசம் அல்லது ஸ்தூல சரீரத்துக்கு அடுத்து உள்ள கோசம் பஞ்ச பிராணன்களையும் ஐந்து கர்மேந்திரியங்களையும் தனக்குள் உள்ளதாய பிராணமய கோசம் என்று சொல்லப்படுகிறது. இதனால் வியாபிக்கப்பட்ட அன்னமய கோசம் தானே உயிருள்ளதுபோல் எல்லாச் செயல்களிலும் ஈடுபடுகிறது. ஆத்மாவுக்கும் பிராணமய கோசத்துக்கும் அன்யோன்ய அத்யாஸம் அல்லது பரஸ்பர மாயீக சம்பந்தம் இருக்கிறது. பிராணமய

கோசத்தின் குணங்களாகிய பசியும் தாகமும் ஆத்மாவின்மேல் ஆரோகணிக்கப்படுகின்றன. மனிதன் சாதாரணமாக: ''எனக்குப் பசியாயிருக்கிறது. எனக்குத் தாகமெடுக்கிறது. நான் பலமுள்ளவன். நான் தைரியவான். நான் நடக்கிறேன், பேசுகிறேன், கொடுக்கிறேன். நான் தொழில் செய்கிறேன். நான் ஊமை, நான் நொண்டி, நான் சக்தியற்றவன். நான் பலவீனன்'' என்று சொல்லுகிறுன். இங்கு பிராணமய கோசத்தின் செயல்கள் பொய்யாக ஆத்மாவுக்கு (''நான்'' என்பதற்கு) ஆரோகணிக்கப்படுகின்றன. இதற்கு மாருக ஆத்மாவின் குணங்கள் பொய்யாக பிராணமய கோசத்தின் மீது ஆரோகணிக்கப்படுகின்றன. மனிதன் சாதாரணமாக ''என் பிராணன் இருக்கிறது. என் பிராணன் பிரகாசிக்கிறது. என் பிராணன் எனக்குப் பிரியமானது'' என்று சொல்கிருன். இது ஆத்மாவுக்கும் பிராணமய கோசத்துக்கும் உள்ள பரஸ்பர சம்பந்தம்.

பிராணன் ஜடமானது (அசரம்). அது ரஜோ குணத்தின் காரியம். அதற்குத் தன்னைப்பற்றிய அறிவு இல்லை. அது பிறரை அறியாது. தூங்கும் போது அது ஒருவனை வரவேற்காது. அது ஒரு திருடன் நகைகளைக் கொள்ளையிடும்போது அவனைத் தடுக்க முடியாது. ஆகவே அது ஒரு குடம் அல்லது கல்லைப்போல் ஜடமானது. அதற்கு ஆதி அந்தம் உண்டு. அது வாயுவின் மாறு ரூபம், அது வாயுவைப்போல் சரீரத்துக்குள்ளும் வெளியும் போவதும் வருவதுமாயிருக்கிறது. சாஸ்வதமாக அது ஆத்மாவையே ஆதாரமாகக் கொண்டது. அதற்குத் தனது நன்மை தீமையாவது, மற்றவர்களுடைய நன்மை தீமையாவது ஒருபோதும் தெரியாது. ஆகவே அது சுயம்ஜோதியான ஆத்மாவாக இருக்க முடியாது.

ஆத்மன் புனித ஞானம், அது பிராணமய கோசத்தினின்று சாஸ்வதமாக வேறுபட்டது. நீ பிராணமய கோசம் அல்ல. இதுவும் உன்னுடையது அல்ல. இது சூக்ஷ்ம சரீரத்துக்குரியது. ஆத்மா பிராணமய கோசத்தை அறிபவனுதலால் ஆத்மா அதனின்று வேறுபட்டவன்.

ஐந்து ஞானேந்திரியங்களும் மனதும் சேர்ந்து மனோமய கோசம் அல்லது உள்ள உறை ஆகிறது. "நான்" ''என்னுடையது'' என்னும் வஸ்துக்களின் வேறுபாட்டுக்குக் காரணம் இம்மனம். அது வீடு, மகன், மனைவி, சொத்து என்பவற்றில் என்னுடையது என்னும் அஹங்காரத்தை உண்டாக்குகிறது. அது இந்திரிய வாய்க்கால்கள் அல்லது வீதிகள் மூலம் வெளிச் செல்கிறது. அது ஆற்றல் படைத்தது, அது நாமம் முதலிய பேதங்களை உண்டாக்குகிறது. அது பிராணமய கோசத்தை வியாபித்துக் கொண்டு தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. மனிதன் சாதாரணமாக : நான் நினைக்கிறேன். நான் கற்பனை செய்கிறேன். நான் துக்கமாயிருக்கிறேன். நான் மதி மயங்கியிருக்கிறேன். நான் கோபமுள்ளவன். நான் போகி. நான் நோயாளி. நான் ஆசைப்படுகிறவன். நான் பார்ப்பவன், சுவைப்பவன், முகர்பவன், தொடுபவன். நான் செவிடன். நான் குருடன் முதலிய வாறு சொல்லிக் கொள்கிறுன். இங்கு மனோமய கோசத்தின் செயல்கள் பொய்யாக ஆத்மாவின் மீது ஆரோகணிக்கப்படுகின்றன. இதற்கு மாறுக ஆத்மனுடைய குண விசேஷங்கள் பொய்யாக மனோமய கோசத்துக்குக் கற்பிக்கப்படுகின்றது. மனிதன் பொதுவாக ''என் மனது இருக்கிறது, என் மனது பிரகாசிக்கிறது, என் மனது எனக்குப் பிரியமானது'' என்று சொல்லிக் கொள்கிறுன். இவ்வாறு ஆத்மாவுக்கும் மனோமய கோசத்துக்கும் இடையில் பரஸ்பர மாயீக சம்பந்தம் இருக்கிறது.

மனதுக்கு வெளியே அஞ்ஞானம் இல்லை. மனதே அவித்யை. மனது அழியும்போது, மற்றெல்லாமும் அழிகிறது. மனது வெளிப்படும் போது யாவும் வெளித் தோன்றுகின்றன. கனவுகளில் மனதுதான் மலைகள், ஆறுகள், மலர்கள், தேர், குதிரைகள், சாரதி முதலிய பொருள்களைச் சிருஷ்டிக்கிறது. அது கர்த்தா, அது பொருள். கனவில்லாத தூக்கத்தில் அது தன் காரணமாகிய மூல அஞ்ஞானம் அல்லது புராதன அறிவின்மையில் ஒடுங்கியிருக்கிறது. அது அறிவோடு ஒன்றினதாயிருப்பின், அவன் கனவின்றிய தூக்கத்தில் ஆழ்ந்திருக்கும்போதும் அது அறிவைப்போல் தொடர்ந்து இருப்புள்ளதாயிருக்க வேண்டும். மனதுகூட ஜடம் அல்லது அசரமானது. அது சுயப்பிரகாசமுடையதல்ல. அது சத்வ குணத்தின் பயன். அது ஆதியும் அந்தமுமுளது. அதை உபயோகிக்கும் கர்த்தாவின் கையில் அது கருவி மாத்திரமே. அது மாறுதல்களுக்கு உட்பட்டது. அது எப்போதும் மாறிக்கொண்டிருப்பது. அது ஒரு பொருள். இன்பமும் துன்பமும் அதன் குணங்கள். ஆகவே, அது மாறுதலற்ற, சுயம் ஜோதியான புனித ஆத்மனாக இருக்க முடியாது. ஆத்மன் ஆழ்ந்த தூக்கத்திலும் கூட இருக்கிறது. காலையில் முன் இரவு ஆழ்ந்த தூக்கம் தூங்கினதாயும் தூக்கத்தின் போது எதுவும் தெரியவில்லையென்றும் மனிதன் நினைவு கூர்வதால் ஆத்மன் இருப்பது நிரூபிக்கப்படுகிறது. அநுபவத்தை அடைந்த மனிதன்தான் அநுபவத்தின் நினைவைக் கொண்டிருக்க முடியுமானதால், மேற்கண்ட மாதிரியில் காலையில் நினைவு கூரும் மனிதன் ஆழ்ந்த தூக்கத்தின்போது இருப்புடனிருந்து ஆனந்தம் நுகர்ந்து விழிப்பு நிலையில் அறிவு இல்லாததையும் நினைவு கூர்கிறான் என்று நாம் நிச்சயிக்க வேண்டும்.

மனது காமம், குரோதம் ஆசை முதலிய விருத்திகளோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. அதற்கு உறுதியில்லை. ஆகவே அது விகாரமுள்ளது. ஆத்மா மாறுதலற்ற (நிர்விகாரமான) மௌன மான சாட்சி. உண்மையில் நீயே ஆத்மன். ஆகவே, நீ மனோமயமான கோசம் அல்ல. அது உனக்கு உரியதுமல்ல. அது சூக்ஷ்ம சரீரத்துக்குச் சொந்தம். நீ மனோமய கோசத்தினின்று வேறு பட்டவன். நீ அறியும் கர்த்தா. இந்த கோசத்தை யும் அறிபவனுதலால் ஆத்மா மனோமய கோசத்தி னின்றும் வேறுபட்டவன்.

புத்தி அல்லது அறிவு தன் மாறுதல்களோடு ஐந்து ஞானேந்திரியங்களும் சேர்ந்து கர்த்தாவின் குண விசேஷங்களுடன் கூடி விஞ்ஞானமய கோசம் அல்லது அறிவு உறை ஆகிறது. ஆழ்ந்த உறக் கத்தில் அது பிரதிபிம்பித்த அறிவுடன் (சிதா பாஸனுடன்) ஒடுங்கி விடுகிறது. அறிவு உறை பரமாத்மாவுக்கு மிக அருகில் இருப்பதால் மிகப் பிரகாசமாக இருக்கிறது.

மனிதன் சாதாரணமாக ''நான் கர்த்தா. நான் உறுதியான தீர்மானமுள்ளவன். நான் அறிவாளி. நான் கல்விமான். நான் எதையும் அழகாக அறிந்து கொள்ளக்கூடும். நான் மற்றவர் களின் சந்தேகங்களைப் போக்க முடியும். நான் வேதங்களை அறிகிறேன். நான் புத்திமான், என் றெல்லாம் கூறிக்கொள்கிறுன். ஈண்டு விஞ்ஞான மய கோசத்தின் செயல்கள் பொய்யாக ஆத்மா விடம் ஆரோபிக்கப்படுகின்றன. இதற்கு மாறுக ஆத்மனின் குணங்கள் பொய்யாக விஞ்ஞானமய கோசத்துக்குக் கற்பிக்கப்படுகின்றன. மனிதன் ''என் புத்தி இருக்கிறது. என் புத்தி பிரகாசிக் கிறது. என் புத்தி எனக்குப் பிரியமானது'' என்று கூறுகிறுன். இவ்வாறு ஆத்மாவுக்கும் அறிவு

உறைக்கும் இடையில் பரஸ்பர மாயீக சம்பந்தம் இருக்கிறது.

இந்த விஞ்ஞானமய கோசம் சுயம் ஜோதி யான புனித ஆத்மாவாக இருக்க முடியாது. ஏனெனில் அது மாறுதலுக்கு உட்பட்டது. அதற்கு ஆதி அந்தம் உண்டு. அது சத்வகுணத்தின் காரியம். அது ஜடம் அல்லது அசரம். அது சுயம்பிரகாசமுள்ளது அல்ல. அது வரையறை உள்ள வஸ்து. அது ஒரு பொருள். அது இடை விடாமல் உள்ளதல்ல. அது ஆழ்ந்த தூக்கத்தின் போது ஒடுங்கி விடுகிறது. ஆகவே பொய்யான வஸ்து நித்தியமான உண்மையான ஆத்மனாகக் கொள்ளப்படமுடியாது.

நீ விஞ்ஞானமய கோசம் அல்ல, இந்தக் கோசமும் உன்னுடையது அல்ல. அது சூக்ஷ்ம சரீரத்துக்கு உரியது. நீ இந்தக் கோசத்தை உணர்பவன் ஆனது பற்றி முற்றிலும் அதனின்று வேறுபட்டவன்.

ஐந்தாவது உறை ஆனந்தமய கோசம் அல்லது தன் சாத்வீக பாவத்திலுள்ள அவித்யை. அது சுஷுப்தி அல்லது ஆழ்ந்த தூக்கத்தின் ஆனந்த அநுபவத்தை உண்டாக்குகிறது. அதற்கு, பிரியம், மோதம் பிரமோதம் ஆகிய மூன்று விருத்திகள் உண்டு. ஒரு ஆசைப்பட்ட வஸ்துவைக் காண்ப தாலேயே எழும் மகிழ்ச்சி பிரியம் ஆகும். அந்த ஆசைப்பட்ட வஸ்துவை அடைந்தபோது உண்டா கும் இன்பம் மோதம் ஆகும். அந்த ஆசைப்பட்ட வஸ்துவை அநுபவித்தலால் விளையும் இன்பம் பிரமோதம் ஆகும். அதிருஷ்டசாலிகளுக்குத் தங்கள் நற்கர்மங்கள் பூர்த்தியடையும்போது இந்த உறை தன்னைத்தானாகவே உணரச் செய்கிறது. ஆழ்ந்த தூக்கத்தின்போது இந்த ஆனந்தமய கோசம் முழுஅளவில் செயலாற்றுகிறது. கனவு

நிலையிலும் ஜாக்ரத நிலையிலும் இன்பகரமான பொருள்களைப் பார்ப்பதால் உண்டாகும் ஓரளவு விவகாரமே அதற்கு உண்டு. பிரியவிருத்தி ஆனந்தமய கோசத்தின் தலையாக இருக்கிறது. மோதவிருத்தி வலது இறக்கை. பிரமோதவிருத்தி அதன் இடது இறக்கை. பிரதிபிம்பானந்தம் அதன் அடிமரம். ஆத்மனின் பிம்பானந்தம் அதன் வால்.

மனிதன் சாதாரணமாக ''நான் அநுபவிப்பவன். நான் சந்தோஷமாக இருக்கிறேன். நான் சாந்தியடைந்திருக்கிறேன். நான் திருப்தியடைந்திருக்கிறேன். நான் சாத்வீகன். நான் ராஜஸன். நான் தாமஸன். நான் ஒரு மந்தன். நான் ஒரு அறிவற்றவன். நான் துக்கி. நான் திருப்தியற்றவன். நான் விவேகி. நான் கெட்டவன். நான் மதிமயங்கியவன்'' என்றெல்லாம் கூறிக்கொள்கிறான். இங்கு ஆனந்தமய கோசத்தின் குணங்கள் பொய்யாக ஆத்னுமக்கு ஆரோகணிக்கப்படுகின்றன. இதற்கு மாறாக ஆத்மாவின் சச்சிதானந்தமான குண விசேஷங்கள் பொய்யாக ஆனந்தமய கோசத்துக்குக் கற்பிக்கப்படுகின்றன. மனிதன் சாதாரணமாக ''என் ஆனந்தம் உனது. என் ஆனந்தம் பிரகாசிக்கிறது. என் ஆனந்தமய கோசத்துக்கும் பரஸ்பர மாயீக பாந்தவ்யம் இருக்கிறது'', என்று கூறுகிறான்.

ஆனந்தமய கோசத்திற்கு, மாறக்கூடிய குணங்கள் இருப்பதால் அது ஆத்மனாக இருக்க முடியாது. அது பிரகிருதியின் மாறுதல். அது பழைய நல்வினைகளின் பயன். அதற்கு முடிவு உண்டு. நீ ஆனந்தமய கோசம் அல்ல. இந்த உறையும் உன்னுடையதல்ல. அது காரண சரீரமாகிறது. நீ இந்தக் கோசத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டவன். நீ எப்போதும் இந்தக் கோசத்தை அறிபவன். ''என் பசு'', ''என் மகன்'', ''என் மனைவி'' ''என் வீடு'' என்னும் உதாரணங்களில்

பசு, மகன், மனைவி, வீடு ஆகியவை மனிதனிடமிருந்து முற்றிலும் வேறானவை. மனிதன் சாதாரணமாக ''என் சரீரம், என் பிராணன், என் புத்தி, என் இந்திரியங்கள், என் அஞ்ஞானம்'' என்று கூறுகிறான். தேகம் முதலிய என்னுடைய என்று சுட்டிக்காட்டும் உரிமையாளனிடமிருந்து வேறானவை என்பதை இது காட்டுகிறது. எல்லா வஸ்துக்களும் அவைகளுக்கு அப்பாற்பட்ட ஒன்றுக்குச் சம்பந்த முள்ளவை என்று தெளிவாகத் தெரிகிறது. இச் சம்பந்தம் சொத்துக்கும் அதன் சொந்தக்காரனுக்கும் உள்ள சம்பந்தமாகும். ''நேதி, நேதி'' என்னும் கொள்கையின் அப்பியாசத்தால் (தொடர்ந்து தள்ளிப் பார்க்கும் விவகாரம்) தேகம், பிராணன் மனது முதலியவை ஆத்மாவல்ல, அதற்குச் சொந்தமானவை, என்பதை நீ தெளிவாக உணர்ந்து கொள்ளலாம்.

நித்தியமான ஆத்மாவையும் ஆத்மாவின் மீது ஆரோகணிக்கப்படும் மாயீகமான ஐந்து கோசங்களையும் பிரித்துணரும் சக்தியின்மை அல்லது அவிவேகமும் அஞ்ஞானமும் காரணமாக இந்தப் பிரமை மனிதர்களிடம் உண்டாகியுள்ளது. அஞ்ஞானம் காரணமாக மனதினால் ஐந்து கோசங்கள் சிருஷ்டிக்கப்படுகின்றன. பஞ்ச கோசங்கள் புனிதமான சுய இருப்புள்ள சுயஜோதியான ஆத்மனாகமுடியாது. ஆத்மனுக்கு சரீரமில்லையென்று சுருதிகள் உறுதியாகத் தெரிவிக்கின்றன. வளர்ச்சி, க்ஷீணம் முதலிய மாறுதல்கள் பசுவினிடம் ஏற்பட்டாலும் பசுவின் சொந்தக்காரனை அதைப் பார்ப்பவனிடம் யாதொரு மாறுதலையும் உண்டாக்குவதில்லையோ, அதேபோல் பஞ்ச கோசங்களிடம் உண்டாகும் மாறுதல்கள் அவற்றின் சொந்தக்காரனும் பார்வையாளனுமான ஆத்மாவிடம் ஒரு அசைவையும் உண்டாக்குவதில்லை.

விவேக சக்தியால், நீ ஒரு மனிதனின் குரலை இன்னொருவனுடைய குரலிலிருந்து வேறென்று எப்படித் தெளிவாகக் கண்டுணருகிறாயோ, ''இது மிருதுவானது. இது கெட்டியானது. இது சூடு. இது குளிர்ச்சி'' என்று நீ விவேகத்தினால் எப்படி உணருகிறாயோ, ஒரு சுவரிலுள்ள படத்தைப் பார்த்து சுவர் வேறு படம் வேறாகப் பிரிக்க முடியா விட்டாலும் சிவப்பு வர்ணத்தைக் கறுப்பிலிருந்து பிரிக்க முடியாவிட்டாலும் ''இது கறுப்பு நிறம், இது சிவப்பு, இது சுவர், இது படம்'' என்று விவேகத்தினால் எப்படி நீ உணருகிறாயோ, பானத்தில், நீரிலிருந்து உப்பையும் சர்க்கரையையும் பிரிக்க முடியாவிட்டாலும், பானத்தைச் சுவைத்து 'இது லெமொனேட், இது கிச்சிலி, இது ராஸ்ப்பெர்ரி' என்று எப்படி நீ விவேகித்துணருகிறாயோ, துணியிலிருந்து வாசனையைப் பிரிக்க முடியாவிட்டாலும், ஒரு துணியிலிருக்கும் வாசனையை மூக்கினால் முகர்ந்து எப்படி நீ உணருகிறாயோ, இப்படியே ஒரு குருவினிடம் வேதாந்தத்தைக்கேட்டு ஆத்மனின் சாரமான இயல்பையும் பஞ்ச கோசங்களையும் உணர்ந்து ஆத்மாவையும் கோசங்களையும் நீ தெளிவாகப் பிரித்து உணரலாம். ஆத்மனுக்கும் பஞ்சகோசங்களுக்கும் ஒருவிதமான தொடர்பும் இல்லையென்று நீ தெளிவாக உணரலாம். சாதாரண மனிதர்களுக்கு நீரைப் பாலிலிருந்து பிரிக்க முடியாவிட்டாலும், ஹம்ஸத்துக்கு பாலிலிருந்து நீரைப் பிரிக்க முடியும். ஜடமான புத்தியுடைய ஜனங்களுக்கு ஆத்மனையும் பஞ்ச கோசங்களையும் வேறுபடுத்த முடியாத போதிலும், சூக்ஷ்ம புத்தியுடைய மனிதன் அவைகளை வேறுபடுத்த முடியும்.

பஞ்சகோசங்கள் உண்மையில் ஆத்மனிடம் இல்லை. பழுதைமீது பாம்பையும், சிப்பிமீது

வெள்ளியையும், தூண் மீது கள்வனையும், கானல் நீரின் மீது நீரையும், வானத்தில் நீலத்தையும், ஆரோகணித்திருப்பதுபோல் பஞ்ச கோசங்களும் அஞ்ஞானம் காரணமாக ஆத்மனிடம் ஆரோகணிக்கப்பட்டிருக்கின்றன. பழுதையைப் பற்றிய அறிவு உண்டானவுடன் பாம்பு என்கிற பிரமை மறைந்துவிடுகிறதுபோல், ஆத்மஞானம் ஒருவனுக்கு உதித்தவுடன் பஞ்சகோசங்களைப் பற்றிய தவறான கருத்தும் மறைந்துவிடும்.

சாதாரணமாக மாணவன் குருவிடம் பின்வருமாறு கேட்கிறான்: பஞ்சகோசங்கள் முற்றிலும் அழிவதில்லை. ஆத்மாநுபவத்துக்குப் பிறகும் அவை தோன்றிக்கொண்டுதான் இருக்கின்றன. அவற்றை பிரமை என்று எவ்வாறு கூறமுடியும்? மனிதன் பிரமை என்று உணர்ந்த பிறகும் கானல் நீரில் அவனுக்கு நீரின் தோற்றம் இருப்பதுபோல், பிரம்மஞானத்தை அடைந்த பிறகும் ஞானிக்கு பஞ்சகோசங்கள் தோன்றலாம். கழுத்து உடல் முதலியவற்றோடு கூடிய குடம் களிமண்ணின் மாயீகத் தோற்றமாயினும், கழுத்து உடல் முதலியவை உள்ள வரையில் குடமும் எப்படி தோன்றிக் கொண்டிருக்குமோ, அதேபோல் பஞ்ச கோசங்களும் மாயீகமாயினும் பிராரப்தம் உள்ள வரையில், கொளுத்தின துணியைப்போல் உண்மைமாதிரி காண்கிறது. ஆத்மாவைக் கோசங்களிலிருந்து வேறு பிரித்தவுடன், அது தன் உண்மையான புனித மகிமையோடு பிரகாசிக்கிறது. அது தூய அறிவாகிய தன் உண்மைக் குணத்தோடு பிரகாசிக்கிறது. அதற்கு நிரூபணம் எதுவும் அவசியமில்லை. அதுவே நிரூபணங்களுக்கு அடிப்படை. நிரூபணங்களை விவகாரத்துக்குக் கொணருவதற்கு முன்னேயே அதை முன்னதாகக் கொண்டு வரவேண்டும்.

களிமண்ணின் மாயீகத் தோற்றமான குடத்தின் நாமரூபத்துக்குப் பிறகும் களிமண் உண்மையிலேயே இருப்பதுபோல், ஆத்மாவின் மாயீக குணங்களேயான பஞ்சகோசங்களுக்குப் பிறகும் நித்திய சுயம்ஜோதியான ஆத்மன் மட்டுமே உண்மையில் நிலைத்திருக்கிறது. இதுவே வேதாந்தத்தின் அசைக்க முடியாத இறுதியான முடிவு. இவ்வாறு அறிபவனே, பிரம்மத்தை அறிபவன், வேதாந்தத்தின் உண்மைகளை அறிபவன், அவனே ஜீவன் முக்தன். இதுவே உபநிஷத்துகளின் உறுதியான வசனமாகும்.

## ஆத்மா சத்–சித்–ஆனந்தமாகும்

### ஆத்மா சத் ஆகும்

ஆத்மா சத் ஆகும். மூன்று காலங்களிலும் உள்ளதாயும், ஆரம்பம், மத்தி, முடிவு இல்லாததாயும், மாறுதல் இல்லாததாயும், காலம், தேசம் காரணம் ஆகியவற்றால் உண்டாகாததாயும், ஜாக்ரத, ஸ்வப்ன, சுஷுப்தி நிலைகளில் இருப்பதாயும், ஏகாஸமான இயல்புடையதாயும் (சதா ஏகாஸம், சதா ஏகரூபம்) உள்ளதே சத் ஆம். இது ஆத்மாவில் உள்ளது. சுருதிகள் உறுதியாக ''இந்தப் பிரபஞ்சத்தின் தோற்றத்துக்கு முன்பே சத் மட்டும் இருந்தது'' என்று கோஷிக்கின்றன.

நமது ஸ்தூல சரீரங்கள் மறைந்தபோதிலும், நாம் ஒருபோதும் இல்லாமல் இல்லை; இல்லாமற் போவதுமில்லை என்னும் நமது சாதாரண அநுபவம், அல்லது உடன் பிறந்த இயல்பான உணர்ச்சி, ஆத்மன் எப்போதும் உள்ளது என்று நிரூபிக்கிறது. நாம் இவ்வுலகத்தில் இருக்கிறோமா இல்லையா என்ற கேள்விக்கு, எல்லா மனிதர்களும் ''நாம் இங்கே இருக்கிறோம்'' என்று கூறுகிறார்கள்.

நமக்குச் சரீரம் உளதா இல்லையா? ஆம் நமக்குச் சரீரம் இருக்கிறது. இந்தச் சரீரம் எங்கிருந்து வந்தது? இந்தச் சரீரங்களை நாம் அடைவதற்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டும். ஏனெனில் வேறு விதத்தில் அது காரணமாயிருக்க முடியாது. அந்தக் காரணம் கர்மா. நமது கர்மாதான் இந்த தேகத்தைப் பிறப்பிக்கிறது. இந்த தேகத்தை முன் பிறப்பில் உண்டாக்கிய கர்மா அதற்கு முன் பிறப்பில் செய்யப்பட்டிருக்க வேண்டும். இப்படியே பின் புறமாக எல்லையற்ற காலம் வரையில் இவ்வாறு விசாரிக்கப்புகின், கர்மாவும் சரீரமும் ஆதி யில்லாதவை, உற்பத்தியை உணரமுடியாத இடைவிடாத வெள்ளத்தின் இயல்புடையது. கர்மாவும் சரீரமும் எப்போதும் பின் செல்கிற சங்கிலியாகின்றன. ஆகவே இந்தச் சங்கிலிக்கு ஆதாரமாயும் அடிப்படையாயும் உள்ள ஆத்மாவும் அதன் இயல்புப்படி ஆதியற்றதாக இருக்கவேண்டும் என்பது நிச்சயம். இவ்வாறு ஊகத்தின் மூலம் இப்போது இறந்த காலத்திலும் நிகழ் காலத்திலும் ஆத்மா சத்தானது என்று நிரூபிக்கப்பட்டது.

இப்பிறப்பில் செய்த கர்மாக்களால்தான் இந்தச் சரீரம் உண்டாக்கப்பட்டுள்ளது என்று நாம் ஏன் சொல்லக்கூடாது? ஒரு மரத்தை உண்டாக்கக் கூடிய விதை, அதை உண்டாக்கிய மரத்துக்கே காரணமாக இருக்க முடியாது, அதேபோல் இந்தச் சரீரத்தால் செய்யப்பட்ட கர்மாக்கள் அடுத்த பிறப்பில் ஒரு நூதன சரீரத்தை உண்டாக்கக் கூடுமே தவிர இந்தச் சரீரத்தையே உண்டாக்க முடியாது. ஆதலால் இந்தப் பிறப்பில் செய்த கர்மாக்களால் இந்தச் சரீரம் உண்டாக்கப் பட்டதென்று நாம் கூறமுடியாது.

இன்னொரு விஷயம் என்னவெனில், சரீரத்தை உண்டாக்கும் கர்மா நமக்குச் சொந்தமா அல்லது

மற்றவர்களுடையதா? அது நமக்கேதான் உரியது. இன்னொருவனது கர்மாவால், நாம் ஸ்வர்க்க போகம் அடையமுடியாது. கிருஷ்ணன் ஒரு தீவினை செய்தால், அவன்தான் கஷ்டப்படவேண்டியிருக்கும். அது சதாசிவனை ஒன்றும் செய்யாது. நல்வினையைச் செய்யும் மனிதனுக்கு நல்வினைதான் பலன் அளிக்கும். அதுவே இயற்கையின் மாற்ற முடியாத சட்டம். இன்னொரு மனிதனின் கர்மாவின் மூலம் ஒருவன் சுவர்க்கம் செல்லக்கூடுமாயின் ஒரு படித்த பிராம்மணன் செய்யும் வேள்வியின் மூலம் அவனது வேலைக்காரன்கூட சுவர்க்கத்தை அடைதல் வேண்டும். சங்கரர் அல்லது தத்தாத்ரேயரின் நிர்விகல்ப சமாதியின் மூலம் யாவரும் முக்திய்டைந்திருக்க வேண்டும். ஆனால் இது நடைபெறவில்லை. ஆகவே அவரவர் கர்மாதான் அவரவரது சரீரத்தை உண்டாக்குகிறது என்பது முற்றிலும் நிச்சயமாகிறது.

இப்போது இந்தப் பிறப்பில், நாம் செய்யும் கர்மா வீண் ஆகாது. செயல்கள் அழிக்க முடியாதவை. அவை எதிர்காலத்தில் புது சரீரங்களை உண்டு பண்ணும். இப் புதுசரீரங்களால் நாம் புதுக் கர்மாக்களைச் செய்வோம். இப்புதுக் கர்மாக்கள் இன்னும் வரப்போகும் சரீரங்களுக்கு விதையாகும். இவ்வாறு எல்லையற்ற காலம் வரையில் நடந்துகொண்டே இருக்கும். கர்மா சரீரத்தின் போக்கு எதிர்காலத்தில் ஒருபோதும் முடிவடைவதில்லை. ஆனால் ஆத்ம ஞானத்தின் மூலம் கர்மாவுக்கு முடிவு உண்டு. பிரம்ம ஞானம் உதயமாவதால் கர்மா முற்றிலும் அழிக்கப்படுகிறது. அப்போது சரீரம் உண்டாவது நின்றுவிடுகிறது. கர்மா அழிந்து, வரும் பிறப்புகள் முடிவுக்கு வந்தபோதிலும், ஆத்மா அழிவதில்லை. அது எப்போதும் இருப்பது; நித்தியமானது.

கர்மா, அவித்யையின் இயல்பைக் கொண்டது. கர்மா அழியும்போது, துன்பத்தின் எல்லாக் காரணங்களும் மறைந்துவிடும். ஜீவதத்வம் மறைகிறது. ஜீவன் உயர்ந்த ஆத்மானந்தத்தை அநுபவிக்கிறது. ஆத்மா எப்போதும் உள்ளது. அது முக்காலத்திலும் இருப்புக் கொண்டது. உலகம் வரும் போகும், ஆனல் ஆத்மா எப்போதும் உள்ளது. இந்த அற்புத பிரபஞ்சத்துக்குத்தான் பிரளயம் அல்லது அழிவு உண்டே தவிர, மாறுதலற்ற சுயமான இருப்புள்ள ஆத்மாவுக்கல்ல. வெள்ளமும் தீயும் மாயீகமான நாம ரூபங்களை அழிக்கும், ஆனல் அழிவற்ற ஆத்மாவை அவை அசைக்க மாட்டா. இவ்வாறு ஆத்மா, சத் என்று நீ தெளிவாக உணரலாகிறது.

## ஆத்மா சித் ஆகும்

ஆத்மா வேறு எந்த ஒளியின் உதவியுமின்றி தானே பிரகாசிக்கிறது, அதோடு தனது வெளிச்சத்தால் பிரபஞ்சம் முழுவதையும் பிரகாசப் படுத்துகிறது, ஆகவே ஆத்மா சித் ஆகும். நாமே அறிவீனர்களாக இருக்கும்போது நாம் பிரபஞ்சம் முழுவதையும் பிரகாசப்படுத்துவதாகச் சொல்வது எவ்வாறு, என்று கேள்வி எழக் கூடும். பிரபஞ்சம், வெளிப்படையானது, ஆந்திரீகமானது ஆகிய இரண்டுவகைப் பட்டது. வெளிப் பிரபஞ்சத்தில் பஞ்ச பூதங்களும் அவைகளின் குணங்களான சப்தம், ஸ்பர்ஸம், ரூபம், ரஸம், கந்தம் அவற்றின் பல்வேறு விதச் சேர்க்கைகள், பல்வேறு நாம ரூபங்கள், குணங்கள், இயல்புகள், பஞ்சீகரணம் செய்யப்பட்ட பூதங்கள், பிரம்மாண்டம், அண்டஜம் (முட்டையிலிருந்து பிறப்பவை), சுவேதஜம் (வியர்வையில் பிறப்பவை), விதையிலிருந்து பிறப்பவை, கருப்பையிலிருந்து பிறப்பவை

ஆகிய நால்வகை உயிர்கள் அடங்கியவை. எவ்வளவு வேறுபாடுகளுடனும் பெரியதுமாயிருப்பினும், வெளிப் பிரபஞ்சம் ஜடமாத்திரமே. நாம் அதன்மீது நமது அறிவாகிய சுடரை வீசினுலொழிய அது நம்மால் அறியத்தக்க வஸ்து அல்ல. அது ஒரு போதும் நம்மை அறிய முடியாது. அது நம்மால் தான் பிரகாசப்படுத்தப் படுகிறது. அது நம்மை ஒருபோதும் பிரகாசப்படுத்த முடியாது.

ஆந்திரீகப் பிரபஞ்சத்தில் பஞ்ச கோசங்கள், ஸ்தூல, சூக்ஷ்ம, காரண ஆகிய மூன்று சரீரங்கள், ஆறு மாறுதல்கள், பிறப்பு, மரணம், பசி, தாகம், தூக்கம், மயக்கம் ஆகிய ஆறு அலைகள்; ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், பஞ்சப் பிராணன், நான்கு வகையான அந்தக் கரணம், சங்கல்ப விகல்பங்கள், நிச்சய புத்தி, தான் என்னும் அகங்காரம், விசாரணை, ஜாக்ரதம், ஸ்வப்னம், சுஷுப்தி என்னும் மூன்று அறிவு நிலைகள், விஸ்வன், தேஜஸன், ப்ராக்ஞன் என்னும் அவஸ்தைகளின் செயல்கள், சமாதி, மூர்ச்சை, மனம், வாக்கு, காயம், நட்பு, கருணை, திருப்தி, அசட்டை, யம, நியம, ஆஸன பிராணயாம, ப்ரத்யாஹார, தாரண, தியான, சமாதி, எட்டு விதமான ருஜூக்கள், பகைமை, பொறாமை, மோகம், கோபம், கர்வம், பாசாங்கு; ஸத்வரஜஸ் தமஸ்; இன்ப துன்பம், மோட்சத்துக்குரிய நான்கு மார்க்கங்கள், மூன்று விதமான துன்பம், எண்ணங்கள், உணர்ச்சிகள், மனவெழுச்சிகள், பாவங்கள் ஆகியவை அடங்கியுள்ளன. இந்த உட்பிரபஞ்சம் முழுதும்கூட ஜடமே. அதன் மீது நமது அறிவைச் செலுத்தினுலொழிய நம்மால் உணரக்கூடிய பொருளாகாது. நாம்தான் அதை உணர முடியும்; அது ஒருபோதும் நம்மை உணரமுடியாது. மனது எல்லையுள்ளது, ஜடமானது. அதற்கு, சுதந்தரமான புத்தி கிடையாது. அது சுயம்பிரகாசமுள்ள

தல்ல. மூலப் பொருள்களிடமிருந்து ஒளியை இரவல் வாங்கியே அது பிரகாசிக்கிறது. அது பல்வேறு வரையறைகளுக்கும் மாறுதல்களுக்கும் உட்பட்டது. அது சூக்ஷ்ம பிரகிருதியின் ஜடச் சேர்க்கை. ஆத்மா ஒன்றுதான் சித்தின் மூலத்தைச் சேர்ந்தது. மனம்கூட சித்தினுல் உணரப்படுகிறது. மனதுக்கு ஆதியும் அந்தமும் உண்டு.

தங்கத்தைத் தீயில் உருக்கினுல் தளதளவென்று பிரகாசிக்கிறது. இந்தப் பிரகாசம் எங்கிருந்து வந்தது? நெருப்பு இந்தப் பிரகாசத்தை தங்கத் துக்கு அளிக்கவில்லை. அது தங்கத்திலிருந்து அழுக்கை நீக்கும் கருவி மாத்திரமே. நெருப்பினுல் அழுக்குகள் தங்கத்தினின்று நீக்கப்பட்டவுடன், தங்கம் தனது உண்மை நிலையில் பிரகாசிக்கிறது. இதேபோல் தூய்மையடைந்த மனது அஞ்ஞானத்தை விளக்கும்போது, ஆத்மா தனது இயல் பான மகிமையோடும் புராதன காந்தியோடும் பிரகாசிக்கிறது. மனத்தின் விலக்கும் சக்தி ஆத்மாவிடமிருந்தே வருகிறது. அது ஜடமான மனத்துக்கு உரியதல்ல. விளக்கு ஒரு அறையின் இருளை அகற்றுகிறது என்று நாம் சாதாரணமாகக் கூறுகிறோம், ஆனுல் விளக்கு பாண்டத்துக்கும் எண்ணெய்க்கும் திரிக்குமே இருளை அகற்றும் சக்தி இல்லை. திரி, எண்ணெய் விளக்குப் பாண்டமின்றி நெருப்பு மட்டும் தானுக இருளை அகற்ற முடியாது. நெருப்பும் மற்ற மூன்று வஸ்துக்களும் சேர்ந்தால் தான் ''விளக்கின் ஒளி'' என்ற பெயர் உண்டாகி, அந்த ஒளி இருளை அழிக்கிறது. இதேபோன்று இந்தச் சரீரமாகிய விளக்கில், கர்மமாகிய எண்ணெய் நிறைந்து, ஆத்மாவாகிய நெருப்பு மனமாகிய திரியைக் கொளுத்த ஜீவன் என்ற பெயர் பெற்று அஞ்ஞானமாகிய இருளை அகற்று கிறது. இந்த சக்தி உண்மையில் ஆத்மாவில் இருக்கிறதே தவிர மற்றவற்றில் இல்லை. இவ்வாறு

ஆத்மா சித்தின் இயல்பைச் சேர்ந்தது என்று தெளிவாக நிருபிக்கப்பட்டது.

## ஆத்மா ஆனந்தமாகும்

ஆனந்தம் என்பது நித்தியமானதும், காரணமில்லாததும் அதைவிட உயர்ந்தது என்பது இல்லாததுமான உயர்ந்த இன்பம். மலர்கள், வாசனைகள், மங்கையர், பழங்கள், இனிப்புப் பண்டங்கள் முதலிய வஸ்துக்களிலிருந்து உண்டாகும் இன்பம் தாற்காலிகமானதும் உபாதிக்கும் அளவுக்கும் உட்பட்டதுமானதால் ஆத்மானந்தம் என்று அதைக் கூறமுடியாது. நாம் ஒவ்வொரு நாளும் ஆழ்ந்த தூக்கத்தில் ஆத்மானந்தத்தை அநுபவிக்கிறோம். அங்கு நாம் அநுபவிப்பது துன்பமின்மை மட்டுமல்ல. அது சந்தேகமின்றி நேர்முக இன்பமே. ஏனெனில் நாம் விழித்துக்கொள்ளும் போது நாம் ஆனந்தமாய்த் தூங்கினோம் என்று நினைவு கொள்கிறோம். அந்த நிலையில் ஆத்மாவுக்கு ஆனந்தம் உளது என்னும் விஷயத்தை இது காட்டுகிறது. விழிக்கும் நிலையிலும் கனவு நிலையிலும் நம்மைக் களிப்புறச் செய்யும் ஏனைய பொருள்கள் ஆழ்ந்த தூக்கத்தில் இல்லவேயில்லை. ஆழ்ந்த தூக்க நிலையில் உள்ள இன்பம் உபாதியில்லாதது. ஆழ்ந்த தூக்கத்தின் இன்பத்தை எதுவும் வெல்ல முடியாது. ஏனெனில் எல்லா இன்பங்களுக்கும் மேலாக அதற்கு நாம் ஆவல் கொள்வதோடு தூக்கத்திலிருந்து உறும் இன்பத்தை நாம் அடையாதபடி தடுப்பவர்களை நாம் வெறுக்கிறோம். இந்த இன்பத்தை அநுபவிக்கும் பொருட்டு நாம் மிருதுவான படுக்கைகளையும் தலையணைகளையும் தயார் செய்து கொள்கிறோம். மனிதனிலிருந்து ஹிரண்யகர்ப்பன் வரையில் ஆனந்தத்தின் பதினோரு நிலைகள் உள்ளன. இந்த நிலைகள்

ஒவ்வொன்றும் அதற்கு முந்தினதைவிட நூறு பங்கு மேலானது. ஆனால் பிரம்மத்தின் உயர்ந்த ஆனந்தம் அளவற்றது. அதற்கு உயர்ந்தது எதுவுமில்லை யானதால் அது வரையறை அல்லது எல்லை அற்றது. ஆழ்ந்த தூக்கத்தின் ஆனந்தம் அளவற்றது.

ஆழ்ந்த தூக்கத்தின் ஆனந்தத்தை நாம் ஜாக்ரத நிலையிலாவது ஸ்வப்னத்திலாவது உணராததால் அது நித்தியமாயிருக்க முடியாது என்று வாதம் செய்யக் கூடாது. அந்த ஆனந்தம் ஜாக்ரத நிலையிலும் ஸ்வப்ன நிலையிலும் கூட இருந்துகொண்டுதான் இருக்கிறது. ஆனால் உள்ளூறுப்புகளின் செயல்களால் மறைக்கப்படுவதால் இந்த நிலைகளில் தெளிவாக அந்த ஆனந்தம் அநுபவிக்கப்படவில்லை. நித்யமற்ற வரையறையுள்ள இந்திரிய சுகங்களின் அநுபவம் எப்போதும் ஒளி வீசும் ஆத்மானந்தத்தை மறைக்கிறது. நெருப்பினால் உண்டாக்கப்படும் புகை நெருப்பையே மறைத்தபோதிலும், மூடுபனி பின்னே சூரியனை மறைத்தபோதிலும், அறிவாளிகள், நெருப்பும் சூரியனும் ஒருபோதும் அவற்றால் மறைக்கப்பட முடியாது என்று அறிவார்கள். அவர்கள் சாம்பலுக்கும் மூடுபனிக்கும் அப்பாலுள்ள நெருப்பையும் சூரியனையும் காண்கிறார்கள். இதே போல் ஆத்மாவை அறிபவன், மலர்கள், பழங்கள் மங்கையர் போன்றவற்றால் விளையும் வரையறையுள்ள இந்திரிய சுகங்கள், இயற்கையான எல்லையற்ற ஆத்மானந்தத்தை மறைப்பதுபோல் தோன்றினாலும், உண்மையில் அவை ஆத்மாவினின்றே உற்பத்தியாகின்றன என்று பூரணமாக அறிவான். மூன்று காலங்களிலும் அநுபவத்தின் மூன்று நிலைகளிலும் எல்லையற்ற ஆத்மானந்தம் மறைபடாமலும் வரையறை யின்றியும் பிரகாசிக்

கிறதென்பதை அவர்கள் நன்கு அறிவார்கள். ஆத்மானந்தத்தைப் போதுமானபடி சொற்களால் விவரிக்க முடியாது. அது ஆத்மாவை நேராக அறிவதன் மூலமே உணர்ந்து நுகரக் கூடியது. நாம் அதை அநுபவிப்பினும், அது ஒரு வஸ்துவை அநுபவிப்பது போன்ற அநுபவமல்ல. ஏனெனில் அப்போது நீ ஆனந்தமே உருவாக ஆய்விடுகிறாய். ஆகவே ஆத்மானந்தமும் அதைவிட்டு வேறு அல்லாத ஆழ்ந்த தூக்கமும் நித்தியமானவை என்பது தெளிவாகிறது.

தகப்பன் தன்மகனுடைய நண்பனிடம் காட்டும் அன்புக்குக் காரணம், அவன், தன் மகனிடம் வைத்திருக்கும் அன்பே. தகப்பன் தன் மகனிடம் வைத்திருக்கும் அன்பு தன் மகனின் நண்பன் காரணமாக அல்ல. ஆகவே மகன், மகனின் நண்பனைவிட பிரியமானவன். இதேபோல் ஆஸ்தியும் மகனும் தனக்குத்தான் காரணமாகவே (ஆத்மா) பிரியமானவை. தனது ஆத்மாவிடம் தனக்குள்ள அன்புக்குக் காரணம் ஆஸ்தியும் மகனுமல்ல. ஆகவே ஆத்மா மகனையும் ஆஸ்தியையும் விட பிரியமானது.

மனிதன் தனது சொத்தினிடம் அபரிமிதமாகப் பிரியம் வைத்திருக்கிறான். அவன் கடல் கடந்து அந்நிய நாடுகளுக்குச் சென்று பணம் தேடுகிறான். ஆயினும் சொத்தைவிட மகன் அதிக பிரியத்துக்குரியவன்; எந்தக் குற்றத்துக்காவது மகன் சிறை வைக்கப்பட்டிருந்தால் அம் மகனை விடுவிக்கப் பணத்தைத் தண்ணீராய்ச் செலவு செய்கிறான். ஆகவே, மகன் பணத்தைவிட பிரியமானவன். சரீரம் மகனைவிட பிரியமானது; தந்தை பஞ்ச காலத்தில் தன் சரீரத்தைக் காப்பதன் பொருட்டு தன் மகனைக்கூட விற்று விடுகிறான். சரீரத்தைவிட இந்திரியங்கள் அதிக பிரியமானவை, ஏனெனில் மனிதன் யாரானாவது தன்னைத் தாக்க வரும்போது

கண் காது மூக்குகளைப் பாதுகாத்துக் கொள்கிறான். இந்திரியங்களைவிட பிராணன் அல்லது உயிர் அதிகப் பிரியமானது. அரசன் ஒரு குற்றவாளியின் உயிரை வாங்க உத்தரவிட்டால், அக் குற்றவாளி தன் உயிரை இழப்பதைவிட இந்திரியங்களில் ஒன்று நீக்கப்படுவதை மேலாகக் கருதுகிறான். ஆகவே இந்திரியங்களைவிட உயிர் அதிகப் பிரியமானது. உயிரைவிட ஆத்மா அதிகப் பிரியமானது. ஒருவன் ஒரு தீராத நோயால் துன்புறும்போது, அவன் 'என் பிராணன் சரீரத்தை விட்டுப் போகட்டும். நான் சந்தோஷமடைவேன்'' என்று கூறுகிறான். ஆகவே ஆத்மா ஆருயிரைக் காட்டிலும் பிரியமானது. ஏனெனில் அது ஆனந்தமே உருக் கொண்டது.

சச்சிதானந்தம் என்பது ஆத்மாவுக்குத் தாற்காலீகமான நிவாரணமேயாகும். இந்த அற்புதப் பிரபஞ்சத்தில் போலி, அசேதனம், துன்பம் ஆகியவற்றையே நாம் காண்கிறோம். அனாத்மாவினின்று வேறான ஆத்மாவை நாம் எளிதில் உணரும் பொருட்டு அஸத் அல்லது அன்ரிதம் (பொய்யானது) என்பதற்கு முரணாக சத் (உண்மை) என்றும், ஜடத்துக்கு (அசேதனம், (உணர்வின்மை) எதிராக சித் (அறிவு) என்றும், துக்கத்துக்கு எதிராக ஆனந்தம் என்றும் குறிக்கிறோம். ஆகவே இச் சொற்கள் கூட ஆத்மாவை விவரிக்கவில்லை, விவரிக்க வொண்ணாததை சொற்களால் வேறுபடுத்துகிறோம். பிரம்மத்தை விவரிப்பது என்றால் பிரம்மத்தை இல்லை என்பதாகும்.

சத், சித், ஆனந்தம் ஆகிய மூன்றும் வெவ்வேறு பொருள்கள் அல்ல. அவை ஒன்றுக்கொன்று வேறானதும் அல்ல. அவை ஆத்மாவுடன் சமகாலத்தவையாய் கூடவே இருப்புடையவை. நீர், ஜலம், பானி, என்பவை ஒரே பொருளைக்

குறிக்கின்றன. அதேபோல் சத் சித் ஆனந்தம், என்பதும் ஒரே ஆத்மாவைக் குறிக்கிறது. சத்தே சித். சத்தே ஆனந்தம். சித்தே சத். சித்தே ஆனந்தம். ஆனந்தமே சத். ஆனந்தமே சித். நெருப்பிலிருந்து ஒளி, சூடு, பிரகாசம் ஆகிய வற்றைப் பிரிக்க முடியாதது போல் சத், சித், ஆனந்தம் என்பதையும் மூன்று வெவ்வேறு பொருள்களாகப் பிரிக்க முடியாது.

வரையறை (பரிச்சேதம்) மூன்று விதமானது. 1. தேச பரிச்சேதம், 2. கால பரிச்சேதம், 3. வஸ்து பரிச்சேதம். சரீரம் இடத்தினால் வரையறுக்கப்பட்டிருக்கிறது. ஆத்மாவை இடத்தினால் வரையறுக்க முடியாது. ஏனெனில் அது சர்வ வியாபியாயும் சர்வம் நிறைந்ததாயும் இருக்கிறது. அது இடத்தைக் கடந்தது. அது நித்திய மானது. அது காலத்தால் வரையறுக்கப்பட முடியாதது. இச் சரீரம் காலத்தால் வரையறுக்கப் பட்டிருக்கிறது. ஆகவே அது அழிவுள்ளது. மூன்று வது விதமான வஸ்துக்களால் வரையறை (வஸ்து பரிச்சேதம்) மூன்றுவிதமானது: 1. ஸஜாதீய பரிச்சேதம் அதாவது அதைப்போன்ற வஸ்துவின் இருப்பினால் வரையறுக்கப்படுதல். உதாரணம்: ஒரு மரம் அதைப்போன்ற மரம் இருப்பதனால் வரையறுக்கப்பட்டிருக்கிறது. 2. விஜாதீய பரிச்சேதம். உதாரணம்: மரம் அதுபோன்றதல்லாத தான கல் இருப்பதனால் வரையறுக்கப்படுகிறது. 3. ஸ்வகதம் அதாவது அதனிடத்திலேயே வேறு பாடுகள் இருப்பதனால் வரையறுக்கப்படுதல். உதாரணம் ஒரு மரத்தில் தண்டு, இலைகள், கிளை கள், பூக்கள், வேர், பழங்கள் முதலியவற்றால் மரம் வரையறையுள்ளதாகிறது. மனிதன் முகம், உடல், கை கால்கள் முதலியவற்றால் வேறு பட்டிருப்பதால் வரையறை உள்ளவனாகிறான். ஈஸ்வரன் அபின்ன, நிமித்தோபாதான காரணம்.

சிலந்தி தன் உமிழ் நீராலேயே வலை பின்னுவது போல் அவர் பிரபஞ்சத்தைத் தனது சரீரத்திலிருந்தே (மாயை) படைத்து இந்த நாம ரூபங்களுக்குள் தானே புகுந்தார். ஆகவே ஜீவ ஈஸ்வர பேதத்தைப்போல் எவ்விதமான ஸஜாதீய பேதமும் இருக்கமுடியாது. இரண்டாவது ஆத்மா கிடையாது. இரண்டு சத்துக்கள் இல்லை.

இந்த அதிசயப் பிரபஞ்சம் உண்மையானதல்ல. அது பழுதையில் பாம்பைப் போலவும் சிப்பியில் வெள்ளியைப் போலவும் தோற்றம் மாத்திரமே. அதற்கு சுதந்தரமான இருப்பு இல்லை. ஆகவே எவ்விதமான விஜாதீயமான பேதமும் இருக்க முடியாது.

சத், சித், ஆனந்தம் ஆகியவை ஒன்றே. ஆத்மா பின்னமில்லாதது, ஏகாஸமானது. சத், சித், ஆனந்தம் என்னும் மூன்று குண விசேஷங்களும் ஒன்றுக்கொன்று வேறு பட்டதல்ல. மரம், கிளைகள், மலர்கள், மிலாறுகள் முதலியவற்றால் வேறு பிரிக்கப்படக் கூடும், ஏனெனில் அவை மரத்தின் ஒரு குறிப்பிட்ட பாகத்துக்கு வரையறுக்கப்பட்ட அளவுள்ள வஸ்துக்கள், ஆனால் ஆத்மாவுக்குப் பாகங்கள் இல்லை. எங்கெங்கெல்லாம் சித்தும் ஆனந்தமும் உள்ளனவோ அங்கு சத்தும் இருக்கிறது. சத்து இன்னொரு சத்தினால் வரையறுக்கப்பட முடியாது. ஏனெனில் இரண்டு சத்துகள் இல்லை, அசத்துக்கு இருப்பு இல்லாததால் அசத்தாலும் வரையறுக்கப்பட முடியாது. சித்து சத்திலிருந்து வேறானது என்று சொல்வதானால், அது முயல் கொம்பைப் போல் அசத்தாகத்தான் இருக்கும். இந்த விதமான கற்பனை உன்னை முட்டுப்பாட்டிலும் குழப்பத்திலும் கொண்டு சேர்க்கும். ஒருவன் ஆத்மாவை அறிந்தவுடன் சகல துக்கங்களும் முடிவடைகின்றன.

ஆகவே ஆத்மா ஆனந்தமே வடிவமாக இருக்க வேண்டும். சத்தே சித். சத்தேதான் ஆனந்தமும்.

இந்த சத் சித் ஆனந்த ஆத்மாவை உணர்ந்த வனே முக்தி பெற்ற ஞானி. அவனுக்குக் கற்றுக் கொள்ள ஏதுமில்லை, செய்ய வேண்டியது ஏது மில்லை, அடையவேண்டியதும் ஏதுமில்லை. அவனு டைய அவாக்கள் அனைத்தும் நிறைவேறிவிட்டன. அவன் எல்லா உலகங்களையும் அடைந்து விட்டான். அவன் மரணத்தின் வாயினின்று விடுபடுகிறான். அவன் அழிவற்ற நிலையை அடைகிறான்.

## ஆத்மாவின் ஐந்து குண விசேஷங்கள்

ஸ்வப்பனத்தில் மனது மர்மமான முறையில் செயலாற்றுகிறது. அது பற்பல கோரமும் விசித் திரமுமான படங்களையும், காட்சிகளையும் விஷயங் கள் முதலியவற்றையும் படைத்து கற்பனை செய் கிறது. சில சமயங்களில் நீ இறந்து விட்டதாயும் உனது அன்புக்குரிய பெற்றோர்களும் உறவினர் களும் உன் பக்கத்தில் அழுது கொண்டிருப்பதாயும் கனவு காண்கிறாய். இதில் அதிசயமான விஷயம் என்னவென்றால் நீ இறந்த போதும் கூட, நீ அவர் கள் அழுவதைப் பார்க்கவும் கேட்கவும் செய்கிறாய். சாவின் தோற்றத்துக்குப் பிறகும்கூட உயிர் உண் மையில் இருந்து கொண்டேயிருக்கிறது என்பதை இது தெளிவாக நிரூபிக்க வில்லையா? ஆத்மா அழி வற்றது என்பதை இது தெளிவாக விளக்க வில்லையா? நன்கு ஆலோசித்துச் சிந்தனை செய். அழிவற்ற தன்மை என்பது ஆத்மாவுக்கு இயல் பான குணம் என்பது உனக்கு நன்கு விளங்கும். கனவுத் தோற்றம் ஆத்மாவின் சத்பாவத்தை நிரூ பிக்கிறது.

நீ ஒரு மனிதனிடம் அவன் ஒரு வருஷத்துக் குள் இறந்து விடுவான் என்று சொன்னால் அவன்

உடனே கோபம் கொள்கிறான். ஏனெனில் அவன் இந்த ஸ்தூல சரீரம் பாம்புத் தோலைப்போல் எறியப்படும் என்று உணர்ந்திருந்தாலும் தான் எப்போதும் உயிர் வாழ்வோம் என்று எவ்வாறாகவோ எண்ணுகிறான். தொடர்ந்து உயிர் வாழ வேண்டும் என்னும் உனது ஆசையே, உனது உண்மை இயல்பு அழிவற்ற தன்மையே என்பதை நிரூபிக்கிறது. இது ஆத்மனின் சத்பாவம். இந்த ஸ்தூல உலகத்தில் அல்லது தோற்றப் பிரபஞ்சத்தில் என்றும் வாழ்ந்திருக்கப் போவதாக நம்பிக்கையுடன் ஜனங்கள் பெரிய வீடுகளையும் மாளிகைகளையும் கட்டுகிறார்கள். புத்தியானது அவித்யை அல்லது மாயையின் பிராபல்யத்தால் மறைக்கப்பட்டிருந்தாலும், ஆத்மாவின் அமரத்வம், எவ்வளவு லேசாக இருப்பினும், ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் ஊன்றியுள்ளது. சாந்தமான சமயங்களில் இந்த எண்ணம் உறுதிப்பட்டு, புத்தி தெளிவையும் தூய்மையையும் அடைகிறது.

ஒரு வளரும் குழந்தை தினந்தோறும் தன் தாயை ''அம்மா, இது என்ன? அது என்ன?'' என்று கேட்டுக் கொண்டேயிருக்கிறது. விஷயங்களை அறியவேண்டும் என்ற பேராவல் குழந்தைக்கு இருக்கிறது. இது ஆத்மனுக்கு உண்மை இயல்பு அல்லது இயற்கை குணம் ஞானந்தான், அஞ்ஞானமல்ல என்பதைத் தெளிவுற விளக்குகிறது. நீ யாரிடமாவது ''நீ ஒரு மூடன்'' என்பாயானால் அவன் உடனே கடுஞ்சினம் கொள்கிறான். ஏன்? ஏனெனில், அவன் எவ்விதமாகவோ தான் முக்கியத்தில் ஞானப் பிண்டம் என்று எண்ணுகிறான். மூடன்கூட தான் மிகப் புத்திசாலி என்று எண்ணுகிறான். ஏனெனில் அவன் முக்கியத்தில் அறிவே உருக் கொண்டவன், அவன் பரமாத்மாவோடு ஒன்றியவன். ஆகவே ''நான் அறிவாளி'' என்ற இயல்பான ஆந்திரீக உணர்ச்சி பாவமானது இருந

யத்தில் உதிக்கிறது. இது ஆத்மனின் சித் பாவமாகும்.

முகங்கள் வெவ்வேருனவை. வெவ்வேறு மனிதர்களுக்கு வெவ்வேறு மனோசக்திகளும் திறமைகளும் உள்ளன. நிறங்கள் வெவ்வேரு யிருக்கின்றன. சப்தங்கள் வெவ்வேருயிருக்கின் றன. நடையும் யோசிக்கும் விதமும் வெவ்வேரு னவை. அபிப்பிராயங்களும் ஆலோசனைகளும் வெவ்வேருனவை. ஆனல் எல்லோரிடமும் ஒரு விஷயம் மாத்திரம் பொதுவாயிருக்கிறது. ஒவ் வொருவனும் நித்திய சுகத்தை விரும்புகிருன் என் பதே அந்தப் பொதுவான விஷயம். இது ஆத்மா வின் ஆனந்த பாவம். ஆத்மாவின் உண்மை இயல்பு அல்லது இயற்கைக் குணம் ஆனந்தமே (துக்க மல்ல) என்பதை இது தெளிவாக நிரூபிக் கிறது.

சில ஆண்டுகளுக்கு முன் ஒரு அதிசய நிகழ்ச்சி ஏற்பட்டது. ஒரு பிரஞ்சுப் பெண் ஒரு அபாயகர மான நோயால் வருந்திஞள். அவள் பல வாரங் கள் ஸ்மரணையின்றி இருந்தாள். வைத்தியர்கள் அவள் பிழைக்கமாட்டாள் என்று கைவிட்டு விட் டார்கள். எவ்விதமாகவோ அவள் பகவத் கிருபை யால் அற்புதமாகப் பிழைத்தாள். அவளுக்கு பிரஞ்சு மொழிதான் தெரியும். இப்போது ஒரு விசித்திரம் நிகழ்ந்தது. அவள் தன் தாய்மொழியை முற்றிலும் மறந்து விட்டாள்; அவளுக்கு அதற்கு முன் தெரியாத ஒரு டஜன் பாஷைகளில் திடீ ரென்று அதிசயமான தேர்ச்சி உண்டாயிற்று. இது முக்கியமான செய்தித் தாள்களிலெல்லாம் பிரசுரமாயிற்று. இதைப் படித்தவர்கள் யாவருக்கும் அது அதிர்ச்சியையும் அவாவை யும் உண்டாக்கிற்று. உடனே சில முக்கிய மனோதத்வ சாஸ்திரிகளும் தத்வ ஞானிகளும், வைத்தியர்களும், விஞ்ஞானிகளும் இந்த விஷ

யத்தை முழுதும் ஆராயத் தொடங்கினார்கள். வதந்தி பூராவும் உண்மையானது, சரியானது என்று அவர்கள் நம்ப வேண்டியதாயிற்று. எல்லா விஷயங்களைப்பற்றியும் பூரணமான ஞானம் மூளையில் தனித்தனி அறைகளில் சேர்த்து வைக்கப்பட்டு தகுந்த சாவிகளால்தான் திறக்கப்படக் கூடும் என்பதே இந்த அதிசயத்துக்குக் கூறக் கூடிய விளக்கம் என்று அவர்கள் கூறினார்கள். நாம் சரியான சாவியை அதாவது ஒழுங்கும் அப்பியாஸமுமாகிய சாவியை உபயோகித்து சில கதவுகளைத் திறக்கக் கூடும் என்றும் அறிவின்மை அல்லது அப்பியாஸ மின்மையால் அல்லது சரியான சாவியை உபயோகிக்காததால் மற்றக் கதவுகளைத் திறக்க முடியவில்லையென்றும் அவர்கள் மேலும் கூறினார்கள். அவர்கள் மேலும் இந்தப் பிரஞ்சுப் பெண் விஷயத்தில் பிரஞ்சு என்னும் கதவு யந்திரம் போல் மூடிக்கொண்டு ஒரு டஜன் விசித்திர பாஷைகளின் கதவுகள் திடீரென்று திறந்துகொண்டனவென்றும் விளக்கினார்கள். வேதாந்தக் கொள்கையான ஆத்மா அறிவுக் களஞ்சியம் அல்லது ஞானமே உருவெடுத்தது என்பதற்கு இங்கு மர்மமான ருஜு ஏற்பட்டது.

ஒவ்வொருவனும் சுதந்தரத்தை விரும்புகிறான். அவன் விடுதலையில் தீவிர இச்சை வைத்திருக்கிறான். சார்ந்திருத்தல் என்னும் எண்ணமே துயரத்தை விளைவிப்பதாயும் துன்புறுத்துவதாயும் உள்ளது. அவன் ஆதிபத்தியத்தை விரும்புகிறான். அவன் மற்றவர்களை அடக்கியாள விரும்புகிறான். அவன் மற்றவர்களுடைய இஷ்டத்துக்கு உட்பட விரும்பவில்லை. இதற்கு மாறாக அவன் மற்றவர்கள் தன் இஷ்டத்தைப் பின்பற்ற வேண்டும் என்று விரும்புகிறான். சுதந்திரமும் ஆதிபத்தியமும் அழிவற்ற ஆத்மாவின் இயல்பான குணங்கள் என்று இது தெளிவாக நிரூபிக்கிறது.

# 5. புத்தி யோகம்

சரீரம் பஞ்ச பூதங்களால் ஆக்கப்பட்டது. அழிவுள்ளது. அது சர்மம், சதை, இரத்தம், எலும்பு ஆகியவற்றால் ஆக்கப்பட்டது. அது காலம், கர்மா, ஸத்வ ரஜஸ் தமஸ் குணங்கள் ஆகியவற்றால் உண்டாக்கப்பட்டிருக்கிறது.

ஆத்மன் பிறப்பில்லாதது, மரணமில்லாதது, அது ஒரு இடத்தில் நிலைப்பதல்ல, எங்கும் செல்வது மல்ல. அது, ஆணல்ல, பெண்ணல்ல அலியுமல்ல. அது சர்வவியாபியாயும் சாஸ்வதமாயும் உள்ளது. அது இரண்டற்ற ஒன்றே, ஆகாசத்தைப்போல் மாசற்றது, நித்தியமானது, தூய பூரண ஞானமே தானாக உள்ளது.

துக்கத்துக்குச் சரீரமே காரணமாயுள்ளது. சரீரத்துக்குக் கர்மாவே காரணம். மனிதன் சரீரத்தில் ''நான்'' என்னும் எண்ணத்தை வைத்திருப்பதிலிருந்துதான் செயல் அல்லது கர்மா உண்டாகிறது. அவித்யை மூலகாரணமாகக் கொண்டதும் அறிவற்றதுமான ''நான்'' என்னும் எண்ணம், ஆரம்ப மில்லாதது. நெருப்பில் காயும் இரும்புத் துண்டைப்போல் அஹங்காரம் சித்தத்தின் பிரதி பிம்பத்தோடு எப்போதும் சம்பந்த முள்ளதா யிருக்கிறது. இவ்வாறு சரீரம் அஹங்காரத்திலிருந்து சுதந்தரமடைந்து அறிவுடையதாக ஆகிறது.

தான் என்பதற்கும் அஹங்காரம் என்பதற்கும் இடையிலுள்ள சேர்க்கையின் சக்தியால் ''நான் சரீரம்'' — என்னும் இந்த எண்ணம் உதிக்கிறது. இன்ப துன்பத்தை விளைக்கும் உலக வாழ்வுக்கு சரீரத்தில் ''நான்'' என்கிற எண்ணமே வேராக இருக்கிறது. அவித்யை ''நான் சரீரம் நான் கர்த்தா'' என்னும் எண்ணத்தோடு அஹங்

காரத்துடன் மாறுதலற்ற ஆத்மா ஒன்றி யிருப்பதன் காரணமாகத்தான், ஜீவாத்மா எப்போதும் செயலாற்றி அதன் பலன்களால் கட்டாயமாகப் பந்தமுற்று இருக்கிறது. நல்வினை தீவினைகளை அடைந்து அவன் இங்கு மங்கும் அலைகிறான். ''நான் யாகயக்ஞங்கள் தானங்கள் முதலியவற்றால் வெகு நல்ல கர்மாக்களைச் செய்திருக்கிறேன், ஆகவே நான் சுவர்க்கம் சென்று ஆனந்தமுறுவேன்'' — இவ்வாறு அவன் எண்ணுகிறான். இது ஒரு பொய் எண்ணம். அவன் சுவர்க்கத்தில் சிலகாலம் விண்ணுலக இன்பத்தை நுகர்ந்து, தன் நற்கர்ம பலன்கள் செலவானவுடன் வீழ்ச்சி யடைகிறான்.

அஹங்காரத்துக்கும் மற்றவற்றிற்கும் சரீரத்துடனும் இந்திரிய உறுப்புகளுடனும் சம்பந்தம் இருக்கும் வரையில் அறிபவனின் ஆத்மாவுக்கு இன்ப துன்பமும் மறு ஜென்மமும் இருந்து கொண்டே இருக்கிறது. அஹங்காரம் என்பது ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களில் ''நான்'' ''எனது'' என்னும் எண்ணமே. அறிவற்றவர்கள் சரீரத்தில் பற்றுதல் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஸ்தூல சரீரத்தில் ''நான்'' ''எனது'' என்கிற எண்ணத்துக்கு மேலாக அவர்களால் எழமுடிவதில்லை. விவேகமுள்ள சிலரே ஞானத்தின் மூலம் அதற்கு மேல் எழுகிறார்கள்.

இந்திரிய விஷயம் என்னும் ஏதாகிலும் எண்ணம் இருக்கும் வரையில் சம்சாரம் அல்லது உலக வாழ்க்கையின் காரணம் உளது. பொய்யை மெய்யாகக் கொள்ளும் அஞ்ஞானமாகிய தூக்கத்தினின்று ஒருவன் விழிக்கும்போது, அது தன்னை நிலைநாட்டிக் கொள்வதை நிறுத்தி விடுகிறது. கனவில் காணும் மனிதனைப்போல் இந்திரிய விஷயங்களைப்போற்றி வளர்க்கும் ஒருவனுக்கு,

ஆத்மாவின் மீது தவறுதலாகச் சுமத்தப்பட்டுள்ள சம்சாரம் தானுகச் செல்வதில்லே.

ஆதியற்ற அவித்யை அல்லது அஞ்ஞானத்தின் சக்தியின் மூலம் இருப்பில்லாதது இருப்புள்ளதாகத் தோன்றுகிறது. மனிதன் விருப்பு வெறுப்பின் மூலம் கலக்கமுறுகிருன். ''நான்'' என்னும் உணர்ச்சி அஞ்ஞானத்தின் பயனே.

சித்தமே உண்மையில் உலகம். மனதே பந்தம். அத்தியாரோபம் அல்லது ஆத்மாவுடன் மனதை ஒன்றுபடுத்துவதே பந்தத்துக்குக் காரணம்.

உண்மையில் நிறமற்ற ஸ்படிகத் துண்டு எப்படி அதன் அருகில் கொண்டுவரும் பொருளின் சிவப்பு அல்லது வேறு நிறத்தைக் கொள்கிறதோ, அதே போல் உலகப் போக்கு அல்லது சம்சாரமும், ஆத்ம அறிவு அல்லது இந்திரிய உறுப்புகளோடு சேர்வதாலேயே உண்டாகிறது. மனது தனக்குப் பின் அறியும் ஆத்மாவின்றி தானுகவே எதையும் அறிந்துகொள்ள முடியாது. ஆனுல் ஆத்மாவோ, மனதினுல் சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களே தனதாகவே ஆக்கிக் கொண்டு, நிறமுள்ள வஸ்துக் களின் அருகில் கொண்டுவரப்பட்ட ஸ்படிகத் துண்டைப்போல் அப் பொருள்களின் உருவங்களே எடுத்துக்கொண்டு இவ்வாறு அப் பொருள்களின் குணங்களால் பந்தப்பட்டு உதவியற்றது போலவும் சக்தியற்றது போலவும் சம்சாரத்தில் உழலுகிறது.

வெவ்வேறு வகையான செயல்களுக்கு விருப்பு வெறுப்பாகிய குணங்களே முதலில் உண்டாக்கிக் கொண்டு, மனதானது வெள்ளே, சிவப்பு, கருமை (நல்லது, செயலுள்ளது, செயலற்றது) போன்ற வெவ்வேறு உருவங்களேக் கொள்கிறது. இவ்வாறு, ஜீவன் அல்லது ஜீவாத்மா கர்மாவின் பிராபல்யத் தால் பிரபஞ்சலய காலவரையில் உழன்று கொண்டிருக்கிறது. பிரபஞ்சலய காலத்தில், ஆதி

அவித்யையின் பிராபல்யத்தின் கீழ் பழைய கர்மங்களின் நினைவுகளைக் கொண்ட வாசனைகளுடன் மிஞ்சி நிற்கிறான்.

பிரபஞ்சலய காலத்தில் ஜீவாத்மாவுக்கு அழிவு இல்லை. அவன் முக்குணங்களின் சமநிலையாகிய மூலப்பிரகிருதி அல்லது அவ்யக்தத்தில் மறைமுகமாக ஒடுங்கி நிற்கிறான். சிருஷ்டி காலத்தில், சித்தத்தில் பிறந்த வாசனைகளுடன் சேர்ந்து அவன் திரும்பப் பிறக்கிறான். இவ்விதமாக கபிலைச் சக்கரத்தைப்போல் அவன் சுழலும்படி கட்டாயப் படுத்தப் படுகிறான்.

முன் செய்த நல்வினைப் பயனாக விசேஷ யோக்யதை மூலம் அவன் பரம பக்தர்களின் சங்கத்தை அடைகிறான், அவனது உள்ளம் பகவானிடம் செல்கிறது. பிறகு அடைவதற்குக் கடினமான நம்பிக்கை அவனுக்கு உண்டாகி பகவத் கதைகளைக் கேட்கிறான். பின்பு அவனுக்குக் கஷ்டமின்றியே ஆத்ம ஞானம் உண்டாகிறது. பிறகு குரு கிருபை மூலமும், ''தத் த்வம் அஸி'' (நீயே அதுவாய் இருக்கிறாய்) என்னும் மகாவாக்கியார்த்த ஞானம் போன்றவற்றாலும், அவன் உடனே சரீரம், இந்திரிய உறுப்புகள், அஹங்காரம், புனித ஆத்மா ஆகியவற்றிற்கு இடையிலுள்ள வேற்றுமையை உணர்ந்து இரண்டாவதல்லாத ஒன்றான அறிவுமயமான ஆனந்த ஆத்மாவே தான் என்றறிந்து அது முதல் முக்தனாகிறான்.

ஆகவே உன்னை மூன்று சரீரங்களிலிருந்து தனித்தவனாயும், பிரகிருதிக்கு அப்பாற்பட்டவனாயும் அறிந்துகொள். சரீரத்தில் ''நான்'' என்ற உணர்ச்சி யாவற்றையும் நீக்கி அறிவுபெற்ற ஞானியாக ஆவாயாக. உனது ஆத்மாவை ஜாக்ரத ஸ்வப்ன சுஷுப்தி அவஸ்தைகளில்லாமல் சத், சித் ஆனந்தமாக உணர்ந்துகொள்.

# 6. ஜீவன் முக்தியும் விதேஹ முக்தியும்

சச்சிதானந்த பிரம்மத்தில் ஞானி நிலை பெற்றிருப்பதே ஜீவன் முக்தியாகும். அவன் பிரம்மமாகிறான். அவனது பார்வையிலிருந்து அற்புதப் பிரபஞ்சம் மறையவில்லை. ஆரம்பத்தில் கானல் நீரினால் மோசம்போன ஒரு மனிதன் எப்படிக் கவனமாகப் பரீட்சை செய்த பிறகு அது பிரமை மாத்திரமே என்று உணர்கிறானோ, அதே போல் முக்திபெற்ற ஞானியும் உலகம் தனக்குத் தோன்றின போதிலும் அது பிரமை மாத்திரமே என்று நன்கு உணர்கிறான். கிலேசங்கள் அல்லது துன்பங்களின்றி இருப்பதே ஜீவன் முக்தி. முக்தி பெற்ற ஞானி சுகதுக்கங்களால் அசைக்கப் படுவதில்லை. அவன் சுகதுக்கமும் கர்மாவும் போகமும் அந்தக்கரண தர்மங்களேயென்று பூரண மாக அறிந்துள்ளான். அவன் இப்போது தன்னை மனத்திலிருந்து பிரித்துக்கொண்டு விட்டான். அவன் இப்போது மனதின் பார்வையாளன் அல்லது சாட்சியாய் விளங்குகிறான்.

ஆவர்ண சக்தியும் விக்ஷேப சக்தியும் அவித்யையின் இரு சக்திகள். ஆத்ம ஞானம் உதித்தவுடன், ஆவரண சக்தி அழிந்து விடுகிறது. ஆவர்ண சக்தி என்பது மறைக்கும் சக்தி. விக்ஷேப சக்தி என்பது உண்டாக்கும் அல்லது வெளிப்படுத்தும் சக்தி. இந்த விக்ஷேப சக்தி மூலமே உலகம் உண்டாகி இருக்கிறது. ஆவர்ண சக்தியின் காரணத்தால் நீ சச்சிதானந்த பிரம்மத்தைக் காண முடியவில்லை. ஆவர்ண சக்தி அழிவுறுவதால், ஞானி ஜனன மரணத்திலிருந்து விடுபடுகிறான். ஆனால் விக்ஷேப சக்தி (லேஷ அவித்யை) பிராரப்த பலத்தினால் வறுத்த விதையைப்போல் இருக்கிறது. ஆகவே

ஜீவன் முக்தனுக்கு உலகத்தின் தோற்றம் இருக்கிறது.

பழுதையில் பாம்பு என்னும் பிரமை பழுதையென்று அறிந்த பிறகு அழிந்தாலும் பயத்தினல் ஏற்பட்ட தேக நடுக்கம் எப்படி இருந்துகொண்டே இருக்கிறதோ, நீர் என்கிற பிரமை நீங்கின பின்பும் கானல் நீர் எப்படித் தோன்றிக் கொண்டிருக்கிறதோ, அதேபோல் ஜீவன் முக்தனுக்கும் ஆத்மாநுபவம் அடைந்த பிறகும் உலகத்தின் மாயீக இயல்பு தெளிவாகத் தெரிந்த பிறகும்கூட உலகம் தோன்றிக் கொண்டிருக்கிறது. கானல் நீரின் மாயீக இயல்பை அறிந்த மனிதன் எப்படி நீர் பருகும் பொருட்டு கானல் நீரிடம் ஓட மாட்டானே, அதேபோல் உலகம் தனக்குத் தோற்றம் அளித்தபோதிலும் உலக பாசமுள்ள மனிதர்களைப்போல் ஜீவன் முக்தன் இந்திரிய விஷயங்களின் பின் ஓடமாட்டான். உலகாயத மனிதனுக்கும் முக்திபெற்ற முனிக்கும் வேற்றுமை இதுவே.

துரோணாச்சாரியர் மரணத்துக்குப் பிறகு, அஸ்வத்தாமாவோடு போர் நடந்தது. ''இந்த ரதமும் குதிரைகளும் இன்றிருப்பதுபோல் போர் முடிந்து நான் வீடு திரும்பும் வரையில் இருக்க வேண்டும்'' என்ற தூய தீர்மானத்துடன் கண்ணபிரான் யுத்த களத்தில் புகுந்தார். அஸ்வத்தாமா பிரம்மாஸ்திரத்தையும் அக்கினியாஸ்திரத்தையும் பிரயோகித்தான். அஸ்வத்தாமாவின் அஸ்திரங்களால் அர்ச்சுனனின் ரதமும் குதிரைகளும் சாம்பலாக்கப்பட்ட போதிலும், கண்ணபிரானின் தூய தீர்மானத்தின் காரணமாக அவை அழிவின்றி இருந்தன. கண்ணன் வீடு திரும்பியவுடன், ரதமும் குதிரைகளும் எரிந்து சாம்பலாயின.

இந்த ஸ்தூல சரீரமே இரதம். நல்வினையும் தீவினையும் ரதத்தின் இரு சக்கரங்கள். முக்குணங்களே கொடி. பஞ்ச பிராணன்கள் கயிறுகள். பத்து இந்திரியங்களே புரவிகள். ஐந்து போக வஸ்துக்கள் பாதை. மனதே கடிவாளம். அறிவே சாரதி. பிராரப்தமே சங்கல்பம். சாதன சதுஷ்டயமும் ஸ்ரவண மனன நிதித்யாஸனங்களும் ஆயுதங்கள். சத்சங்கமே யுத்தகளம். குருவே அஸ்வத்தாமா. ''தத் த்வம் அஸி'' மஹாவாக்யமே பிரம்மாஸ்திரம். ஆத்மஞானமே அக்னி. ஆத்மஞானம் உதித்தவுடன், இரதமும் குதிரைகளும் போன்ற உலகமும் சரீரமும் எரிந்து போகின்றன. பிராரப்த சக்தியின் காரணமாக, ஞானி அல்லது ஜீவன் முக்தனுடைய பார்வையில் உலகமும் சரீரமும் தோன்றுகின்றன. குயவனின் கொம்பினுல் சுழற்றப்பட்ட சக்கரம் கொம்பை எடுத்துவிட்ட பிறகும் கூட சுற்றிக்கொண்டே இருப்பது போல், ஆத்மஞானத்தை அடைந்தால் உண்மையில் அழிந்துவிட்டபோதிலும், பிராரப்த சக்தியின் காரணத்தால், உலகமும் சரீரமும் ஜீவன் முக்தனுக்குத் தோன்றிக் கொண்டிருக்கின்றன. இது பதிதானுவ்ரித்தி எனப்படும்.

அழிவுறுவது அழிவின் பிரதியோகி. அழிவினுல் பிரதியோகியின் தோற்றம் ஏற்படுகிறது. பாதாவில் பிரதியோகியின் தோற்றம் இல்லை. ஆனுல் முக்காலத்திலும் அபாவம் (இல்லாமை) தோன்றுகிறது. இதுவே அழிவுக்கும் பாதாவுக்கும் பேதம்.

கர்த்ருத்வம் போக்த்ருத்வம் ஆகிய குணவிசேஷங்களைக் கொண்ட மனிதனின் சித்த தர்மம், துன்பத்தால் நிறைந்துளது. ஆகவே பந்தத்துக்கு ஹேதுவாகிறது. அச்சித்தத்தைக் கட்டுப்படுத்துவதே ஜீவன் முக்தி. பிராரப்தம் இருப்பதன் மூலம் குடம் உடைந்த பிறகு குடத்

திலுள்ள ஆகாசத்தைப்போல் சரீரங்கள் நீங்கும் போது, விதேக முக்தி உண்டாகிறது.

உருவத்துடன் கூடியது, உருவமில்லாதது ஆக இரண்டு விதங்களில் சித்த நாசம் ஏற்படுகிறது. உருவத்துடன் கூடியது நாசமடைவதே ஜீவன் முக்தி; உருவமில்லாதது நாசமாவதே விதேஹ முக்தி.

குடம் உடையும்போது குடாகாசம் பிரபஞ்ச ஆகாசத்தோடு ஒன்றுவதுபோல், பிராரப்தம் முழுதும் தீர்ந்தவுடன், ஜீவன் முக்தன் விதேஹ முக்தி நிலையை அடைகிறான்.

விதேஹ முக்தியில், ஞானியினது பார்வையிலிருந்து உலகம் பூராவாக மறைந்து விடுகிறது. பிரபஞ்ச ப்ரதிதி கிடையாது. பிராரப்தம் அநுபவித்துத் தீர்ந்தவுடன், ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சரீரங்களாகிய மாறுதல்களைக் கொண்டிருந்த அஞ்ஞானமானது பிரம்மத்தினிடம் ஒடுங்கி விடுகிறது. லேஷ அவித்யை (செல்வது உண்பது முதலியவற்றிற்குக் காரணமாய் ஜீவன் முக்தனிடம் கூடக் காணப்படும் அஞ்ஞானத்தின் அடையாளம்) அதன் காரியத்துடன் பிரம்ம வித்யையின் ஸம்ஸ்காரங்களில் அடங்கிய சேதனத்தால் அழிக்கப்படுகிறது. எப்படி விறகிலுள்ள நெருப்பு புல் பொதியை எரித்துத் தானும் எரிந்து போகிறதோ, அதேபோல் ஞான சம்ஸ்காரங்களில் அடங்கியுள்ள சேதனம் உலகத்தையும் ஞான சம்ஸ்காரங்களையும் அழித்துக் கடைசியில் தானும் அழிந்து விடுகிறது. பிறகு தூய்மையான சுயம் ஜோதியான சச்சிதானந்த பிரம்மம் மிஞ்சுகிறது.

நேரான சகஜ திருஷ்டியின் மூலம் ஒருவன் ''நான் சச்சிதானந்த பிரம்மன்'' என்று உணர்வானாயின், அது சாக்ஷாத்காரம் அல்லது ஆத்ம

ஞானம். எந்த தினத்தில் ஒருவன் தனக்குரிய ஆத்மாவை அறிகிருஞே, அன்றே அவன் ஜீவன் முக்தஞகிருன்.

மூன்று விதமான தாபங்களிலிருந்து விடுபட்டதால், ஜீவன் முக்தன் உலகத்தில் சந்தோஷமாய் உலாவித் திரிகிருன். அவன் எல்லா விதமான பற்றுகளினின்றும் வாசனைகளினின்றும் விடுபட்டவஞகிருன். அவனுக்கு ராகத்துவேஷம் சிறிதும் இல்லை. அவன் நல்லொழுக்கத்தில் நிலை கொள்கிருன். சற்குண சம்பன்னஞகிருன். ''நான் கர்த்தா,'' ''நான் போக்தா'' என்று அவன் எண்ணங் கொள்வதில்லை. அவன் உதார இருதயமுள்ளவஞகிருன்.

எவனுக்கு உலகம் தோன்ருததோடு பிரம்மாகார வ்ரித்தியும் இல்லையோ அவனே விதேஹமுக்தன். அவன் தனக்குரிய சுயம்பிரகாசமான சச்சிதானந்த ஸ்வரூபத்தில் ஆனந்த முறுகிருன். அவனது ஆனந்தம் வாக்குக் கெட்டாதது. அவன் அதீதத்.

சிவபெருமான் தேஜோபிந்து உபநிஷத்தில் குமாரனுக்கு ஜீவன் முக்தியின் (சரீரம் இருக்கும் போதே முக்தி) இயல்பையும் விதேஹமுக்தியின் (சரீரம் நீங்கிய பிறகு முக்தி) இயல்பையும் பின்வருமாறு விளக்குகிருர்: ''நான் சிதாத்மா. நான் பர—ஆத்மா. நான் சிறந்தவரிலும் சிறந்த நிர்க்குணன். ஆத்மாவிலேயே இருப்புள்ளவன். ஜீவன் முக்தன் எனப்படுகிருன். நான் மூன்று சரீரங்களுக்கும் அப்பாற்பட்டவன். நான் புனிதப் பிரக்ஞை, நான் பிரம்மம்'' என்று எவன் உணர்கிருஞே அவன் ஜீவன் முக்தன் எனப்படுகிருன். ''நான் பரமானந்தத்தின் ஆனந்தமுள்ள இயல்பாய் இருக்கிறேன். — நான் பிரம்மம் — என்றும் நிச்சயத்தைத் தவிர எனக்கு சரீரமாவது வேறெப்

பொருளாவது கிடையாது'' என்று உணர்கிறவன் ஜீவன் முக்தன் எனப்படுகிறுன். தன்னிடத்தில் ''நான்'' என்பதே இல்லாதவனுய் ஆனுல் சின்மாத்திரையிலேயே (பூரணப் பிரக்ஞை) இருப்பவனுயும், ஆந்தரீகம் பிரக்ஞையாகவே யுள்ளவனுயும், சின்மாத்திரையே இயல்பாக உள்ளவனுயும், தன் ஆத்மா சர்வம் நிறைந்த இயல்புடையவனுயும், ஆனந்தத்தில் ஈடுபட்டவனுயும், வேறுபாடில்லாதவனுயும், பிரக்ஞையின் இயல்பே நிறைந்தவனுயும், தன் ஆத்மா சுத்த அறிவின் இயல்பானவனுயும், பொருள்களில் எல்லாப் பற்றுதல்களையும் விட்டவனுயும், நிபந்தனையற்ற ஆனந்த முடையவனுயும், தன் ஆத்மா சாந்தியுடையவனுயும், தன்னைத் தவிர வேறு எண்ணமில்லாதவனுயும், எப்பொருளின் இருப்பையும் எண்ணுதவனுயும் இருப்பவன் எவனே அவன் ஜீவன் முக்தன் எனப்படுகிறுன். எனக்கு எக்காலத்திலும் சித்தமாவது, புத்தியாவது, அஹங்காரமாவது, இந்திரியமாவது, சரீரமாவது இல்லை. பிராணனுவது, மாயையாவது, மனேவிகாரமாவது, கோபமாவது இல்லை. நான் சிறந்தவன். இந்த உலக வஸ்துக்களில் எதுவும் எனக்கில்லை. எனக்குக் கோபமாவது, குணவிசேஷங்களாவது, கண்களாவது, மனதாவது, காதாவது, மூக்காவது, நாக்காவது, கையாவது, விழிப்பாவது, கனவாவது, சிறிதளவு காரண அவஸ்தையாவது, நான்காவது நிலையாவது இல்லை'' என்று உணர்கிறவன் ஜீவன் முக்தன் எனப்படுகிறுன். ''இது யாவும் எனதல்ல, எனக்கு, காலம், இடம், பொருள், எண்ணம், ஸ்நானம், சந்தியாவந்தனம், வழிபடு தெய்வம். ஸ்தலங்கள், வழிபாடு, ஆத்ம ஞானம், ஆஸனம், உறவினர், பிறப்பு, வாக்கு, செல்வம், நல்வினை, தீவினை, கடமை, சுபம், ஜீவன், மூவுலகங்களும் கூட, முக்தி, த்வந்த்வம், வேதங்கள், கட்டளைகள்,

அண்மை, சேய்மை, அறிவு, இரகசியம், குரு, சிஷ்யன், குறைவு, அதிகம், பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், சந்திரன், பூமி, நீர், வாயு, ஆகாசம், அக்னி, கூட்டம், இலக்ஷ்யம், உலக வாழ்வு, தியானிப்பவன், தியான வஸ்து, குளிர், வெப்பம், தாகம், பசி, நண்பன், பகைவன், மாயை, வெற்றி, இறந்தகால நிகழ்கால எதிர்காலங்கள், திசைகள், சிறிதும் சொல்வதாவது கேட்பதாவது செய்வது, தியானிப்பது, அநுபவிப்பது, நினைவு வைப்பது, போகம், ஆசை, யோகம், ஆழ்ந்த தியானம், அதிகப் பேச்சு, சாந்தி, பந்தம், அன்பு, சந்தோஷம், திடீரென்று சந்தோஷம், பெரியது, சிறியது, நீளம், குட்டை, குறைதல், அதிகமாதல், அத்யாரோபமாவது அபவாதமாவது, (பிரமையால் உண்டாக்குதல், அந்த எண்ணத்தை நீக்குதல்), ஒன்றென்பது, பலவென்பது, குருடு, மந்தம், திறமை, சதை, ரத்தம், மஞ்சை, சதை, எலும்புசத்து, எலும்பு, ஏழு தாதுக்களில் எதுவும், வெண்மை, சிவப்பு, நீலம், சூடு, லாபம், முக்கியமாவது முக்கியமின்மையாவது, பிரமை, விடாமுயற்சி, மர்மம், ஓட்டம், விடுவதாவது வாங்குவதாவது, சிரிக்கத்தக்கது அரசியல், தெய்வீகப் பிரார்த்தனை, தவறு, திகைப்பு, களிப்பு, அறிபவன் அல்லது அறிவு, அறியத்தக்கது, தான் என்பது, உனக்குச் சொந்தமாவது எனக்குச் சொந்தமாவது, நீயாவது நானுவது, முதுமையாவது இளமையாவது, மனிதத்தன்மை ஆகிய எதுவும் இல்லை; ஆனுல் நான் பிரம்மம் என்பது நிச்சயம். நான் பிரம்மமே. ''நான் சித், நான் சித்'' என்று உணர்பவன் ஜீவன் முக்தன் எனப்படுகிருன். ''நான் பிரம்மம் மட்டுமே. நான் பரம்'' என்று அறிபவன் ஜீவன் முக்தன் எனப்படுகிருன். இது பற்றி சந்தேகம் எதுவும் வேண்டாம். 'நான்ஹம்ஸாவே', நான் என் சொந்த சங்கல்பத்

தால் இருக்கிறேன். நான் என்னையே என் மூலம் பார்க்கக்கூடும். நான் ஆத்ம ஸ்வராஜ்யத்தில் ஆட்சி செலுத்திக்கொண்டு, என்னிடமே எனக்குரிய ஆத்மானந்தத்தில் திளைக்கிறேன்''. எவன் தானே சிறந்தவனும் பயமற்றவனும், தானே பிரபுவாய் தன்னிடம் விஸ்ராந்தியடைந்தவனும் உள்ளவனோ அவன் ஜீவன் முக்தன்.

## விதேஹ முக்தன்

எவன் பிரம்மமாய்விட்டானோ, எவனது ஆத்மா விஸ்ராந்தி அடைந்துளதோ, எவன் பிரம்மானந்தத்தின் இயல்புடையவனோ, எவன் ஆனந்தமுடையவனோ, எவன் தூய இயல்புடையவனோ, எவன் மகா மௌனியோ அவன் விதேஹ முக்தன். ''நான் முழுதும் ஆத்மா'' எல்லாவற்றிலும் சமமான ஆத்மா, சுத்தமானவன், ஒன்றில்லாதவன், இரண்டற்றவன், எல்லாமானவன், தானே பிறப்பு இறப்பற்றவன், இலக்ஷ்ய வஸ்துவான அழிவற்ற ஆத்மாவே நான், விளையாடுகிற, மௌனமான, ஆனந்தமுள்ள அன்புக்குரிய பந்தமற்ற முக்தி, நான் பிரம்மமே. நான் சித்தே'' என்று இவ்வாறு எண்ணங்கூட இல்லாமல், சின்மாத்திரையில் இருப்பவன் விதேஹ முக்தன். ''நானே பிரம்மம்'' என்ற எண்ணத்தைக்கூட உதறிவிட்டு ஆனந்தம் நிறைந்துள்ளவன் விதேஹ முக்தன். எவன் எல்லாப் பொருள்களும் இருக்கின்றன என்ற நிச்சயத்தை அகற்றி சுத்த சிதானந்தனாய் உள்ளானோ, எவன் 'நான் பிரம்மம்' அல்லது 'நான் பிரம்மம் அல்ல' என்னும் எண்ணத்தைவிட்டுத் தன் ஆத்மாவை எதனுடனும் எங்கும் எக்காலத்திலும் சேர்க்காமல் இருக்கிறானோ, எவன் சத்தியத்தின் மௌனத்துடன் எப்போதும் மௌனியாக இருக்கிறானோ, எவன் எதையும் செய்வதில்லையோ,

எவன் குணங்களைக் கடந்தவனோ, எவனது ஆத்மா எல்லாமாகவும், சிறந்ததாயும், பூதங்களைச் சுத்தப் படுத்துவதாயும் உள்ளதோ, காலம், பிரகிருதி, இடம், தான் ஆகிய மாறுதல்களையோ அல்லது வேறு பேதங்களையோ எவன் உணருவதில்லையோ, எவன் ''நான்'' ''நீ'' ''இது'' என்னும் பேதங் களைக் காண்பதில்லையோ, எவன் காலத்தின் இயல்பினனாயினும் அதில்லாமல் இருக்கிறானோ, எவனது ஆத்மா சூன்யமாயும் சூக்ஷ்மமாயும் சர்வ வியாபியாயும் இருப்பினும் அவைகள் இல் லாமல் இருக்கிறதோ, எவனது ஆத்மா தெய்வீக மாயினும் தேவர்களில்லாததோ, எவனது ஆத்மா அளவிடக்கூடியதாயினும் அளவற்றதாயிருக் கிறதோ எவனது ஆத்மா மந்தத் தன்மையின்றி ஒவ்வொருவருள்ளும் உள்ளதோ, எவனது ஆத்மா யாதொரு சங்கல்பமும் இல்லாதிருக்கிறதோ, எவன் எப்போதும் ''நான் சின்மாத்ரன், நான் சுத்தபரமாத்மன், நான் ஆத்ம ஞானத்தின் இயல் புள்ளவனே, நான் சத்தின் இயல்புடையவனே, நான் இவ்வுலகத்தில் எதற்கும் அஞ்சேன்'' என்று சிந்திக்கிறானோ, எவன் தேவர்கள், வேதங்கள் சாஸ்திரங்கள் என்ற எண்ணமற்றவனாய் அவை யாவற்றையும் சூன்யமாகக் கருதுகிறானோ அவன் விதேஹ முக்தன். எவன் தன்னை சைதன்ய மாத்திரமாக உணர்ந்திருக்கிறானோ, எவனது ஆத்மா வரையறையற்ற இயல்புள்ளதோ, எவனுக்குச் சிறிது பெரிது என்ற எண்ணமில்லையோ, எவன் நான்காவது அவஸ்தையில் பரமானந்தத்தில் திளைப்பவனோ அவன் விதேஹ முக்தன். எவனது ஆத்மா நாமரூப மற்றதோ, எவனது ஆத்மா யோகத்தோடு பொருந்தி யுள்ளதோ, எவன் பந்த மாவது மோட்சமாவது நீங்கினவனாய், குணம் அல்லது குணமின்மை இல்லாதவனாய், இடம் காலம் முதலிய இல்லாதவனாய், எவன் தன்

இயற்கையிலேயே ஆத்மப் பிரகாசத்தைக் காண் கிருனே, எவன் தன்னுள்ளேயே ஆனந்தத்தைக் காண்கிருனே, எவனது ஆனந்தம் மனம் வாக்கு களின் அளவுக்கு அப்பாற்பட்டதோ, எவனுடைய எண்ணம் அப்பாற்பட்டதற்கும் அப்பாற் பட்டதோ, அவன் விதேஹ முக்தன். எவன் சித்தத்தின் மாறுதல்களுக்கு அப்பாற் சென்றவனே (அல்லது அவற்றை முழுதும் ஆட்படுத்தியவனே), ஒவ்வொரு மாறுதலையும் எவன் பிரகாசப்படுத்து கிருனே, எவனது ஆத்மா எவ்வித மாறுதல்களும் இல்லாததோ, அவன் விதேஹ முக்தன். அப்படி யாளுல், அவன் சரீரமுள்ளவனும் அல்ல, சரீர மற்றவனும் அல்ல. அப்படிப்பட்ட எண்ணம் ஒரு கணமாவது கொள்ளப்பட்டால், அவன் (எண்ணத் தில்) யாவற்ருலும் சூழப்படுகிருன். எவனுடைய வெளியாத்மா மற்றவர்களுக்குத் தென்படாததாய் உயர்ந்த வேதாந்தத்தை இலட்சிய முள்ளதாய் பரமானந்தமாய் விளங்குகிறதோ, எவன் பிரம்மத் தின் அமுத ரஸத்தைப் பருகுகிருனே, எவன் பிரம்ம அமுதத்தையே மருந்தாக அடைந் துள்ளானே, எவன் அந்த ரஸத்தில் மூழ்கி இருக் கிருனே, எவன் பிரம்ம அமுதத்தின் ரஸத்தில் ஈடுபட்டுள்ளானே, எவன் பிரம்மானந்தத்தின் நன்மை பயக்கும் வழிபாட்டை அடைந்துள்ளானே, எவன் பிரம்ம அமுதத்தில் திருப்தியடைந் திருக்கிருனே, எவன் பிரம்மானந்தத்தை உணர் கிருனே, எவனிடம் பிரம்மானந்த சாரத்தின் ஜோதி உள்ளதோ, எவன் அதோடு ஒன்ருகி விட்டானே, எவன் பிரம்மானந்தத்தின் உறை விடத்தில் உறைகிருனே, எவன் சிந்திக்க முடியாத சிந்தையுடையவனுய் அதோடு ஒன்றுபட்டுள் ளானே, அது நிறைந்த எல்லா ஜீவர்களையும் எவன் தாங்குகிருனே, அந்த ஆனந்தமுள்ள ஆத்மாவில் எவன் தங்கி, ''இதெல்லாம் ஆத்மாவின் இயல்

புடையவை, ஆத்மாவையன்றி வேறில்லை, எல்லாம் ஆத்மாவே, நான் ஆத்மா, மகிமை பொருந்திய ஆத்மா, பரம ஆத்மா, ஆனந்த ரூபமான ஆத்மா; என் இயற்கை நிறைந்துளது, நான் சிறந்த ஆத்மா, நான் எல்லா அவஸ்தைகளும் கூடிய சாஸ்வதமான ஆத்மா, நான் எதனுலும் தாங்கப்படாமல் ஆனுல் ஆத்மா இன்றி எல்லா இருதயத்திலும் வியாபித்திருக்கும் ஆத்மா; மாறுதலற்ற இயல்புள்ள ஆத்மா நான், நான் சாந்தமான ஆத்மா, நான் பல்வேறு ஆத்மா'' என்று எவன் சிந்திக்கிருனே அவன் விதேஹ முக்தன். எவன் இது ஜீவன் முக்தன் அது பரமாத்மா வென்று நினைப்பதில்லையோ, எவனுடைய ஆத்மா, விடுதலை பெற்றதும் பெருதது மான இயல்புடையது ஆனுலும் விடுதலை அல்லது பந்தம் அற்றதோ, எவனது ஆத்மா துவைதத்தின் இயல்பும் துவைத மற்ற ஏகத்தின் இயல்பும் உடையது ஆனுலும் துவைதம் அத்வைதம் அற்றதோ, எவனுடைய ஆத்மா எல்லாவற்றின் இயல்பும் எல்லாமில்லாததில் இயல்பும் உடையது ஆனுலும் அவைகளற்றதோ, எவனுடைய ஆத்மா பொருள்களை அடைந்து அநுபவித்தலால் உண்டாகும் மகிழ்ச்சியின் இயல்புடையது ஆயினும் அதில்லாததும், எவன் எவ்வித சங்கல்பமும் இல்லாதவனே— அப்படிப்பட்ட மனிதன் விதேஹ முக்தன். எவனுடைய ஆத்மா பின்னமற்றதாய், மாசற்றதாய், ஞானமடைந்ததாய், ஆனந்தம் முதலிய அற்ற புருஷனுய், அமிருதத்தின் இயல்பினதாய், முக்காலங்களின் இயல்பினதாய் ஆனுலும் அவைகளின்றி இருப்பதோ; எவனது ஆத்மா முழுதாயும் அளக்க முடியாததாயும், ருஜுவற்றதாயினும் ருஜுவுக்கு உட்பட்டதாயுளதோ; எவனது ஆத்மா நித்தியமானதும் சாட்சியாய் ஆனுல் நித்தியத்துவமும் சாட்சித்வமும் இல்லாததோ; எவனது ஆத்மா

இரண்டற்ற இயல்பினதாயும் சுயம் ஜ்யோதியாயும் உளதோ; எவனது ஆத்மா வித்யையாலும் அவித்யையாலும் அளக்கப்பட முடியாததாய் ஆனாலும் அவைகளோடு கூடின தாயுளதோ; எவனுடைய ஆத்மா அவஸ்தைகளின்றியதும் அல்லது அவஸ்தையின்மையுடையதாயும், எவன் இவ்வுலகம் அல்லது மேலுலகங்கள் இல்லாதவனோ; எவனுடைய ஆத்மா சமத்தினின்று தொடங்கும் ஆறு வஸ்துக்கள் இன்றியதோ, எவன் மோட்சத்தை நாடும் சாதகனுடைய யோக்கியதைகள் இல்லாதவனோ; எவனுடைய ஆத்மா ஸ்தூல, சூக்ஷ்ம, காரண சரீரங்களும் நான்காவது சரீரமும் இல்லாமல் அன்ன, பிராண, மன, விஞ்ஞான கோசங்கள் இல்லாததோ, எவனது ஆத்மா ஆனந்தமய கோசத்தின் இயல்பினதாய், ஆனால் பஞ்ச கோசங்கள் இல்லாததோ, எவனுடைய ஆத்மா நிர்விகல்பத்தின் இயல்பினதாய் சங்கல்ப மற்றதாய் பார்க்க அல்லது கேட்கத் தகுந்த குண விசேஷங்களற்றதாய், இடைவிடாத சமாதியின் காரணத்தால் சூன்யத்தின் இயல்பினதாயும், எவன் ஆதி, மத்தி, அந்த மற்றவனோ; எவனுடைய ஆத்மா பிரக்ஞானம் என்னும் சொல் இல்லாததோ, எவன் ''நான் பிரம்மம்'' என்ற எண்ணமற்றவனோ; எவனுடைய ஆத்மா ''நீ இருக்கிறாய்'' என்ற எண்ண மற்றதாய், எவன் ''இது அத்மா'' என்னும் எண்ணமற்றவனோ, எவனுடைய ஆத்மா ஓம் என்பதால் விவரிக்கப்படுவது எதுவோ அது இல்லாததாய், எவன் வாக்குக்காவது அல்லது மூன்று நிலைகளுக்காவது எட்டாதவனாய், அழிவற்றவனாய் சிதாத்மாவாய் உள்ளானோ; எவனுடைய ஆத்மாவுக்கு ஒளியோ இருளோ இல்லையோ — அப்படிப்பட்டவனே விதேஹ முக்தன். ஆத்மாவையே நோக்கு; அதை உனக்குரியதாயறி. உனது ஆத்மாவை நீயே அநுபவித்து சாந்தியில் இரு. உனது ஆத்மா

விலேயே திருப்தியடை. அப்போது நீ விதேஹ முக்தியை அடைவாய்.

சர்வ வியாபியான, சாஸ்வதமான, பின்ன மற்ற, சுயம்ஜோதியான ஆத்மாவை எங்கும் காண்கிற ஜீவன் முக்தனுக்கு, அடையக் கூடியது அல்லது அறியக் கூடியது எதுவுமில்லை. அவன் பூரணத்துவத்தையும், உயர்ந்த ஆனந்தத்தையும், உயர்ந்த ஞானத்தையும் அடைந்து விட்டான்.

சிலர் தங்கள் முன் பிறப்பில் அவசியமான பயிற்சியை அடைந்து விட்டதால் பிறக்கும்போதே ஆத்ம ஞானத்துக்குரிய தூய்மை முதலிய குணங்களுடன் பிறக்கிறார்கள். அவர்கள் பிறப்பிலேயே சித்தர்கள். குரு நானக், ஆலந்தியைச் சேர்ந்த ஞான தேவர், வாம தேவர், அஷ்டவக்ரர் ஆகியோர் தங்கள் பிள்ளைப் பருவத்திலேயே நிபுணர்கள். சிறுவனாயிருக்கும்போதே குரு நானக் பள்ளியில் ஆசிரியரை ஓம் என்பதன் கருத்தைப் பற்றி வினவினார். வாமதேவர் தாயின் கர்ப்பத்திலிருக்கும் போதே வேதாந்தச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார்.

ஜீவன் முக்தர்கள் அல்லது ஞானிகளின் வாழ்க்கைமுறை வேறுபடுகிறது. ஒரு ஞானி ராஜபோகத்தில் வாழ்கிறார். பகீரதன் இவ்வகை வாழ்க்கையை நடத்தினார். மற்றொரு ஞானி பிச்சைக்காரனைப்போல் வாழ்கிறார். ஒரு ஞானி எப்போதும் தியானத்தில் மூழ்கியிருக்கிறார். அவர் வேலை செய்வதுமில்லை, பேசுவதுமில்லை, எப்போதும் ஏகாந்தமாக இருக்கிறார். ஜடபரதர் இம் மாதிரி வாழ்ந்தார். இன்னொரு ஞானி ஓய்வற்ற கோணலான நகரத்தில் இருந்து சேவையில் ஈடுபடுகிறார். அவர் ஜனங்களுடன் பேசுகிறார். சொற்பொழிவு நிகழ்த்தல், சமய வகுப்புகளை நடத்தல், நூல்களெழுதல் முதலியவற்றில் ஈடுபடுகிறார்.

ஸ்ரீசங்கரர் இவ்வகை வாழ்வு நடத்தினர். இது பிராரப்தத்தின் காரணம். ஒவ்வொரு ஞானிக்கும் தத்தமக்கு உரிய பிராரப்தம் உளது. எல்லா ஞானிகளுக்கும் ஒரேமாதிரியான வாழ்க்கையும் ஒரே விதமான பிராரப்தமும் இருந்தால், இவ்வுலகம் ஒரு சிறைச்சாலையைப் போன்றிருக்கும். காட்சியில் வேறுபாடே பிரகிருதியின் இயல்பாகும்.

---

## ஐந்தாம் பாகம்

# 1. தத்துவ ஞானத்தின் அநுபவக் காட்சி

வேதாந்தத்தையும் அதன் கொள்கைகளையும் சரியானபடி உணர்ந்து, அவ்வேதாந்தத்தை தினசரி வாழ்க்கையில் கடைப்பிடித்தால், அது யுத்தம், வகுப்புச் சச்சரவு, சிறு சண்டைகள், மதப் போர்கள் ஆகியவற்ருல் சீர் குலைந்திருக்கும் உலகத்துக்கு, சாந்தியும், சமாதானமும், சந்தோஷமும் கொணர்வது நிச்சயம்.

ஆத்மா அல்லது தான் என்பதே முடிவான உண்மை. அதுவே முடிவான தத்துவக் கொள்கை. அதுவே ஒவ்வொன்றுக்கும் அடிப்படை. அதுவே உயிருள்ள உண்மை. அதுவே உபநிஷத்துகளின் பிரம்மம். அது வேதங்களின் ஓங்காரம். அது சமூகத்தின் மூலாதாரம். அது இவ்வுலகத்துக்கு ஆதாரம். அது இச் சரீரத்தையும் பிராணனையும் தாங்கி நிற்பது. அது வ்யக்தியற்ற (ஆளில்லாத) பரம்.

நீ வாழ்க்கையில் நாடுவது சிறந்த அமைதி அல்லது பரம சாந்தி. சாந்தி, மோக்ஷம், அழிவற்ற பதம் ஆகிய மாற்று மொழிகள் (பர்யாய ஸப்யாய

சப்தங்கள்). நீ இந்நிலையை யெய்தும் போது இன்ப துன்பங்களுக்கு மனதின் எதிர்ச் செயல்கள் நின்றுவிடும். எல்லாவிதமான விருப்பு வெறுப்புகளும் (ராகத் துவேஷங்களும்) இந்தப் பரம சாந்த நிலையை நீ அடையும்போது முழுதும் மறைந்து விடும்.

ஆத்ம ஞானத்தை அடைகிறவன் எல்லா ஆசைகளின்றும் பூரணமான விடுதலையடைகிறான். ஏனெனில் ஒவ்வொன்றும் தன்னிடத்தில் உள்ளதென்றும், தொடர்ந்து ஆசை கொள்ளும்படியாக தனக்கு வெளியில் ஒன்றுமில்லையென்றும் அவன் அறிகிறான். ''ஆப்தாக மங்ய கா ஸ்ப்ருஹா?'' எல்லாமுள்ளவன் எதற்கு ஆசைப்படக் கூடும்? பிரம்மம் பரிபூர்ணமானது (முழுதும் நிறைந்தது), நிரபேக்ஷயானது (தன்னில் யாவுமடங்கியது). தன்னை உணர்ந்து, எல்லா உயிர்களிலும் தன்னையே காணுவதோடு, தன்னில் எல்லா உயிர்களையும் காண்பவனுக்கு மனதில் ஆசை எவ்வாறு எழமுடியும்?

வாழ்வின் இரகசியங்களில் பலவற்றைத் திறப்பதற்கு உனக்குத் திறவுகோல் அளிக்கப்பட்டுள்ளது. அத் திறவுகோலே தியானம். காலையில் நான்கு மணிக்கும் ஆறு மணிக்கும் இடையில் ஒழுங்காக, தியானம் செய்து நித்தியானந்தத்தையும் அழிவற்ற பதத்தையும் அடை.

கடுமையான தற்பயிற்சியும் ஒழுங்கான தியானமும் உனது மனதை முழுதும் நித்திய வஸ்துவின் மீது நிலை நிறுத்துவதற்கு உனக்கு உதவி செய்யும்.

தன்னம்பிக்கை யுடையவனாக இரு. சுதந்தரமான தீர்ப்பை விருத்தி செய். சலனக்காத சித்தத்தை வளர். தன்னடக்கத்தையும், தன் ஆட்சியையும் பயிற்சி செய். தன்னடக்கமின்றி நீ முக்தி அல்லது சாந்தியை அடையமுடியாது.

அஞ்ஞான சர்ப்பத்தினால் கடியுண்ட மனிதன் ஞானம் அல்லது பிரம்மத்தின் மெய்யறிவாகிய கருட மந்திரத்தால் நோய் நீக்கப்படுவான்.

டன் கணக்கில் சித்தாந்தங்களையும், ஆத்ம ஞான நூல்களையும் படிப்பதை விட ஒரு அவுன்ஸ் ஆத்மாநுபவம் மேலானது. பிரம்மத்தின் அல்லது பரமாத்மாவின் ஒரு க்ஷண தர்சனம் உனக்கு ஞான ஒளியை அளித்து கர்வம், பிரமை, துன்பம், துயரம் ஆகிய உலக வெறியை நீக்கும். ஆத்ம தர்சனம் அல்லது ஆத்மாநுபவம் உனக்கு எச்சரிக்கை தீபம் போல் நிற்கும்.

தெய்வீக வாழ்க்கையின் கொள்கைகளைக் கற்றுணர்ந்து அவற்றை உன் தினசரி ஒழுக்கத்தில் கடைப்பிடி. ஆத்மீகப் பாதையில் அநுபவமுள்ள மனிதர்களாக ஆகுங்கள்.

சித்திகளை அடைந்திருப்பது ஒருபோதும் ஒருவனைக் கடவுள் அண்மையில் சேர்க்காது. ஆத்மீக சக்திகளை விருத்தி செய்வதனாலேயே உண்மை ஆத்மமுன்னேற்றம் உண்டாகி விட்டது என்று அர்த்தமில்லை. அவை சாதகனைக் கவர்ந்து வீழ்ச்சியை விளைவிக்கின்றன.

ஆத்ம ஞானிகளுக்குப் பிரபஞ்சப் பிரக்ஞை அடைந்திருப்பது சாஸ்வதமானது. அது தொடக்கத்தில் க்ஷண தர்சனத்தைப் போலுள்ளது. நிலைத்த தியானத்தின் மூலம் அது சாஸ்வதமாக அல்லது இயற்கையாக ஆய்விடுகிறது.

வஸ்துக்களின் உலகமே வெளியுலகம். ஆந்திரீக விஷய உலகம் மனதினால் சிருஷ்டிக்கப்பட்ட பிம்பங்களின் உலகமே. ராகத் துவேஷம் (விருப்பு வெறுப்புகள் அல்லது கவர்ச்சியும் தூரத்தள்ளுதலும்) வெளி இந்திரிய விஷயங்களில் இல்லை. அவை உள்ளத்திலும் ஆந்திரீக பிம்பங்களிலும் உறைகின்றன.

த்ராடக் ஜபம், உபாஸனை பிராணுயாமம் ஆகியவற்றின் மூலம் விஷய உலகத்தில் அலையும் மனத்தை நிறுத்து. விஷய உலகத்தில் ராஜயோக முறையான சித்த விருத்தி நிரோதம் (மனதின் எல்லா மாறுதல்களையும் நிறுத்துதல்) அல்லது ஞான யோகிகளின் முறையான சுய ஆராய்ச்சி விசாரணையால் பிம்பத்தை உண்டாக்கும் சித்தத்தோடு போர் தொடு.

மனதே இச் சரீரத்துக்கு விதை. இந்த மனதுக்கு பிராண அலை, வாசனை ஆகிய இரு விதைகள் உண்டு. பிராணனை அடக்கினுல் மனது அடங்கும். விவேகம், விசாரம், வைராக்கியம், தியானம் ஆகியவற்றின் மூலம் வாசனைகளை நீக்கினுல் மனது அழிவுறும்.

நீ சாதாரண ஆரோக்கியத்தில் இருக்கும் போது வேப்பிலை கசக்கிறது. ஆனுல் நீ நாகத்தினுல் கடியுண்டால் அப்போது வேப்பிலை இனிக்கும். கசப்பும் இனிப்பும் இலைகளிலில்லை, கர்த்தாவிடமேயுளது. அவை மனத்தால் சிருஷ்டிக்கப்படுகின்றன. மனந்தான் வஸ்துக்களுக்கு, குணங்கள், உருவம், ருசி முதலியவற்றை அளிக்கிறது. இம்மனத்தைக் கட்டுப்படுத்து. இந்த மனத்துக்கு மேல் எழும்பி எப்போதும் ஆனந்தமாயிரு.

ஒரு வைத்தியன், நியாயவாதி சந்தோஷ முள்ளவன் என்று நினைக்கிருன். நியாயவாதி, வியாபாரி தன்னைவிட சந்தோஷமாயிருப்பவன் என்று எண்ணுகிருன். வியாபாரி, நீதிபதி தன்னைவிட சந்தோஷமாயிருப்பான் என்று எண்ணுகிருன். நீதிபதி, பேராசிரியர் அதிக சந்தோஷமாயிருப்பவர் என்று எண்ணுகிருன். இது மனதின் சூதே. இது ஒரு பிரமை. உலகத்தில் யாரும் சந்தோஷமுள்ளவரல்ல. உண்மைச் சந்தோஷம் தனது ஆத்மாவிலேயே இருக்கிறது. ஆத்ம ஞானியான ஜீவன் முக்தன்தான் எப்போதும் சந்தோஷ முள்ளவன்.

ஆகவே ஆத்ம ஞானத்தை அடைந்து எப்போதும் சந்தோஷமாயிரு.

பயங்காளியாயிருப்பது பெரும் பாவம். சுய காரியப் புலியாயிருப்பது பெருங் குற்றம். தன்னைச் சரீரத்தோடு ஒன்று படுத்திக்கொள்வது பெருங் குற்றம். தனது சொந்த ஆத்மாவை மறப்பது பெரும் பாவம். ஆகவே கோழைத் தனத்தையும் சுய நலத்தையும் நாசம் செய். சரீரத்தோடு ஒன்றிக் கொள்வதை விட்டொழித்து உனது முக்கிய தெய்வீக இயல்பை எப்போதும் நினைவில் வை.

உன்னை உயர்த்துவது எதுவோ அது தர்மம் (புண்ணியம்), எது உன்னைத் தாழ்த்துகிறதோ அது பாவம் (அதர்மம்); உன்னை லட்சியத்துக்குக் கொண்டு செல்வது புண்ணியம், உன்னை உலக பாசமுள்ள மனிதனுக்குவது பாவம்; தெய்வீகத்தை நீ அடையும்படி உதவுவது புண்ணியம், இருண்ட அஞ்ஞானப் படுகுழியில் உன்னைத் தள்ளுவது பாவம்; உனக்கு ஞானத்தை யளிப்பது தர்மம், போதையையளிப்பது அதர்மம்; உனது இருதயத்தைத் தூய்மையாக்குவது புண்ணியம், உனது இருதயத்தை மாசு படுத்துவது பாவம்; உனக்கு சாந்தி, சந்தோஷம், திருப்தி, உற்சாகம், இருதய விசாலம் ஆகியவற்றை அளிப்பது புண்ணியம், அமைதியின்மை, அதிருப்தி, மனக்குறை, இருதயத்தின் குறுக்கம் ஆகியவற்றை அளிப்பது பாவம். ஆகவே தர்மத்தை அப்பியாசம் செய். தர்மத்திலிருந்து ஞானம் உதயமாகும்.

தான் அல்லது ஆத்மாவின் அறிவின் மூலம் காதுகள் சப்தங்களைக் கேட்கின்றன. ஆத்மாவின் அறிவின் மூலம் கண்கள் வஸ்துக்களைக் காண்கின்றன. ஆத்மாவின் அறிவின் மூலமே நாவு பொருள்களைச் சுவைக்கிறது. ஐந்து ஞானேந்திரியங்களை நிர்வகிப்பது ஆத்மாவே. ஆத்மா காதுகளுக்குக்

காதாயும், நாக்குகளுக்கு நாக்காயும் உள்ளது. ஆத்மா சக்தி பொருந்திய காந்தம். மறைந்துள்ள, சர்வ சக்திமானும் சர்வ அறிவும் நிறைந்தவனுமான நிர்வாகியை நீ அறியக் கூடுமானால், தியானப்பியாஸத்தால் இந்த ஆத்மாவை நேர்முகமான சகஜ அறிவினால் நீ காணக் கூடுமானால் நீ இந்த சம்சார சாகரத்தைக் கடந்து அமரத்துவத்தையும், நித்தியானந்தத்தையும் பரம சாந்தியையும் அடையலாம்.

மறைந்துள்ள கடவுள் உன்னுள் உள்ளார். அழிவற்ற ஆத்மா உன்னுள் உளது. உன்னுள் குறையாத ஆத்மீகப் பொக்கிஷம் இருக்கிறது. உன்னுள்தான் மகிழ்ச்சிக்கும் சந்தோஷத்துக்கும் ஊற்று சுரக்கிறது. உன்னுள்ளேதான் ஆனந்த சாகரம் உளது. அழிவுள்ள இந்திரிய விஷயங்களில் நீ வீணாகத் தேடித் திரிந்த சந்தோஷத்தை உன்னுள்ளேயே காண். உனது சொந்த ஆத்மாவிலேயே அமைதியாக ஓய்வடைந்து அமரத்துவத்தின் அமுதத்தைப் பருகு.

மறைந்த புதையல் இருக்கும் இடத்தை அறியாத மனிதன், தினந்தோறும் அதன் மீதே பல முறை நடந்த போதிலும் எப்படி அதைக் கண்டு பிடிக்க முடிவதில்லையோ, இதே போல் நீ தினந்தோறும் ஆழ்ந்த தூக்கத்தில் அவனில் புகுந்த போதிலும் நீ பிரம்மம் அல்லது பரமாத்மாவைக் காண முடிவதில்லை. ஞானத்தின் மூலம் அஞ்ஞானம் அழிக்கப்பட்டால், தலைசிறந்த தத்துவத்தின் நேர் ஞானத்தை பெறுவாய்.

முக்தி பெற்ற ஞானி அல்லது ஜீவன்முக்தனுக்கு உலகம் மறைந்து விடுகிறது. அவன் பிரம்மம் அல்லது புனித ஆத்மாவை எங்கும் காண்கிறான். உலகம் திரும்பி வந்தாலும் கூட, கானல் நீர், பழுதைப் பாம்பு என்று நன்கு உணர்ந்த பிறகு

ஒருவன் எப்படி அவற்ருல் மதிமயங்குவதில்லேயோ அதே போல் அவன் அதனுல் பிரமையடைவதில்லே. அவனுக்கு உலகம் திரும்பி வந்தாலும் கூட, எதிர் இரட்டைகள், கஷ்டங்கள், கிலேசங்கள், துன்பங் கள், துயரங்கள் நிறைந்த அதே உலக மல்ல, அது துக்கங்களும் வேதனேகளும் நிறைந்த சிறைச்சாலே யல்ல. துன்பங்களும் துயரங்களும் நிறைந்த உல கம் சத் சித் ஆனந்தமாக (இருப்பு, ஞானம் பரமானந்தம்) மாறிவிட்டது, ஏகமான சர்வ வியா பியான ஆத்ம தர்சனத்திஞல், எல்லாத் தடை களும், எல்லா வேற்றுமைகளும், பேதங்களும், எல்லாத் துவந்தங்களும், அழிக்கப்படுகின்றன. அவனுக்கு பிரபஞ்ச தர்சனம் உளது. அவன் எப் போதும் சுயஆனந்தத்தையும் சுய ஞானத்தையும் அநுபவிக்கிருன். அவன் எப்போதும் தன்னில் தானே மகிழ்ச்சி கொள்கிருன். அவன் தன் ஆத் மாவிலேயே நிலே கொண்டிருப்பதால், எதுவும் அவனேக்கலக்க முடியாது. அவனது நிலே விவரிக்க வொண்ணுதது.

---

## 2. மனதின் தத்துவம்

பூமிராபோ அனலோ வாயு: கம் மஞே புத்திரேவச |
அஹங்கார இதீயம் மே பின்ஞ ப்ரக்ருதிரஷ்டதா ||
— பகவத்கீதை அத். 7-4.

சாங்க்ய விஸ்வ தத்வப்பிரகாரம் மனதானது அஹங்காரம் அல்லது அஸ்மிதையாகிய பாதி திடக் கொள்கையிலிருந்து உண்டாகிய நான்காவது கொள்கை. பிரகிருதி அல்லது அவ்யக்தம் (வெளிப் படாத நிலேயிலுள்ள பதார்த்தம்) ''அஷ்டாங்கி'' அல்லது எட்டுவிதமான பிரகிருதி (ப்ரக்ருதிர் அஷ் டதா) என்று சொல்லப்படுகிறது. மனது எட்டு

உறுப்புகள் அல்லது அஷ்டாங்கத்தில் ஒன்று. மனது என்னும் சொல்லின் பொருளே குறிப்பிட முடியாதது, சந்தேகத்துக்குரிய துணிவான கற்பனை முறையில் தவிர, தெளிவாக விவரிக்க முடியாதது. யாரும் மனதைச் சுட்டிக் காட்டி ''நான் மனது என்னும் சொல்லால் குறிப்பது இதுதான்'' என்று கூறமுடியாது. அறிதல், சங்கல்பம், கற்பனை, தீர்மானம், தர்க்கம், உணர்வு, ஞாபகம் முதலிய சக்திகளின் கட்டு அடங்கியிருப்பதே மனது. குணம் மனதின் உத்வேக அமைப்பைக் குறிக்கிறது. ஞானம் அறியும் அமைப்பைச் சேர்ந்தது. அறிவிப்பதற்கு வெவ்வேறு வழிகள் உள்ளன. அவற்றின் மூலம் அறியும் சக்தியும் ஞாபக சக்தியும் செலுத்தப் படுகின்றன. ஒரே மனதுதான் அது செயலாற்றும் மட்டத்துக்குத் தக்கபடி பற்பல பெயர்களை யடைகிறது. அவைகளாவன: கர்த்தாவான மனது, பொருளைக் குறிக்கும் மனது, பிரபஞ்ச மனது (விஸ்வப்ரக்ஞை) அல்லது அதிமானுஷமனது, குறைந்த ப்ரக்ஞையுள்ள மனது, இயற்கை மனது, ஆத்மீக மனது ஆகியவை. மனதின் தொழில் அல்லது விஷயம் உணர்தலே (சங்கல்ப விகல்பம் அல்லது இச்சை, எண்ணம், சந்தேகம்).

'சந்தேகமுள்ள மனது' என்பது ஞானேந்திரியங்கள் அனைத்தும் ஒன்று சேர்ந்த கூட்டமே. மனது சங்கல்பத்துக்குக் கீழ்ப்பட்டது. பிராணன் அல்லது சக்தி பிரகிருதிக்கு மேற்பட்டது. மனது பூரணப் பொருளின் தொடர்புள்ள காட்சி. மனது சக்தி அல்லது பிரகிருதிக்கு நேர்முகமாகவும், ஆனால் சங்கல்பத்துக்கு எதிர்மறையாகவும் உளது. சங்கல்பமே மறுபடி மனதுக்கு நேர்முகமாகவும், ஆத்மாவுக்கு எதிர்மறையாகவும் உளது. மனது தூய்மையடைந்தபோது உனது உண்மையான குருவாகும். நீ அமைதியின் குரலைக் கேட்பாய்.

உனது விடுவிக்க முடியாத பிரச்சினைகளுக்கு நீ மறு மொழிகளைப் பெறுவாய். சஹஸ்ராரம் அல்லது ஆயிர இதழ்களுள்ள கமல மலரிலுள்ள ஓங்காரம் மனதிற்கு ஆதி இருப்பிடம். உனது ஆசைகளி னுலேயே மனது அசுத்தமாய் விட்டது. சுத்தமான பிரம்மம் எப்படி அசுத்தமான ஜீவனுக ஆய்விட்டது என்பது தெளிவான, சரியான திருப்திகரமான சமாதானம் கூறுவதற்கு மனித முயற்சிகள் யாவையும் தோல்வியடையச் செய்யும் ஒரு முக்கிய பிரச்சினையாகும். இது ஒரு விடையில்லாத வினு. இது இயற்கையின் மர்மமான பக்கம். ஸ்தூல நிலையைச் சேர்ந்த வரையறையுள்ள புத்தியைக் கொண்டு, மனதுக்கு எட்டாத மட்டங்களைச் சேர்ந்த தெய்வீகப் பிரச்னேகளை நீ விடுவிக்க முடியாது. சகஜ ஞானத்தை விருத்தி செய். உத்தமோத்தமமான அறிவை அடை. பிரபஞ்சப் பிரக்ஞை மூலம் உள்ளுக்குள் நோக்கு. அப்போது உனக்கு உண்மையான விடை கிடைக்கும்.

ஏகாக்கிர சித்தத்தின் ஆராயும் விளக்கின் மூலம் நீ ஆத்மப் பொக்கிஷங்களைப் பார்த்தல் வேண் டும். எக்ஸ் கிரணங்கள் திடமான எலும்புகள் அல்லது மரத்துண்டுகளை எவ்வாறு ஊடுருவிச் செல் கின்றனவோ, அவ்வாறே குவிந்த மனதின் ஏகாக்கிர மனோகிரணங்கள் பிரகிருதியின் வெவ் வேறு உருவங்களின் மூலம் சென்று அவற்றின் உண்மையான இயல்பை வெளிப்படுத்தும்.

பிரபஞ்சப் பிரக்ஞை (சமரஸ அறிவு) யின் போது, உயிர்களின் ஏகத்துவத்தை நீ அறிகிருய். இறந்த பொருள் என்று ஒன்று கிடையாது என்றும் யாவும் உயிருடையனவே யென்றும், அசைபவை யென்றும் அறிவுள்ளவை யென்றும் நீ காண்பாய். இந்த இந்திரியப் பிரபஞ்சத்தின், த்வந்தங்கள் அல்லது எதிர்ப் பொருள்கள் உள்ள இவ்வுலகத்

தின், கற்பனை மயமான இவ்வுலகத்தின், நாம ரூபங்களான இவ்வுலகத்தின் அடிப்படை அல்லது சாரமாகிய சர்வாத்மாவாக இந்தப் பிரபஞ்சத்தை நீ காண்பாய்.

சுவர்க்கம் அல்லது வானுலகத்தில் நீ 'எண்ணங்களின் உலகத்தில்' இருக்கிறாய். உனக்குத் துன்ப உணர்ச்சி அல்லது அநுபவமேயில்லை. ஏன்? ஏனெனில் நீ எண்ணும் அல்லது கற்பிக்கும் எதுவும் உனக்குக் கிடைத்து விடுகிறது. உனது ஆசைகள் உடனுக்குடனே நிறைவேறுகின்றன. உனது எண்ணமாகிய பொருள் உடனடியாய் உருவடைந்து, உன் முன் நிற்கிறது. நீ திருப்தியடைகிறாய். ஆனால் இது உண்மையல்ல.

ராஜயோகம் அல்லது மனோயோகமாகிய சாஸ்திரமானது ஆத்மாவின் மத்தியிலுள்ள இச்சா சக்தியின் கட்டளையின் கீழ் எப்போதும் அசைந்து கொண்டேயிருக்கும் மனதைக் கட்டுப்படுத்தும் முறைகளைக் கூறுகிறது. மனோயாமம் பிராணாயாமத்தைவிடச் சிறந்தது; ஆனால் மனோயாம அப்பியாஸத்துக்கு அதிகாரிகள் அல்லது யோக்கியதை யுடையவர்கள் துணிந்த அறிவும் பிரம்மாண்ட மனோ சக்தியும் படைத்து மிகுந்த அறிவு பெற்றவர்களாக இருக்கவேண்டும். பத்ம அல்லது சித்தாஸனத்தில் கிழக்கு அல்லது வடக்கு நோக்கி அமர். திரிகூடி (இரு புருவமத்தி) மீது மூடிய கண்களோடு த்ராடக் அல்லது தாரணை செய். பிரணவம் அல்லது 'ஓம்' ன் மீதும் அதன் பொருளின் மீதும் தியானித்து எண்ணத்தின் வேகத்தை அடக்கு. தினந்தோறும் அரைமணியிலிருந்து இரண்டு அல்லது மூன்று மணி நேரம் ஒழுங்காக அப்பியாஸம் செய். நீ சீக்கிரம் யோகி அல்லது ஆத்ம ஞானியாக ஆவாய்.

---

## 3. விருப்பத்தின் தத்துவம்

விருப்பம் என்பது ஒரு வஸ்துவைக் குறித்து உண்டாகும் ஊக்கமே. அவ்வஸ்துவைப்பற்றி 'ஆஹா, அது எவ்வளவு அழகாக இருக்கிறது' முதலிய கற்பனையால் அவ்விருப்பம் உயிர்பெற்று விளங்குகிறது.

எப்பொருளேயோ அல்லது இலட்சியத்தையோ அடைவதன் பொருட்டுத் தீவிர ஆவல் விருப்பமாகும். எதையாவது அடையவேண்டும் என்ற வேகம் விருப்பமாம்.

பார்க்கும் விருப்பம் கண்களாயிற்று; கேட்கும் விருப்பம் காதுகளாயிற்று; ருசிபார்க்கும் விருப்பம் நாக்காயிற்று; முகரும் விருப்பம் மூக்காயிற்று; ஸ்பர்சிக்கும் விருப்பம் சர்மமாயிற்று; வேலை செய்யும் விருப்பம் கையாயிற்று; பேசும் விருப்பம் வாக்காயிற்று; நடக்கும் விருப்பம் கால்களாயிற்று; கலவி விருப்பமே உற்பத்தி உறுப்பாயிற்று. இந்த உலக வாழ்க்கைக்கு விருப்பமே மூலகாரணம்.

விருப்பங்கள் உனது இயற்கையுணர்ச்சிகளின் போக்குகள். இயற்கையுணர்ச்சி செயலுக்குத் தன்னையறியாமல் ஊக்குவது. வேதாந்த சாஸ்திரக் கொள்கைப்படி விருப்பம் (ஆசை) அவித்யை அல்லது அஞ்ஞானத்தின் அடியாகப் பிறந்தது. பிரம்மத்தினிடம் விருப்பங்களாவது ஆசைகளாவது அவாக்களாவது கிடையாது. அது எப்போதும் புனிதமாய் எல்லாவற்றையும் கடந்ததாய் இருக்கிறது. அது ஆசையின் அடையாளத்தால்கூட தொடப்படுவதில்லை. அது மாயை அல்லது மலத்திலிருந்து (ஆசையின் அழுக்குகளிலிருந்து) பூரணமாய் நீங்கியது.

நீ ஒரு பொருளைப்பற்றிச் சிந்திக்கும்போது உன்னுள் ஒருவகையான கிளர்ச்சி உண்டாவதை உணர்கிறாய். அந்த ஆசைப்பட்ட பொருளை அடையும் பொருட்டு செயலாற்றும்படி உத்வேகம் உண்டாகிறது. அப்பொருளை அடைய ஆசை உண்டாகிறது. பிறகு சேஷ்டை அல்லது பிரயத்தனம். அப்பொருளை எப்படி அடைவது என்பதற்குத் தெளிவான நிச்சயமான உருவத்தில் நீ யோசிக்கத் தொடங்குகிறாய். ஒரு பொருளைப் பற்றி எண்ணியமாத்திரத்தாலேயே ஒருபோக்கு அல்லது மறைந்த நுண்ணிய வாசனையானது செயலாற்றும்படி தூண்டுகிறது. செயல் இந்திரியங்கள் வேலைசெய்யத் தொடங்குகின்றன. நீ அப்பொருளை அடைந்து அநுபவிக்கிறாய்.

வாசனை என்பது ஆசையின் நுண்ணிய வடிவம். அது மறைபட்டுள்ள விருப்பம். வாசனைகள் ஸ்தூலமான ஆசை வடிவத்தைக் கொள்கின்றன. இந்திரிய விஷயங்களில் தீவிர உத்வேகமே திருஷ்ணு. வாசனை சம்ஸ்காரங்கள் அல்லது சிந்தனைகளோடு ஒன்றோடொன்று கலந்துள்ளது. வாசனைகள் சம்ஸ்காரங்களை உண்டாக்குகின்றன. சம்ஸ்காரங்கள் முறையாக வாசனைகளை உற்பத்தி செய்கின்றன. வாசனையும் சம்ஸ்காரமுமாகிய, ஒருபோதும் முடிவில்லாத, சக்கரம் சுழல்வதே ஜனனமரணத்துக்குக் காரணமான சம்சாரசக்கரத்தை உண்டாக்குகிறது.

இயற்கையுணர்ச்சிகள் எண்ணத்தைப் பற்றியது, வாக்கைப்பற்றியது, செயலைப்பற்றியது ஆக மூவகைப்படும்.

உத்வேகம், இயற்கையுணர்ச்சி, விருப்பங்கள், அவாக்கள் ஆகியவை பிரகிருதி அல்லது குணங்களின் மாறுதல்கள். இரும்புத் துண்டுகள் காந்தத்தின்முன் அசைவதுபோல், உத்வேகங்கள்,

இயற்கையுணர்ச்சிகள் முதலிய தங்கள் வேகம் அல்லது சேதன சக்தியை ஒவ்வொன்றுக்கும் உற்பத்தி ஸ்தானமான பிரம்மத்தினிடமிருந்து பெறுகின்றன.

அபினி வேஷம் என்பது இந்த உலக வாழ்க்கையினிடம் ஒட்டிக்கொள்வது. இது மரணத்துக்குப் பயப்படுவது. இது பதஞ்சலி மகரிஷியின் கூற்றுப்படி பஞ்சகிலேசங்களில் ஒன்று. அது அவித்யை அல்லது அஞ்ஞானத்தினடியாகப் பிறப்பது. இது பெர்க்ஸனுடைய 'இலான்வைடல்', ஸ்கோபன் ஹாவரின் 'உயிர் வாழ் உறுதி' அல்லது ஜங்கின் 'லிபிடோ,' புத்தர்பிரானின் 'திருஷ்ணே' என்பவற்றுடன் ஒரே பொருள் கொண்டது. இவ்வுலக வாழ்க்கைப் பற்றுதலே மறுபிறப்புக்குக் காரணம். இந்தப் பற்றுதல் வைராக்கியம், விவேகம், ''நான் யார்?'' என்ற விசாரணை ஆகியவற்றின் மூலம் அழிக்கப்பட வேண்டும்.

இந்திரிய விஷயங்களிலிருந்து நீ உன்னை விடுவித்துக்கொள்ள விரும்பினுல் கிரியை, அறிதல், அன்பு ஆகிய போக்குகளில் ஈடுபடும் மனதின் மூன்று வெவ்வேறு அறைகளை நீ அடைத்தல் வேண்டும். மனது கிரியை, அறிவு, அன்பு ஆகியவற்றின் மூலம் வெளியே பாய்கிறது. கிரியை என்பது செயல். அறிவு என்பது உணர்தல். அன்பு என்பது வஸ்துக்களிடம் பிரியம். கிரியை என்னும் மனேசக்தி செயல்கள் யாவற்றிற்கும் மூலமாக இருக்கிறது. கிரியா சக்தியின் மூலம் கிரியையின் போக்கு நடைபெறுகிறது. ஞான சக்தி மூலம் அறியும் போக்கு நடைபெறுகிறது. பிரேம சக்தி மூலம் அன்பின் போக்கு நடைபெறுகிறது.

உனது மனேசக்தியை இந்தத் திசைகளில் ஓட விடாதே. ஜபம், பிராணயாமம், பிரத்யாஹாரம், தமம், சமம், ஆத்ம விசாரணை, தியானம், பக்தி

ஆகியவற்றை அப்பியஸிப்பதன் மூலம் நீ மனதை பகவானிடம் அல்லது ஆத்மாவிடம் நிலைநிறுத்து.

அவித்யா சக்தியிலிருந்து ஆசைப்படும் வெளி விஷயங்களை அநுபவிப்பதற்கு விருப்பம் எழுகிறது. மனிதன் அஞ்ஞானத் திரையினால் மூடப்பட்ட வுடன், அவன் தனது முக்கிய ஆனந்த இயல்பை மறந்து இந்திரிய மார்க்கங்கள் மூலம் இன்பம் தேடி இந்திரிய விஷயங்களின் பின் ஓடத் தொடங்கு கிறான். தனது ஆசைப் பொருள்களை அடையும் பொருட்டு, அவன் முயற்சி தொடங்கி சுயநலமான கர்மங்களைச் செய்கிறான். அவித்யை (அறியாமை), காமம் (ஆசை), கர்மம் (செயல்) ஆகிய முடிச்சுகள் அல்லது ஹிருதயக் கிரந்திகள் மயங்கிய ஜீவனை இந்த சம்சாரம் அல்லது ஜனன மரண சக்கரத் துடன் பிணித்திருக்கின்றன.

நம்பிக்கை, எதிர்பார்த்தல், அடுத்தடுத்து செய் தல் ஆகியவற்றால் ஆசை பலப்படுகிறது. ஆசை, பற்றுதல் (ஆசக்தி), ஆவல் (காமனு), அதிகப் பிரியம் ஆகிய மூன்று பாகங்கள் கொண்டது. வைராக்கியம், விவேகம், விசாரணை ஆகியவற்றால் ஆசக்தியை நீ அழித்தால், ஆவல் தானாக நசிக்கும். அதிகப்பிரியம் சிலகாலம் இருக்கும். அதுவும் விவேகத்தின் மூலம் அழிந்துபடும். ஆகவே பற்று தலை முதலில் ஒழி. விரக்தியைப் பயின்று உண்மை யையும் உண்மை யல்லாததையும் பகுத்தறி. உனது விசாரணையை விடாமுயற்சியோடு நடத்து. ஒரு மனிதன் அல்லது ஒரு வஸ்து அல்லது ஓரிடம் இவற்றில்பற்று என்று மூன்றுவகையான பற்றுதல் உண்டு.

உனக்கு காபி, தேநீர், கத்திரிக்காய் அல்லது உருளைக்கிழங்கு இதுபோல் ஒன்றில் அதிகப்பிரியம் இருக்கக் கூடும். இந்துஸ்தானி ஆகாரவகை எவ்வளவு நன்றாகச் சமைக்கப்பட்டிருப்பினும், ஒரு

சென்னை வாசியோ, வங்காளியோ, பஞ்சாபியோ தன் ஆகாரத்திலேயே அதிகப்பிரியம் காட்டுவான். இந்த அதிகப் பிரியத்தை அழிக்க வெகுகாலமாகும்.

ஒவ்வொரு செயலும் ஏதோ காரணத்தின் விளைவே. காரணம் என்பது ஏதோ ஒரு இயற்கை உத்வேகம் அல்லது இரண்டு அல்லது மேற்பட்ட உத்வேகங்களின் சேர்க்கையேயன்றி வேறில்லை.

எச்செயலும் ஒரு இலட்சியத்தை அடையும் முயற்சியே. முக்கிய உத்வேகம் அல்லது செய்கைக்குத் தூண்டுகோல் உளது. கிரியையின் போக்கு மனிதனுள் வேலை செய்கிறது.

இனத்தை உற்பத்தி செய்யும் சுபாவம், பாலுணர்ச்சி, தற்காப்புணர்ச்சி, தப்பும் சுபாவம் அல்லது அடிபடுவதிலிருந்து ஒதுங்குதல், பொருளுணர்ச்சி, அறியும் அவா, கும்பல் கூடும் சுபாவம், வெறுக்கும் சுபாவம், கவர்ச்சி சுபாவம், பெற்ற பாசம், சொன்னதைச் சாதிக்கும் சுபாவம், சிரிக்கும் சுபாவம், தன் சொந்த சுகங்களுக்காக சுரண்டிப் பணம் குவிக்கும் 'பனியா' அல்லது வைசிய சுபாவம்; மற்றவர்களை அடக்கியாள முயற்சிக்கும் ஆதிக்க சுபாவம், தன்னைவிட சக்தியும் செல்வாக்குமுள்ளவர்களை அழிக்கமுயற்சிக்கும் அழிக்கும் சுபாவம் ஆகிய உள்ளன.

மனிதன் தன் வம்சம் அல்லது பரம்பரையை விருத்திசெய்யக் குழந்தைகளை அடைய விரும்புகிறான். இது வம்சவிருத்தி உணர்ச்சி அல்லது புத்ர ஈஷணை. பாலுணர்ச்சியால் கலவி விருப்பம் உண்டாகிறது. கலவி விருப்பத்தின் பலம் பாலுணர்ச்சியின் தீவிரத்தைப் பொறுத்தது. உத்வேகம் பலமுள்ள சக்தி. அது மனத்தை ஆட்கொள்கிறது. அது மனதுக்குத் திடீரென்று ஊட்டப்படும் வேகம். ஜபம், பிராணயாமம், தியானம், சுத்த உணவு,

ஆத்மீக விசாரணை ஆகியவற்றால் கலவி உத்வேகம் கட்டுப்படுகிறது.

மனிதன் தன்னைக் காத்துக்கொள்ள விரும்புகிறான். பசி ஒரு தற்காப்பு உணர்ச்சியே. ஆபத்துக் காலத்தில் அவன் வரும் ஆபத்தினின்று தன்னைக் காத்துக்கொள்ள விரும்புகிறான். இதுவே தப்பித்துக்கொள்ளும் உணர்ச்சி. அவன் தான் அவமதிக்கப்படும்போது சண்டை செய்ய விரும்புகிறான். இது போர் உணர்ச்சி. அவன் பல விஷயங்களைப்பற்றி அறிய விரும்புகிறான். இது அறியும் அவா. அவன் பேச்சுத் துணைக்கு ஆட்களைத் தேடுகிறான். தன்னைச் சேர்ந்த இனம் என்று ஒன்றையடைய விரும்புகிறான். இது கும்பல்கூடும் சுபாவம். அவனுக்குச் சிலரிடம் அல்லது சில பொருள்களிடம் இயல்பான விருப்போ வெறுப்போ இருக்கிறது. இது விருப்பு வெறுப்பு உணர்ச்சி. அவன் ''என் அபிப்ராயந்தான் சரியானது. நான் எதையும் செய்ய முடியும். நான் அறிவாளி. 'நான் உயர்ந்த வகுப்பு பிராமணன். நான் கல்விமான்'' என்று தன்னைச் சாதித்துக்கொள்ள விரும்புகிறான். இதுதான்என்று சாதித்துக்கொள்ளும் ராஜஸ சுபாவம் அல்லது சாதித்துக்கொள்ளும் உணர்ச்சி. அவனுக்குத் தன் குழந்தைகளிடம் பிரத்தியேகமான உடன்பிறந்த பிரியமும் அன்பும் இருக்கிறது. அவன் அவர்களைக் கொஞ்சிச் சீராட்டுகிறான். இது பெற்றபாசம். எதிர் செய்யும் சுபாவம் இருக்கிறது.

கீதையின்படி ஊக்கம் என்பது வேகம் அல்லது பலம். கண்ணபிரான், ''எவன் உடல் நீங்குவதற்கு முன்பாக ஆசையாலும் கோபத்தாலும் எழும் மனக்கிளர்ச்சியை இங்கிருக்கும்போதே தாங்குவதற்கு வலிமை பெற்றவனோ அவன் யோகத்தில் நிலைத்தவன். அவனே சுகபுருஷன்'' அத் V-23.

பெட்ரோல் அல்லது நீராவி எப்படி இயந்திரத்தை இயக்குகிறதோ, அதேபோல் இயற்கையுணர்ச்சிகளும் உத்வேகங்களும் (ஊக்கங்கள்) சரீரத்தை ஊக்குகின்றன. மனிதச் செயல்கள் யாவற்றையும் முக்கியமாக ஊக்குபவை இயற்கையுணர்ச்சிகளே. அவை சரீரத்தை ஒரு தள்ளுத் தள்ளி இந்திரியங்களைச் செயலாற்ற ஊக்குகின்றன. இயற்கையுணர்ச்சிகள் வழக்கங்களை உண்டு பண்ணுகின்றன. இயற்கை உத்வேகங்கள் மனதின் செயல்களை இடைவிடாமல் நடைபெறுவதற்கு ஊக்கும் சக்தியை அளிக்கின்றன. இந்த உத்வேகங்கள் மனோசக்திகளே. அவை மனிதனின் வாழ்க்கையை ஆக்குகின்றன. வாழ்க்கையின் மர்மம் அவற்றில் உளது. இவ்வுத்வேகங்கள் மனதின் மூலமும் அறிவின் மூலமும் செயலாற்றுகின்றன.

எரிபொருளை நிறுத்தினால் நீராவி இயந்திரம் வேலை செய்வதை நிறுத்தி விடும். நீ ஒரு கடிகாரத்திலிருந்து முக்கிய வில் விசையை நீக்கிவிட்டால் கடிகாரம் ஓடாது. மோட்டார் வண்டிக்கும் ஆகாய விமானத்துக்கும் பெட்ரோல் போடாவிட்டால் அவை வேலை செய்யா. இதேபோல் இந்த சரீர அமைப்பிலிருந்து இயற்கை உத்வேகங்களை நீக்கிவிட்டால் இச் சரீரமும் வேலை செய்வது நின்று ஜடமாய் அசைவற்றதாய் ஆய்விடும்.

ஆசைகளை வெல்வதே மனதை வெல்வதாகும், ஏனெனில் மனது ஆசைகளின் மூட்டையேயன்றி வேறில்லை. ஆசைகளை அழிப்பதே மோட்சம். ஆசையற்ற நிலையே உயர்ந்த நிர்விகல்ப சமாதியாகும். சாந்தி, பக்தி, ஞானம் இவற்றிற்கு ஆசை பரம சத்துரு.

நீ ஒரு பொருளை அடைய ஆசை கொண்டால் தான், அப்பொருள் உனக்கு இன்ப மூட்டுகிறது. ஆகவே ஆசையே இன்பங்களுக்குக் காரண பூதம்.

ஸ்திரீ அவளாகவே மனிதனுக்கு அழகாகத் தோன்றுவதில்லை. அவளிடம் மனிதனின் அவாவுக்குத் தக்கபடிதான் அவள் அழகாயிருக்கிறாள். ஆப்பிரிக்க நீக்ரோப் பெண்ணின் முகத்தில்கூட காமவிகாரம் கொண்ட மனிதன்தான் அழகைக் காண்கிறான். ஞானி அல்லது விவேகிக்கு ஸ்திரீயின் பால் கவர்ச்சியாவது ஆசையாவது இல்லை.

கலவிக்குப் பிறகு மனிதனின் காம உணர்ச்சி மிகக் குறைந்த நிலையிலிருக்கும்போது அழகான ஸ்திரீயும் அவன் வரையில் அழகையிழந்து வெறுப்புக்குரியவளாக ஆய்விடுகிறாள். அழகு என்பது மனக் கற்பனை மாத்திரமே. ஒருவனுக்கு அழகாயிருப்பது மற்றொருவனுக்கு அவ்வாறில்லை. மனிதன் எது அழகு என்னும் தன் எண்ணத்தையே வெளிச் செலுத்தி விகாரமான பெண்ணிடம்கூட அழகைக் காண்கிறான். இது குறும்புக்கார மனதின் வேலையே. மனதுதான் சுவர்க்கத்தை நரகமாக்கி நரகத்தைச் சுவர்க்கமாக்குகிறது.

புலன்களை முதலில் கட்டுப்படுத்து. விவேகம், தியானம், ஆத்ம விசாரணை ஆசையற்ற சச்சிதானந்த பிரம்மத்தில் விஸ்ராந்தி ஆகியவற்றால் ஆசைகளை அழி.

தியானம், நிர்விகல்ப சமாதி இவற்றின் மூலம் குணங்கள், இந்திரியங்கள், மனது, அறிவு ஆகியவற்றுக்கு அப்பாற்பட்டதும், எங்கு தூண்டுதல், உத்வேகம் இயற்கையுணர்ச்சி இல்லையோ, கிரியை, அறிவு, அன்பு, ஆசை, வாசனை அல்லது திருஷ்ணை இல்லையோ, எங்கு பரம சாந்தி ஆனந்தம் சந்தோஷம் ஆகியவற்றை நீ அநுபவிக்கிறாயோ, அப்படிப்பட்ட உனக்கு உடன்பிறந்த தெய்வீக மகிமையும் காந்தியும் உள்ள புனித நிலையில் நீ நிலை நிற்பாயாக.

# 4. தூக்கத்தின் தத்துவம்

ஜாக்ரதம், சுவப்னம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளுக்கும் மௌனமான சாட்சியாய் விளங்கும் சச்சிதானந்த பிரம்மத்துக்கு வணக்கங்கள்.

தூக்கமே உயிர் வாழ்க்கைக்குச் சிறந்த அமுதமும் பலவிருத்தி மருந்துமாகும். தூக்கம் களைப்படைந்த மனிதனின் களைப்பையாற்றுவதற்கு இயற்கையளிக்கும் பலவிருத்தி மருந்து. எந்நிலையில் மனது காரணசரீரம் அல்லது மூல அஞ்ஞானத்தில் அமைதியாய் ஓய்வடைந்திருக்கிறதோ அதுவே தூக்கம். அப்போது மனம் தன் காரணத்துள் ஒடுங்கி விடுகிறது. விருத்திகளும் வாசனைகளும் தூக்கமடைகின்றன; அல்லது மறைபடுகின்றன. அது தனது அலுவல்கள் அனைத்தையும் நிறுத்தி விடுகிறது. அலையும் மனது ஓய்வடைகிறது. விருப்பு வெறுப்புகளின் போக்குகள் மூலம் விஷய மார்க்கங்களில் அலைந்து மனது களைப்படையும் போது, அதை அதன் உற்பத்தி ஸ்தானத்தில் ஓய்வடைய வைத்து புது சக்தியையும் அமைதியையும் அது பெறும்படி செய்வது இயற்கையின் முறையாகும். நித்திரையின்போது மனோலயம் அதாவது மனது தன் காரணத்துள் தற்கால சாந்தியாக ஒடுங்கிவிடுதல் ஏற்படுகிறது.

எவ்வாறு ஒரு பருந்து பொழுது விடிந்ததும் ஆகாயத்தில் பறந்து நாள் முழுதும் இரைதேடி இங்கு மங்கும் மேல் மண்டலங்களிலேயே அலைந்து, இரவில் மரத்திலுள்ள தனக்குரிய கூட்டில் பூரண ஓய்வடைகிறதோ, அவ்வாறே ஜீவன் அல்லது ஜீவாத்மா நாள் முழுதும் இந்திரிய விஷயங்கள் கொண்ட அடர்ந்த காட்டில் திரிந்து, இரவில் காரண சரீரமாகிய தனது இருப்பிடத்தை

யடைந்து சுஷுப்தி அல்லது ஆழ்ந்த நித்திரையின் ஆனந்தத்தை அநுபவிக்கிறது.

தூக்கத்தில் ஆழ்ந்த தமஸ் இருக்கிறது. தமஸ் சத்வத்தையும் ரஜஸையும் அடக்கி விடுகிறது. உதானவாயு ஜீவனை விழிப்பு நிலையிலிருந்து இழுத்து ஆனந்தமய கோசம் அல்லது காரண சரீரத்தில் இளைப்பாறும்படி செய்கிறது.

நல்ல அயர்ந்த தூக்கத்துக்குப் பிறகு ஒருவன் களைப்பு தெளிந்து மிக மகிழ்ச்சியடைகிறான். வேலை செய்வதாவது அறிவதாவது இல்லாததால் தூக்கம் தாமஸ நிலை எனப்படுகிறது. தூங்குபவனுக்கு வெளியுலகத்தைப்பற்றி உணர்ச்சியில்லை. அவனுக்குத் தனது ஸ்தூல சரீரத்தைப்பற்றி உணர்வில்லை. அவனுக்குத் தான் தூங்குவதாகக்கூட பிரக்ஞை இல்லை.

ஆனால், தூக்கம், கல் அல்லது மரக்கட்டையின் தாமஸ நிலையல்ல. தூக்கத்தின்போது உள்ளமும் உடலும் மாறுதல் அடைகின்றன. தேகமும், மனதும் நரம்புகளும் புத்துயிர்பெற்று புதுக் கிரியைகள் செய்வதற்கு ஏற்றவைகளாகின்றன. நித்திரையில் மனிதன் மிகுந்த மகிழ்ச்சியையும் இன்பத்தையும் துன்ப நிவர்த்தியையும் அடையப்பெறுகிறான். ஆகவே உடலையும் உள்ளத்தையும் ஆரோக்கியமாக வைத்துக் கொள்வதற்குத் தூக்கம் அவசியம்.

நல்ல தூக்கமின்றி ஒருவன் பூரண ஆரோக்கியத்தை அநுபவிக்க முடியாது. தூக்கம் மூளையையும் நரம்புகளையும் களைப்பாற்றி ஆரோக்கிய மூட்டுகிறது. தூக்கம் களைப்படைந்த நரம்புகளைச் சாந்தப்படுத்தும் தைலம். அது உடல், நரம்புகள், மூளை, மனது ஆகியவற்றிற்கு ஊக்க மூட்டிப் புத்துயிரளிக்கிறது.

ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு அல்லது ஸ்தூல மனோசரீரங்கள் தொடர்ந்து வேலை செய்த பிறகு உள்ளத்துக்கும் உடலுக்கும் ஓய்வு அவசிய மாகிறது.

நோயாளிக்குச் சில சமயங்களில் உடல் வேதனை யினால் தூக்கம் வருவதில்லை. ஆயினும் அவன் தூங்கினால் ஆறுதல் உண்டாகிறது. அவன் தன் துன்பங்களை மறந்து விடுகிறான். அவனது கஷ்டங் கள் யாவும் தூங்கும்போது மறைந்து விடுகின்றன. தூக்கமின்மை நோயை அதிகமாக்குகிறது. அவன் தூக்கமின்மையால் வியாதியின் வேகம் அதிகமாவ தாக உணர்கிறான். தவிர தூக்கமின்மையே ஒரு வியாதி. ஆதலால் மனிதனுக்குத் தூக்கம் இன்றியமையாதது.

வேண்டிய ஓய்வு மனதுக்குக் கிடைத்தவுடன் அது ஜாக்ரத அவஸ்தையின் சம்ஸ்காரங்களின் வேகத்தால் இந்திரிய விஷயங்களுக்கு இழுக்கப் படுகிறது. ஆசை அல்லது ரஜஸின் வேகமே மனிதனைத் தூக்கத்திலிருந்து ஜாக்ரதப் பிரக்ஞைக் குத் திரும்பக் கொண்டுவருகிறது. எப்படி கையின் பலத்தினால் அழுத்தப்பட்ட ஒரு வில்விசை அவ்வழுத்தம் நீங்கினவுடன் பழைய நீளத்தையும் உருவத்தையும் அடைகிறதோ, அப்படியே நல்ல தூக்கத்துக்குப் பிறகு ஒடுங்கியிருந்த எண்ணங்கள் விடுபட்டு மனிதன் தனது ஜாக்ரதப் பிரக்ஞையை மேற்கொள்கிறான்.

தூங்கும் மனிதன் உள்ளபடி விழிப்புணர்ச்சி யின் நிலைக்கு வருவதற்குமுன் சுவப்ன நிலைக்கு வந்து, பிறகு விழிப்புமில்லாமல் சுவப்னமுமில்லா மல் அரைப் பிரக்ஞை நிலையை அடைகிறான். இரவில் நீண்ட நேரம் மனிதன் தந்த்ரமும் ஆலஸ்யமும் அடைகிறான். அயர்ந்த தூக்கத்துக்குக் கனவுகள்கூட இடைஞ்சல்களே. இக்காரணத்தால்

தான் மனிதன் நன்கு திருப்தியடையும் அளவுக்கு நல்ல அயர்ந்த தூக்கத்தை அடைய முடிவதில்லை. ஆழ்ந்த தூக்கத்தின் காலம் மிகச் சொற்பமே. ஆறு மணி நேரம் கனவுகளாலும் தந்த்ரத்தாலும் ஆலஸ்யத்தாலும் தடையுண்ட தூக்கத்தைவிட ஒரு மணி நேர ஆழ்ந்த தூக்கம் ஒரு மனிதனை நன்கு களைப்பாற்றும்.

தூக்கத்தின் காலத்தில் உணவுக்கு முக்கியமான பங்கு உண்டு. ஒரு சாப்பாட்டுராமன் தூங்கு மூஞ்சியாய் காலை 8 மணிக்குப் பிறகும் படுக்கையை விட்டு எழுவதில்லை. அவன் ஆலஸ்யத்தில் (சோம்பலில்) ஆழ்ந்திருக்கிறான். மிதமாக உண்பவன் அதிகாலையில் படுக்கையை விட்டு எழுந்து விடுகிறான். அவன் குறைவான அயர்ந்த தூக்கத்தோடு திருப்தியடைகிறான்.

பிராணிகளும் தூங்குகின்றன. வெவ்வேறு பிராணிகளில் தூங்கும் நேரம் பேதப்படுகிறது. நாய்கள் குறைந்த நேரம் தூங்குகின்றன. அவற்றின் தூக்கமும் கலைகிறது. மீன் தூங்குவதேயில்லை.

மனசாந்தி, கவலை, பயம், விசாரம் வாழ்க்கையின் பொறுப்புகள் ஆகிய இன்மை, நோயின்மை ஆகியவை அயர்ந்த சுவப்னமற்ற நித்திரையை உண்டாக்குகின்றன. இளைப்பாறும் கலையை உணர்ந்தவன் படுக்கையில் சாய்ந்தவுடனேயே தூங்கிவிடுகிறான். இரவில் இலேசான ஆகாரத்தை உட்கொள். பாலையும் பழங்களையும் சாப்பிடு. இரவில் சோற்றையுண்ணாதே. பிராணாயாமத்தைப் பயில். உனது ஆரோக்கியத்துக்குக் கெடுதி ஏதுமின்றி நீ நித்திரை நேரத்தைக் குறைத்துக் கொள்ளலாம்.

அஸ்தீகர், கபிலமுனி, அகஸ்தியர், மாதவர், முசுகுந்தர் ஆகியோர் ஆனந்தமாக நித்திரை செய்

தவர்கள். நீ அவர்களை ஸ்மரித்துப் படுக்கைக்குப் போகுமுன் அவர்கள் பெயர்களைக் கூறினால் நீ அயர்ந்த தூக்கத்தை அடைவாய். (அகஸ்திர் மாதவஸ் சைவ முசுகுந்தோ மஹாபல: கபிலோ முனி ரஸ்தீக: பஞ்சைதே ஸுகசாயிந:)

நீ நல்ல தூக்கத்தை யடைந்தால், தூக்க நேரத்தைக் குறைத்து உபயோகமுள்ள வேலையைச் செய்யலாம். நீ உன் தூக்கத்தைக் குறைத்துக் கொள்ள முடிந்தால் உன் சாதனத்தில் அதிக நேரம் ஈடுபடலாம். தூக்கத்தில் இரண்டு மணி நேரத்தை நீ குறைக்கக் கூடுமானால் அந்நேரத்தை ஜபத்துக்கும் தியானத்துக்கும் பயன்படுத்து. சுவப்னங்கள் நிறைந்த எட்டு அல்லது பத்து மணி நேரம் நித்திரையைவிட ஆறு மணி நேரம் அயர்ந்து தூங்குவதே மேல்.

தூக்கத்தை வென்றவர்களும் உண்டு. அவர்கள் குடாகேசர்கள் எனப்படுவர். அர்ச்சுனனும் லக்ஷ்மணனும் குடாகேசர்கள். நெப்போலியன் போனபார்ட் தூக்கத்தைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தான். பெரிய போர்க்களத்தில்கூட அவன் நன்றாகத் தூங்குவது வழக்கம். அவன் கணக்காகக் குறிப்பிட்ட நேரம் தூங்கக் கூடும். அவன் ஐந்து அல்லது பத்து நிமிஷங்கள் அயர்ந்து தூங்கினவுடன் மேல்கொண்டு வேலை செய்யத் தயாராய் விடுவான்.

மகாத்மா காந்தியும் தூக்கத்தைக் கட்டுப்படுத்த வல்லவர். அவர் சுவப்னங்களின்றி நன்றாக அயர்ந்து தூங்குவார். அவர் மிகக் குறைந்த நேரமே தூங்குவார். அவர் குறித்த நேரத்தில் எழுந்து தமது தினசரி அலுவல்களைக் கவனிப்பார்.

உடலால் உழைக்கும் பாட்டாளி ஆபீஸில் அலுவல் பார்க்கும் பாபுவைவிட நன்றாக நித்திரை

செய்கிறான். ஏனெனில் பாட்டாளியின் உள்ளமும் உடலும் களைப்படைகின்றன. பாபுவின் விஷயத்தில் அவ்வாறில்லை. தேகக்களைப்பு மனத்துக்கும் களைப்பை உண்டு பண்ணுகிறது. உடலுழைப்பு குறைவாயும் மனோவேலை அதிகமாயும் உள்ளவனுக்குத் தூக்கம் குறைவாயிருக்கும். சிலருக்கு ஸ்தூல தேகத்தைப்போல் அவ்வளவு சுலபமாக மனது களைப்படைவதில்லை. நாள் முழுதும் உழைக்கும் கூலிக்காரனுக்கு அதிக நேரம் ஓய்வு வேண்டியுளது. அவன் அயர்ந்து தூங்குகிறான்.

நீ கனவு காணும்போது மனதுக்கு ஓய்வில்லாமல் போகிறது. மனது ஜாக்ரத அவஸ்தையின் அநுபவங்களைச் சேர்ந்த பல்வேறு கற்பனைக் கருத்துகளோடு விளையாடிக்கொண்டே இருக்கிறது. ஆகவே நீ தூக்கத்தில் பூரண ஓய்வை அநுபவிக்க விரும்பினால், கனவுகளை ஒழிப்பது முக்கியம். நீ கனவுகளை விலக்க விரும்பினால், கவலைகள், சிந்தனைகள், சஞ்சலங்கள் இன்றி பகவத் பக்தி பொங்கி வழியும் மனது அவசியம்.

மனது எதேச்சையான யோசனைகளில் ஈடுபட்டிருக்கும்போது அது சீக்கிரம் களைப்படைவதில்லை. அது ஆகாயக் கோட்டைகளைக் கட்டுகிறது. ஏகாக்கிர மனது சீக்கிரம் களைப்படைகிறது. கடினவேலை செய்யும் உடல் சீக்கிரம் களைப்படைகிறது. தூக்கத்தில் மனதே முக்கிய கர்த்தா. உள்ளம் உடல் இரண்டுக்கும் தூக்கம் தேவை. உடல் களைப்படைந்தாலும், உள்ளம் தூக்கத்துக்குத் தயாராயில்லா விட்டால் தூக்கம் வருவதில்லை.

விழிப்பு நிலையில் மனது எப்போதும் உடலைச் சுற்றி உழன்று கொண்டிருக்கிறது. தூக்கத்தில் அது உடலுணர்வுக்கு மேல் எழுகிறது. இது தூக்கத்திலும் சமாதியிலும் பொது.

நாம் தூங்கச் செல்லும்போது நம் வரையில் முதல் முயற்சி உடலை நீட்டிப் படுப்பதே. பிறகு கண்களை மூடிக்கொள்கிறோம். நாம் தூக்கத்தினால் ஆட்கொள்ளப்படும்போது படிப்படியாக சப்தங்கள் மறைகின்றன. மனது உள்நோக்கிச் செல்கிறது. முதல் நிலையில் சப்தங்கள் கேட்பதோடு அடுத்த அறையில் நடக்கும் பேச்சையும் நாம் உணர முடிகிறது. பிறகு சப்தங்கள் கேட்டாலும் அவற்றின் அர்த்தம் விளங்குவதில்லை. பின்பு சிறிது சிறிதாக சப்தங்களும் மறைந்து நாம் தேகப் பிரக்ஞைக்கும் வெளியுலகுக்கும் மேல் செல்லுகிறோம். இதே முறையில் மனது அரைப் பிரக்ஞை நிலையை அடைந்து பிறகு விழிப்பு நிலையை அடைகிறது.

மனது தேகத்தின் சுகானுபவங்களில் ஈடுபட்டிருக்கும் வரையில் தூக்கம் வராது. அதனால் தான் நோயாளிக்குத் தூக்கம் வருவதில்லை. நோய் அவன் மனதை தேகத்தைப்பற்றி அதிகமாகச் சிந்திக்கும்படி செய்கிறது. தேக வலியின் உணர்ச்சி எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு தூக்கம் குறைகிறது. ஆனால் நோய் விட்டு விட்டு இருந்தால் இடைநேரத்தில் நோயாளி தூங்குகிறான்.

பிரக்ஞையை முழுதும் இழந்து தேகம் பூரணமாகத் தளர்ந்து கொடுப்பதே தூக்கத்தின் குண விசேஷம். ஒரு மனிதன் தூங்கும்போது உடல் உள்ளம் இரண்டும் பூரண விஸ்ராந்தியைப் பெறுகின்றன. மனது இருதயத்தில் உள்ள ஹிதநாடியில் தங்கி ஆத்மானந்தத்தை அநுபவிக்கிறது. பல்வேறு தொழில்களினால் இழந்த சக்தி மீண்டும் அடையப் படுகிறது. அதனால் தூக்கம் அவசியமானது. தூக்கம் இல்லாவிட்டால் நரம்புகள் பலமிழந்து

வெவ்வேறு உறுப்புகளும் பலவீனமாகி சீக்கிரம் க்ஷீணம் ஏற்படுகிறது.

தொந்தரவான சப்தங்கள் இன்மையால் இரவுத் தூக்கம் நன்கு களைப்பாற்ற வல்லது. அதோடு பகல் வேலையினால் மனது அலுத்து இருக்கிறது. இரவே தூக்கத்துக்கு இயற்கையான காலம். பகல் வேலைக்கு ஏற்பட்டது. இயற்கையின் விதிகளுடன் ஒத்திருக்கும்போது நாம் சந்தோஷமாயும் ஆரோக்கியமாயும் இருக்கிறோம். இயற்கை விதிகளை மீறினால் தீமைகளே விளைகின்றன.

ஒரு இளைஞனைவிட ஒரு குழந்தை அதிகநேரம் தூங்குகிறது. வயது ஏறஏற தூக்கம் குறைகிறது. இதற்குக் காரணம் தேக உறுப்புகள் நன்றாக வேலை செய்யாமையே.

நீ உட்கார்ந்திருக்கும்போது உன்னை மிஞ்சித் தூக்கம் வந்தால் தேகம் கீழே சாய்கிறது. அது கீழே தள்ளப்படுகிறது. தலை மேலும் கீழும் ஆடுகிறது. இது ஏனென்றால் மனது வேலை செய்யாததால் தசைகள் ஒத்துழைக்கவில்லை. மனது ஸ்தூல சரீரத்துடன் தன் தொடர்பை நீக்கிக் கொள்கிறது. இதனால் சரீரம் கீழே விழுகிறது.

ஒவ்வொருவனுக்கும் தன் ஆத்மாவினிடம் மிகுந்த அன்பு உளது. தூங்கும்போது ஒருவன் உணர்வற்று இருக்கிறான். தூங்கும்போது ஜீவன் ஊர்வனவற்றாலும் வேறு பூச்சிகளாலும் கெடுதி நேரும் என்று எண்ணுகிறான். அதனால்தான் அபாயமில்லாத பாதுகாப்பான இடத்தைத் தேடிக் கொள்கிறான். சந்தோஷமே உருவான தூக்கத்துக்குக்கூட அவன் நல்ல இடம், மிருதுவான படுக்கை முதலிய நல்ல சூழ்நிலைகளை விரும்புகிறான். பகவானின் மாயை இரகஸ்யமானது.

உலகமாவது உடலாவது இல்லாததும், ஜாக்ரத சுவப்ன சுஷுப்தி இல்லாததும் மூன்று அவஸ்தைகளையும் கடந்ததுமான துரிய நிலை அல்லது நான்காவது நிலையாகிய தூங்காத தூக்கத்தையடைந்து நீங்கள் யாவரும் விஸ்ராந்தி அடைவீர்களாக!

---

## 5. அமுதத் துளிகள்

### I

நண்பர்காள்! யாருடைய துக்கத்துக்கோ அல்லது யாருடைய சந்தோஷத்துக்கோ யார் காரணம்? முன்ஜென்மத்தில் தான் தான் செய்த கர்மாவே துக்கத்துக்கும் சந்தோஷத்துக்கும் காரணமாயுளது. துன்பத்தை அல்லது இன்பத்தை அளிப்பவர் யாருமில்லை. ஒருவன் இன்னொருவனுக் குத் துன்பம் விளைவிக்கிறான் என்று மூடன்தான் அபிப்பிராயப்படுவான். ''நான் செய்பவன்''— இது பயனற்ற தவறான எண்ணமாகும். உலகம் முன் கர்மாவாகிய கயிற்றால் பிணைக்கப் பட்டிருக்கிறது.

உனது கர்மாவின் பலனாகவே உனக்கு இன்பமும் துன்பமும் ஏற்படுகின்றன. ஆகவே வருவதை ஏற்றுக்கொள். அதைத் தியாக உணர்ச்சியுடன் சகித்துச் சந்தோஷமாயிரு.

எந்த இடத்தில் அல்லது காலத்தில் அல்லது எந்தக்காரணத்தால் நீ செயலாற்றினாயோ, நல்லதோ கெட்டதோ, அச் செயலின் பலனை நீ அநுபவித்தாக வேண்டும்.

நல்வினை தீவினைகளின் விளைவான உனது சரீரம் இன்ப துன்பத்துக்கு உட்பட்டது. உடலுடன்

ஒன்றியிருப்பதன் காரணமாக நீ இன்ப துன்பங்களுக்குக் கட்டுப்பட்டிருக்கிறாய். இன்பத்தைத் தொடர்ந்து துன்பமும் துன்பத்தைத் தொடர்ந்து இன்பமும் வருகின்றன. பகல் இரவைப்போல் இவை இரண்டும் சரீரம் தரித்த பிராணிகளால் தடுக்க இயலாதவை. துன்பத்தின் மத்தியில் இன்பமும் இன்பத்தின் மத்தியில் துன்பமும் உள்ளன. மண்ணும் நீரும்போல் இரண்டும் ஒன்றுக்கொன்று ஒட்டியிருக்கின்றன என்று கூறப்படுகிறது.

அதனால்தான் அறிஞர்கள் இன்பகாலத்தில் சந்தோஷத்தையும் துன்பகாலத்தில் துக்கத்தையும் பாராட்டுவதில்லை. அவர்கள் இன்ப துன்பம், சந்தோஷம், துக்கம், உல்லாஸம் துயரம் ஆகியவற்றில் அசட்டையாயிருக்கிறார்கள். யாவும் மாயை என்றறிந்து அவர்கள் மயங்குவதில்லை.

## II

இறந்தவர்கள் பொருட்டு துக்கப்படாதே. ஆத்மா நித்தியமானது, மாறுதலற்றது, ஜனன மரணமற்றது, புனிதமானது. உடல் உணர்வற்றது, மரணத்துக்குட்பட்டது, அசுத்தமானது அழிவுள்ளது. இவ்வாறு யோசிப்பின் துயரத்துக்குக் காரணமேயில்லை. தந்தையோ மகனோ மரணமடைந்தால், மூடர்கள்தான் துக்கப்படுவார்கள். சாரமற்ற உலகத்தில், ஆசைப்பட்ட வஸ்துவிலிருந்து பிரிவதே அறிஞர்களுக்குப் பற்றுதலின்மையை உண்டாக்கும் 'காரணமாகவும், அமைதியையும் ஆனந்தத்தையும் அளிக்கத் தக்கதாயும் உளது. உலகத்தில் பிறந்த ஒவ்வொருவரும் இறப்பதால் எல்லா ஜீவர்களுக்கும் மரணம் தவிர்க்கமுடியாதது. தேகம் அழிகிறது, ஆத்மா நித்தியமாயுளது. முக்கியத்தில் மனிதன் அழிவற்ற ஆத்மனே. ஆகவே துக்கிப்பது எதன் பொருட்டு?

தேகமெடுத்த பிராணிகள் தோன்றுவதும் மறைவதும் தங்கள் பழவினையாலேயே. இதை அறிந்த, விவேகமற்றவன் இறந்துவிட்ட பந்துக்களுக்காகத் துயருறுவானேன்?

கோடிக்கணக்கான பிரம்மாண்டங்கள் மறைந்துவிட்டன. கணக்கற்ற சிருஷ்டி கல்பங்கள் சென்றுவிட்டன. சமுத்திரங்கள் வற்றிவிட்டன. க்ஷணவாழ்வை நீ எப்படி நம்ப முடியும்? காற்றினால் அலைக்கப்பட்ட இலையில் ஒட்டியிருக்கும் நீர்த்துளியைப்போல், மனிதனது வாழ்க்கை நிலையற்றது. யாக்கை நீர்க்குமிழிபோன்றது. அதை நீ எவ்வாறு நம்பலாகும்?

முன்ஜென்மங்களில் நீ செய்த வினைகளினால் நீ இச்சரீரத்தை அடைந்திருக்கிறாய். இந்த ஜென்மத்தில் நீ இந்தச் சரீரத்தின்மூலம் செய்யும் கர்மங்களால் நீ இன்னொரு தேகத்தைப் பெறுவாய். ஒருவன் பழைய வீட்டை விட்டுப் புதுவீட்டில் குடிபுகுவதுபோல், நீ பழைய சரீரத்தை விட்டுப் புதிய சரீரத்தில் புகுகிறாய். ஆத்மா ஒருபோதும் இறப்பதில்லை, பிறப்பதில்லை, பெருகுவதுமில்லை, குறுகுவதுமில்லை, க்ஷீணிப்பதுமில்லை, மாறுதலடைவது மில்லை.

பரமாத்மா எப்போதும் ஏகரஸமானது. அது மாறுதலற்றது. அது எல்லையற்றது. அது ஆனந்தமும் அறிவும் உருக்கொண்டது. அது புத்தியின் மௌனமான சாட்சி. அது இரண்டாவதற்றது, சுயம் ஜ்யோதியானது, நித்தியமானது, சர்வவியாபியானது. அதை இவ்வாறானதென்று உறுதியான நம்பிக்கையோடு, துக்கத்தைவிட்டு ஆனந்தமாய் சஞ்சரி.

## III

தேகமே ஆத்மா என்னும் எண்ணமுள்ளவனுக்கே துயரம் உண்டு, ஆனந்தமயமான ஆத்மாவோடு தன்னை ஒன்றென்றுணர்ந்துள்ள ஞானிக்கல்ல. ஆழ்ந்த நித்திரையில் ஆனந்தமே உளது. ஏனெனில் அங்கு இரண்டாவது இல்லை. புத்தியும் மற்றவைகளும் இல்லாததால் புனித ஆத்மாவில் துக்கமென்பதே யில்லை. ஆகவே துயரம் அதுபோன்றவைகளுக்கும் புத்தியே காரணம்; ஆத்மாவல்ல. இதில் ஐயமேயில்லை.

சரீரம், மனது, புத்தி, பிராணன் ஆகியவற்றினின்று வேறான இந்த ஆத்மா மாறுதலில்லாதது. அசைவில்லாதது. அது எப்போதும் நிறைந்தது. மூன்று சரீரங்களும் பஞ்ச கோசங்களும் அஞ்ஞானத்தின் விளைவுகள். பிரம்மத்தின் மயக்கும் சக்தியாகிய மாயை, இவ்வுலகத்தை உண்டு பண்ணுகிறது. இந்த அறிவுக்கு எட்டாத விவரிக்க முடியாத மாயை எவ்வளவு அதிசயமானது! இம்மாயை தவறுதலினால்தான் விருத்தியடைகிறது. அது புத்திக்கு எதிரானது. நீ ஆத்மானந்தத்தை அடையும்போது அது மறைந்து விடுகிறது.

சித்தத்தில் பிரதிபிம்பித்திருக்கும் புத்தியே ஜீவன் அல்லது தேஹியான ஆத்மா எனப்படுகிறது. சரீரத்திலும், மனத்திலும், பிராணன்களிலும் புத்தியிலும் ஏனையவற்றிலும் ''நான்'' என்னும் எண்ணம் இருக்கும்வரையில், கர்மாவும் அதன் பலனை அநுபவிப்பதும், இன்ப துன்பங்களை அடைவதும் ஆகிய எண்ணம் இருந்துகொண்டிருக்கும்.

உத்தமமான ஆத்மா உண்மையில் பிறப்பதில்லை. ஆதியில்லாத அவித்யை அல்லது அறியாமையின் செயல் மூலம் ஜீவன் அல்லது ஜீவாத்மா செயலாற்றும் புத்தியோடு சம்பந்தப்படுவதாகத்

தோன்றுகிறது. இதனுல் உலகத்தின்போக்கு நடைபெறுகிறது. ஞானத்தின் மூலம் புத்திக்கும் ஆத்மாவுக்கும் உள்ள வேற்றுமையை ஒருவன் உணரும்போது உலகத்தின்போக்கு நின்று விடுகிறது.

புத்தியும் ஜடம் அல்லது அசேதனம். அது தனது அறிவையும் சக்தியையும் உத்தம ஆத்மாவுடன் சேர்ந்திருப்பதன் மூலம் இரவலாகப் பெறு கிறது. இதேபோல் அறிவே தன் மயமான உத்தம ஆத்மா, அறிவற்ற புத்தியோடு தொடர்பினுல் தான் அறிவற்றதுபோல் தோன்றுகிறது.

சாதகன் ஞானிகளின் சத்சங்கத்தை நாட வேண்டும். அவன் நல்லோர்களின் சேர்க்கையால் அடையும் பக்தியின் மூலம் பகவானை ஆராதிக்க வேண்டும். அப்போதுதான் மாயை சிறிது சிறிதாக ஒடுங்கும். பின்பு அவன் ஞானியான குருவை அணுகி ''தத் த்வம் அஸி'' (நீ அதுவாக இருக் கிருய்) என்னும் வாக்கியார்த்தத்தை உணருதல் வேண்டும். அப்போது அவன் பகவத் கிருபையால் முக்தியடைகிருன். ஆதலால் அவன் பகவானின் பாத கமலங்களில் பாராமுகமாயிருந்தால், கோடி கல்பங்களில்கூட அவனுக்கு மோட்சமாவது, ஞான மாவது சந்தோஷமாவது கிடைக்கும் நம்பிக்கை யில்லை.

செளகரியமான ஆஸனத்தில் அமைதியான இடத்தில் அமர். எல்லாப் பற்றுதல்களையும் இந்திரிய விஷயங்களையும் மனத்திலிருந்து நீக்கு. வெளியில் அலையும் உனது புலன்களை சிறிது சிறிதாக உள்ளுக்கிழுத்துக் கொள்.

பிரகிருதியினின்று வேருனதாக உன் ஆத்மா மீது சிந்தனை செய். அசையும் பொருளும் அசை யாப் பொருளும்கொண்ட இவ்வுலகம் அனைத்தும், தேகம், புத்தி, மற்றவை, பார்க்கும் கேட்கும் யாவும்

ஆகியவை பிரகிருதி எனப்படுகிறது. அது மாயை யென்றும் கூறப்படும். இவ்வுலகத்தின் படைப்பு, காப்பு அழிவுக்கு அது காரணமாயுளது. அது எப்போதும் சிவப்பும் (ராஜஸமான), வெண்மையும் (சாத்வீகமான), கருப்பு (தாமஸமான) மான பிராணிகளைப் படைக்கிறது.

ஆசையும், கோபமும் மற்றவையும் அதன் குமாரர்கள். ஹிம்ஸை (கெடுதி), வஸ்துக்களில் வேட்கை (திருஷ்ணை) ஆகியவை அதன் குமாரத்திகள். உண்மையில் கர்த்தாவுமல்லாத போக்தாவுமல்லாத எப்போதும் புனிதமான ஆத்மா மீது கர்த்தா போக்தா என்ற எண்ணத்தை ஆரோபித்தலே உள்ளபடி மனிதரின் துன்பங்களுக்குக் காரணம். அவித்யை அல்லது அறியாமையின் விளையாட்டே இதற்குக் காரணம்.

மனதை உட்புறம் திருப்பு. எல்லா உயிர்களிலும் உள்ள ஒரே ஆத்மாவை உணர்ந்து ஆனந்தமாயிரு. நீ பிரகிருதியின் பிடிப்பிலிருந்து விடுபடுவாய்.

க்ஷண நேரத்தில் அழியக்கூடிய இவ்வுலகத்தில், அசேதனமானதும், அகங்காரத்துக்கு உறைவிடமாயும் அசுத்தங்களும், சதை, எலும்புகள் துர்நாற்றங்கள் ஆகியவை நிறைந்ததும், பஞ்சபூதங்களாலும் இருபத்தைந்து தத்வங்களாலும் ஆக்கப்பட்டதும், கண் இமைக்கும் நேரத்தில் அழியக்கூடியதுமான இந்தச் சரீரத்தில் நீ என்ன நம்பிக்கை வைக்க இயலும்? நீ தேகத்தினின்று வேறாகவுள்ளாய். நீ மிகவும் அன்பு கொண்டிருக்கும் தேகம் இங்கே மண்மீது விழும். இன்ப துன்பங்களுக்குக் காரணமான தகுதியும் தகுதியின்மையும் ஜீவாத்மாவோடு செல்கின்றன. அவை அவன் சரீரத்தில் புகும்போது அவனோடு ஒட்டிக்கொண்டு

இன்ப துன்பத்தை உண்டாக்குகின்றன. அவை ஆத்மாவில் அவற்றை உண்டாக்கவில்லை.

தன்னிடம் ''நான் சரீரம். நான் செயல் செய்பவன்'' என்னும் எண்ணம் இருக்கும் வரையில், ஆத்மாவின் குணங்களை சரீரத்தின் மீது ஆரோபிப்பதன் மூலம் இந்த எண்ணத்துடன் தான் பற்றிக் கொண்டிருக்கும் வரையில், அவனுக்கு ஜனன மரணத்துக்குச் சாத்தியம் இருந்து கொண்டிருக்கும்.

ஆதலின் தேகத்திலும் மற்றவற்றிலும் "நான்" என்னும் எண்ணம் அனைத்தையும் நிவர்த்தி செய். ஆத்மன் மிகப் புனிதமானதும், கறையற்றதும், அழிவற்றதும் புத்தியின் இயல்பே தானாகவும் உளது. சகல விதமான பற்றுதல்களையும் ஒழித்து விடு. தேகத்தோடு ஒன்றிக்கொள்வதை ஒழி. புனித ஆத்மாவோடு உன்னை ஒன்றுபடுத்திக்கொண்டு அமரத்துவத்தையும் நித்தியானந்தத்தையும் அடைவாய்.

---

### அநுபந்தம்

## 1. ரிபு கீதை

### I

பிரம்மாவுக்கு ரிபு என்னும் பெயருள்ள ஒரு புதல்வர் இருந்தார். தமது இயல்பிலேயே ரிபு சிறந்த பிரம்ம ஞானத்தைப் பெற்றிருந்தார். மகரிஷி புலஸ்தியரின் புதல்வராகிய நிடகர் ரிபுவின் சிஷ்யர். நிடகரின் நற்குணங்களால் சந்தோஷித்து, ரிபு தம் மாணவருக்குப் பூரணமாக பிரம்ம ஞானத்தை உபதேசித்தார். தமது சிஷ்யர் வேதங்கள் அனைத்திலும் தேர்ச்சியுடையவராயினும்

பிரம்ம ஞானத்தில் நிலைத்திருக்கவில்லையென்பதை ரிபு உணர்ந்தார். ஏனெனில் பிரபஞ்சத்தின் பல்வேறு பொருள்களிலும் உள்ள ஒரே உண்மையை அவர் உணர முடியவில்லை.

நிடகர் தேவிகா நதியின் கரையிலுள்ள வீர நகரில் குடியேறி உண்மையான கிரகஸ்தனது கடமைகளை எப்போதும் மனதிற்கொண்டு இலட்சிய வாழ்க்கையை நடத்தலானார். வெகு காலம் கழிந்த பின், தமது சிஷ்யர் நிடகரைப் பார்க்கும்பொருட்டு ரிபு வீர நகருக்குச் சென்றார். நிடகர் தமது தினசரி யக்ஞங்களைச் செவ்வனே செய்து முடித்த பிறகு அதிதியை எதிர்பார்த்து வாயிலில் நின்று கொண்டிருந்தார். அவர் ரிபுவை அன்பாக வரவேற்று அவரை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். நிடகர் அச் சிறந்த அதிதியை முறைப்படி உபசரித்து வணக்கமாக அவரை உணவுகொள்ள வேண்டினார்.

''ஏ பிராம்மணா: இன்று எவ்வகையான உணவு படைக்கப்போகிறாய் என்று சொல். எனக்குப் பரிசுத்தமல்லாத உணவு கூடாது'' என்றார் ரிபு. ''என் வீட்டில் கோதுமைமாவு, சோளம், கனி, கிழங்குகள், ரொட்டி ஆகியவை இருக்கின்றன. இவற்றில் உங்களுக்குப் பிடித்ததை நான் சந்தோஷமாகப் படைக்கிறேன்'' என்று நிடகர் கூறினார்.

''இந்தப் பயனற்ற உணவு வகைகள் எனக்கு வேண்டாம். எனக்கு நல்ல இனிப்புப் பண்டங்கள், பால், பொங்கல், தயிர், வெல்லப்பாகு மற்றும் ருசியான பொருள்கள் இவற்றை அளிப்பாயாக'' என்று ரிபு கூறினார்.

உடனே நிடகர் தமது மனைவியிடம், ''யஜமானியே, வீட்டில் உள்ள சிறந்த பொருள்களைக் கொண்டு இன்று வந்துள்ள அதிதிக்குச் சுவையான உணவைச் சமை'' என்றார். தனது

கணவரிஷ்டப்படி, நிடகரின் மனைவி உணவைச் சமைத்து ரிபுவுக்குச் சம்பிரமமாகப் படைத்தாள். ரிபு உணவை முடித்துக்கொண்டவுடன் நிடகர் ''எனது போற்றுதற்குரிய அதிதியே, உணவு நன்றாக இருந்ததா? உமக்குத் திருப்திதானா? நீர் எங்கு உள்ளவர்? இப்போது எங்கு போய்க் கொண்டிருக்கிறீர்? எங்கிருந்து வருகிறீர்'' என்று வினவலானார்.

''பசித்தவருக்கல்லவா நல்ல உணவை உண்டதால் திருப்தி உண்டாகும். எனக்குப் பசியே யில்லையே என்னை ஏன் இந்தக் கேள்வி கேட்கிறாய்? ஜாடாரக்னி இடைவிடாமல் வேலை செய்வதால் ஜீரணக் கருவிகள் களைப்படையும்போது மனிதனுக்குப் பசியுண்டாகிறது. தேகத்தில் நீர் குறைந்தவுடன் தாகமுண்டாகிறது. பசி தாகங்கள் தேக தர்மங்களே யன்றி என்னுடையவை யல்ல. எனக்குப் பசி என்பதே இல்லாததால் நான் எப்போதும் திருப்தியா யிருக்கிறேன். சந்தோஷமும் திருப்தியும் மனதின் அலுவல்கள். நான் மனமுமல்ல. இவ் விஷயங்களைப்பற்றி திருப்தி, சந்தோஷம் முதலிய தர்மங்கள் எவற்றிற்குரியனவோ அவைகளைக் கேட்பாயாக'' என்று ரிபு பதிலளித்தார்.

மேலும் ''நீர் எங்கிருப்பவர்? எங்கு போகிறீர்? எங்கிருந்து வருகிறீர்'' என்ற மற்றக் கேள்விகளைப் பற்றியும் நான் கூறுவதைக் கேள். ஆகாசத்தைப் போல் ஆத்மா அல்லது தான் எங்கும் வியாபித்தது. ஆகவே இக்கேள்விகள் யாவும் அதைக் குறிப்பன வல்ல. கேள்விகளே அடிப்படையில்லாதவை. நான் எங்கும் செல்வதில்லை. நான் எந்த இடத்திலிருந்தும் வரவில்லை. நான் எந்த இடத்திலும் நிலைத்து இருப்பதில்லை. ''நான்'', ''அவன்'' ''நீ'' ஆகிய இந்த வேற்றுமைகள் வெவ்வேறு சரீரங்களைப்

பற்றியவையே யன்றி உண்மையல்ல. உண்மை என்னவெனில் 'நீ' நீ அல்ல. 'நான்' நானல்ல 'அவனும்' ஏனைய இருவரிலிருந்து வேருனவன் அல்ல.

இனிப்புப் பொருள் எப்போதும் இனிப்பா யிருப்பதில்லை. உன்னை நான் இனிப்பான அன்னம் முதலியவற்றைக் கேட்டபோது, நீ என்ன செய் வாய் என்பதை அறிவதே என் எண்ணம். உண்மை யாகப் பசியுள்ளவனுக்கு யாவும் சுவையானவையே. ஒருசமயத்தில் ருசியாயிருக்கும் அதே உணவு அடுத்த நிமிஷம் வேறுவிதமாக மாறுகிறது. வயிருர உண்டபிறகு மிக ருசிகரமான உணவுகூட வெறுப்புத் தட்டுகிறது. இவ்வாறு ருசிகரமான உணவுகூட ருசியில்லாமலும் ருசியில்லாதது ருசிகர மாகவும் ஆகின்றன. தவிர, ஆரம்பத்திலும், மத்தியிலும் அந்தத்திலும் ஒரேமாதிரி ருசிகரமாக உண்ண உணவு உண்டா? மண்ணுல் ஆக்கப்பட்ட இந்த ஸ்தூல சரீரம் உண்மையில் மண் துணுக்கை களாலான உணவாலேயே காக்கப்படுகிறது. களிமண்ணுல் கட்டப்பட்ட சுவருக்கு அவ்வப் போது களிமண்ணுலேயே பூச்சுவேலை செய்து பலப் படுத்துவதுபோல், இந்த உடல் நாம் உண்ணும் உணவு அணுக்களாலே ஆரோக்கியமாகவும் பலமுள்ளதாகவும் இருக்கிறது. வால்கோதுமை, கோதுமை, பயத்தம்பருப்பு, எண்ணெய், பால், தயிர், சர்க்கரை, பழங்கள் முதலிய யாவும் மண் அணுக்களே. அப்படியாஞல் இவற்றில் எதை ருசிகரமானது என்றும் எதை ருசியற்றதென்றும் கூறுவது? இவ்வாறு உணர்ந்து உனது வேறு படுத்தும் மனத்தை அறிவுறுத்தி யாவற்றிஞூடும் உள்ள ஏகமான பொருளைக் காணமுயன்று சாந்தியுடையவஞகவேண்டும். மோட்சத்தை யடைவதற்கு அமைதியே மிக முக்கியமான

''யோக்கியதை'' என்று அவர் உரைத்து முடித்தார்.

இந்த ஞான மொழிகளைக்கேட்டு நிடகர் ரிபுவுக்கு நமஸ்காரம் செய்து வணக்கமாக, ''மகாத்மாவே, அடியேனிடம் அருள் கூறுங்கள். நீங்கள் யார் என்பதைத் தெரிவியுங்கள். எனக்கு மெய்யறிவு அருள்வதற்கே, தாங்கள் எழுந்தருளியுள்ளீர்கள் என்று நான் நினைக்கிறேன். தங்களது ஆத்மாவை உயர்த்தும் பேச்சைக்கேட்டு நான் எல்லா பிரமைகளிலிருந்தும் விடுபட்டேன்'' என்றார்.

''ஓ பிராம்மணா! நான் உனது குருவான ரிபு. நீ உண்மையில்லாததிலிருந்து உண்மையை வேறுபடுத்தி உணரும் பொருட்டு உனக்கு ஆத்ம ஞானத்தைப் புகட்டவே நான் இங்கு வந்தேன். நான் இப்போது விடைபெற்றுக் கொள்கிறேன். எது உண்மையானதோ, அறியத்தக்கதோ, அதை நான் உனக்கு ஏற்கனவே கூறிவிட்டேன். இவ்வுண்மைகளை எப்போதும் தியானித்து ஒரே வாசுதேவனால் உள்ளூர வியாபிக்கப்பட்ட உலகத்தைக் காண்பாயாக. அதில் ஒரு அணுவளவு வேற்றுமையாவது துவைதமாவது இல்லை'' என்று பதில் கூறினார்.

நிடகர் அவருக்குத் தக்க மரியாதை செலுத்தி, குருவை வழிபட்டு தமது குருவின் உண்மை உபதேசப்படி நடந்து இன்பமாக வாழ்ந்திருந்தார்.

## II

பல ஆண்டுகள் சென்ற பிறகு நிடகருக்கு மறுபடி ஆத்ம ஞானத்தைப் போதிக்கும் நோக்கத்துடன் மகரிஷி ரிபுவானவர் வீரநகரை யடைந்தார். அவர் நகரை அணுகியபோது அந்நாட்டின்

மன்னன் பெரிய கூட்டமான தன் பரிவாரத்துடன் நகரப் பிரவேசம் போவதைப் பார்த்தார். ஒவ்வொரு மூலை முடுக்கிலும் ஜனக் கூட்டம் நிறைந்து அரசனை வரவேற்பதை அவர் கண்டார். கூட்டங்களிலிருந்து விலகித் தொலைவில் ஒரு தனி இடத்தில் தமது கைகளில் தர்ப்பை சமித்துடன் நிடகர் நிற்பதை அவர் பார்த்தார். நிடகர் பசி தாகத்தால் வருந்தினுர். ஆயினும் வழியை, பெருங் கூட்டமாக மனிதர்கள் அடைத்துக் கொண்டிருந்ததால் அவரால் தம் வீட்டை நோக்கிச் செல்ல முடியவில்லை.

ரிபு நிடகருக்கு அருகில் சென்று ''பிராமணரே: ஏன் இங்கே தனியாக மூலையில் ஒண்டியாக நின்று கொண்டிருக்கிறீர்?'' என்று கேட்டார். நிடகர் ''இன்று இந்நாட்டு அரசன் இங்கே வந்திருக்கிறுன், அவனுடன் பெருங்கூட்டம் வந்திருக்கிறது. நான் கூட்டத்துக்குள் புகுந்து போகமுடியாமல் இங்கு காத்திருக்க வேண்டியிருக்கிறது'' என்று பதில் கூறினுர்.

ரிபு ''இந்த ஊரைப்பற்றி உமக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது. இவர்களில் யார் அரசன் யார் மற்றவர்கள் தயவு செய்து கூறும்'' என்ருர். நிடகர் ''மலைபோல் இருக்கும் பெரிய யானை மீது அமர்ந்திருப்பவன் அரசன். மற்றவர்கள் அவனோடு வரும் அவனது சபையோர்'' என்ருர்.

ரிபு ''பெரியோரே, நீர் யானையையும் அரசனையும் சேர்த்து விவரித்திருக்கிறீர். இருவரில் யார் அரசன் எது யானை என்பது எனக்கு விளங்கவில்லை. நீர் இரண்டையும் தனித்தனியாக விவரித்துக் கூறவில்லை. அதை நான் உம்மிடம் அறிய விரும்புகிறேன்'' என்ருர். நிடகர் ''இவற்றில் கீழேயிருப்பது யானை, அதன்மேல் அமர்ந்திருப்பவன் அரசன். அது சுமப்பது சுமையாக யிருப்பவன்

என்ற தொடர்புள்ளவை. இதுகூடத் தெரியாதவர் யாராவது இருக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை'' என்ருர்.

ரிபு ''ஆமாம். நான் அதை அறிகிறேன். ஆனுல் ''கீழே'' ''மேலே'' என்ற சொற்களுக்கு என்ன அர்த்தம். எது மேலே எது கீழே என்று நான் எப்படி அறிவது'' என்ருர்.

நிடகர் உடனே ரிபுவின் தோள்களில் ஏறிக் கொண்டு ''பிராமணு இங்கே பாரும். நான் சொல்வதைக் கேளும் உமது கேள்விக்குப் பதில் கூறுகிறேன். நான் இப்போது அரசனைப்போல் ''மேலே'' இருக்கிறேன். நீர் யானையைப்போல் ''கீழே'' இருக்கிறீர். மேலே கீழே என்பதை நீர் நன்குணரும்படி அநுபவபூர்வமாக இத் திருஷ்டாந்தத்தால் விளக்கினேன்'' என்ருர்.

ரிபு ''மேலே'' என்பதும் ''கீழே'' என்பதும் என்ன? அவை தொடர்புள்ள சொற்கள். வெவ்வேறு ஸ்தானங்களுக்கும் அல்லது திருஷ்டி கோணத்துக்கும் தக்கபடி மேல் கீழாகிறது கீழ் மேலாகிறது. நீர் அரசனைப்போல் மேலேயிருப்பதாயும் நான் யானையைப்போல் கீழே நிற்பதாயும் கூறினீர். நீர் யார்? நான் யார்? என்பதைக் கூறும். இதன் உண்மையை உணர நான் ஆவலாயிருக்கிறேன்'' என்ருர். இவ்வார்த்தைகளைக் கேட்ட நிடகர் ரிபுவின் பாதங்களில் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து ''பிரபுவே! நீர் எனது அன்புக்குரிய ஆச்சாரியரான மகரிஷி ரிபுவேயன்றி வேறல்லர். வேறுயாரும் இவ்வாறு பேசமுடியாது. தாங்கள் அறிவுமயமானவர். என் எதிரில் இருக்கும் தாங்கள் மகரிஷி ரிபுவைத் தவிர வேறல்ல. என்னை ஆசீர்வதியுங்கள்'' என்ருர்.

அப்போது ரிபு "ஏ நிடகா! ஒரு சமயம் நீ மிகுந்த நம்பிக்கையோடும் பக்தியோடும் எனக்குத் தொண்டு புரிந்தாய். உன் வீட்டிலழைத்து உபசரித்து மிகுந்த மரியாதை செலுத்திஞய். உனது அன்பாகிய கயிறுகளால் பந்தப்பட்டு, ரிபுவெனப் படும் நான் உனக்கு மறுபடி ஒருமுறை ஆத்ம ஞானத்தை உபதேசிக்கும் பொருட்டு உன்னே யடைந்திருக்கிறேன். அறிவில் சிறந்தவனே! உலகப் பொருள்கள் யாவற்றிலும் எப்போதும் ஆத்மாவாகிய ஒரே மெய்ப்பொருளேக் காண்பா யாக. எங்கும் இரண்டைக் காணுமல் ஒன்றையே காண்," என்று கூறி ரிபு சென்று விட்டார்.

நிடகர் தமது குருவின் அமுதம்போன்ற சொற் களேச் சிந்தித்துப் பரப்பிரம்மத்துடன் ஐக்கிய மடைந்தார். அவர் மறுபடி ஒருபோதும் மாயை யின் கவர்ச்சிகளால் பிரமையடையவில்லே. துவைத மான உலகம் முழுதும் மறைந்தது. புல் நுனிமுதல் பிரம்மத்தின் நிலே வரையில் ஒவ்வொரு வஸ்து விலும் ஒரே ஏகரஸமான சாரத்தைக் கண்டார்.

---

## 2. ஹனுமானுக்கு ஸ்ரீ ராமனின் போதனேகள்

ஸ்ரீ ஹனுமான் ஸ்ரீ ராமனேப்போற்றி, "புண்ணி யனே! நீர் சச்சிதானந்த பரப்பிரம்மம். உமக்கு மீண்டும் மீண்டும் வணக்கங்கள். மோட்சத்தின் பொருட்டு உமது உண்மை இயல்பை உணர விரும்புகிறேன். இறைவா! உலக வாழ்க்கையாகிய தளேயிலிருந்து நான் சுலபமாக விடுபட்டு முடிவான கைவல்யத்தை அடையத்தக்க வழியை எனக்குக் கூறும்" என்று கேட்டுக் கொண்டார்.

ஸ்ரீ இராமன் கூறுவார், ''பிரபலமான வீரா! நான் வேதாந்தத்தில் நன்கு நிலைபெற்றிருக்கிறேன். நீயும் வேதாந்தத்தைக் கைக்கொள்''.

ஹனுமான் ''ரகுவீரா! வேதாந்தம் என்றால் என்ன? அது எங்கே யிருக்கிறது? தயை கூர்ந்து விளக்கவும்'' என்றார்.

ஸ்ரீ ராமன் ''வேதாந்தத்தின் இயல்பை நான் உனக்கு உண்மையாக விளக்குகிறேன். விஷ்ணு வாகிய என் வெளிமூச்சுக்காற்றின் மூலம் வேதங்கள் உண்டாக்கப்பட்டன. வேதங்களில் வேதாந்த மானது எள்ளுக்குள் எண்ணெய்போல் வியாபித் திருக்கிறது. முடிவான முக்தியை யடைவதற்கு ஒரே வழி மாண்டூக்ய உபநிஷத் ஒன்றே. அது எல்லா சாதகர்களுக்கும் முக்திக்குப் போதுமானது. அதனால் ஞானம் பெறாவிட்டால் உபநிஷத்துக்களைப் படி, உனக்கு சீக்கிரமே ஞானம் வந்து என் இருப் பிடத்தை அடைவாய். பத்து உபநிஷத்துக்களை படித்துணருவதால் சம்சய பாவனை (சந்தேகம்), அசம்பாவனை (வீண் எண்ணம்) விபரீதபாவனை (போலி எண்ணம்) ஆகிய மூன்றுவித பாவனைகளை யும் தேகவாசனை, லோக வாசனை, சாஸ்திர வாசனை ஆகிய மூன்று வாசனைகளையும் அழித்துவிடலாம்.

''வேதாந்த ஞானத்தை நாஸ்திகனுக்கும், நன்றிகெட்டவனுக்கும், தீவினைகளைச் செய்பவனுக் கும், என்னிடம் அல்லது குருவிடம் பக்தியில்லாத வனுக்கும், பிரம்மசர்ய விரதம் இல்லாதவனுக்கும், குருசேவை செய்யாதவனுக்கும் கூறக்கூடாது.

''முக்தியடைய விரும்புபவர்கள் சாதன சதுஷ்டயத்தை விருத்தி செய்துகொண்டு நம்பிக்கை யோடும் கையில் காணிக்கைகளோடும் ஒரு குருவை அணுக வேண்டும். அவர்கள் அவரிடம் உபநிஷத்துக் களைக் கற்று சிந்தனையையும் தியானத்தையும்

பழகவேண்டும். பிரம்மலோகத்தில் இருப்பவர்கள் பிரம்மாவிடம் வேதாந்தத்தை ஓதி அவருடனேயே கைவல்யமுக்தி அல்லது முடிவான மோட்சத்தை அடைகிறார்கள்.

''குரு வேதங்களில் தேர்ந்தவராயிருக்க வேண்டும். அவர் எல்லா உயிர்களின் நன்மையிலும் கருத்துள்ளவராக இருக்கவேண்டும். அவர் கருணைக் கடலாக இருத்தல் வேண்டும்,'' என்றார்.

ஹனுமான் ''ரகுவீரரே! ஜீவன் முக்தி என்ன என்பதை தயவு செய்து கூறும். விதேகமுக்தி யென்றால் என்ன? அதற்குப் பிரமாணம் எது? பூரணத்துவத்தின் நோக்கம் என்ன? அது எப்படி அடையப்படுகிறது?'' என்று கேட்டார்.

ஸ்ரீ ராமன் பதில் கூறுவார். ''வானரங்களில் புலியே! கர்த்ருத்வ போக்ருத்வமாகிய குண விசேஷங்கள் உள்ள மனித உள்ளத்தின் தர்மம் பந்தத்தை உண்டாக்கி துன்பங்களையும் துயரங்களை யும் உண்டுபண்ணுகிறது. மனதைக் கட்டுப்படுத்து வதே ஜீவன் முக்தி. தேகம் நீங்கி முக்திபெறுவதே விதேக முக்தி. குடம் உடைந்தவுடன் குடத்து ஆகாசத்தைப்போல் பிராரப்த கர்மங்கள் அழிந்து விடுவதின் மூலம் தேகங்களிலிருந்து விடுபட்டவுடன் விதேக முக்தி தொடருகிறது.

''ஜீவன் முக்தி விதேக முக்தி ஆகியவற்றின் முக்கியாம்சங்களுக்குப் பிரமாணம் 108 உபநிஷத்து கள்.

பூரணத்துவத்தின் நோக்கம், அஞ்ஞானத்தை அகற்றுவதன் மூலம் நித்தியானந்தத்தை அடை வதே. இது புருஷார்த்தம் அல்லது சரியான முயற்சி மூலம் அடையத்தக்கது. வேதாந்த ஞானம், சிந்தனை, தியானம் ஆகியவற்றின் மூலம் சமாதியடைந்து ஜீவன் முக்தி அடையப்படுகிறது.

அது மனித முயற்சிகளாலேயே அடையப்படுகிறது. அது வாசனுநாசத்தின் மூலம் அடையத்தக்கது.

''மனித முயற்சிகள் சாஸ்திரோக்தமான முயற்சிகள் சாஸ்திர விரோதமான முயற்சிகள் ஆகிய இருவகையுள்ளன. சாஸ்திரீக முயற்சிகள் மெய்ப்பொருளை அடைவிக்கின்றன. சாஸ்திர விரோதமானவை கெடுதலை உண்டாக்குகின்றன.

''வாசனைகள் சுபவாசனைகள் அசுப வாசனைகள் ஆகிய இருவகை. நீ சுபவாசனைகளைப் பின்பற்றினால் படிப்படியாக எனது ஸ்தானத்தை யடைவாய்.

அசுபவாசனைகள் மறு பிறப்புக்குக் காரண மாகின்றன. சுப வாசனைகள் அதை அழிக்கின்றன. சுபவாசனைகள் முடிவான முக்தியை அடைவதற்கு வழிகாட்டுகின்றன. அசுப வாசனைகள் மிகுந்த அகங்காரத்துடன் சம்பந்தப்பட்ட ஆழ்ந்த அஞ்ஞானத்தின் இயல்புடையவை.

வாசனையின் பந்தமே உண்மையான பந்தம். வாசனுக்ஷயமே விடுதலை அல்லது மோட்சம். எல்லா வாசனைகளையும் முழுதும் துறந்துவிடு. மோட்ச ஆசையைக்கூட விட்டுவிடு. மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை ஆகியவற்றோடு சம்பந்தப்பட்ட சுபவாசனைகளைப் பெருக்கு. இந்த வாசனைகளைக்கூட நீக்கி அந்தர்யாமியாகிய ஆத்மாவில் மிக்க அமைதியாய் நிலைபெறு.

மகாத்மாக்களின் சத்சங்கத்தை யடைதல், ஜபம், தியானம், ஆராதனை, தர்மக்கிரந்தங்களைப் படித்தல் ஆகியவற்றில் ஆவல் கொள்ளுதல் சுபவாசனையாகும். பிறரைத் துன்புறுத்தி அவர்கள் மீது அபவாதம் கூறுவது, ஸ்திரீயோடு சம்பந்தப்படுவது, ஆகியவை அசுபவாசனை. பழைய அசுப வாசனைகள் உன்னை ஆட்கொண்டால் அவற்றை முயற்சியால் கட்டுப்படுத்த வேண்டும்.

விஷயங்களை நோக்கி ஓடும் வாசனைகளின் நதியை அசுத்த மார்க்கத்திலிருந்து விலக்கி நன் முயற்சி மூலம் சுத்தமான பாதையில் செலுத்தப்பட வேண்டும். அசுப வாசனைகளை சுபவாசனைகளாக மாற்றவேண்டும். சுபவாசனைகளால் அசுபவாசனை களைக் கட்டுப்படுத்த வேண்டும். அசுபவாசனை களினின்று திருப்பப்பட்டது சுபவாசனைகளை நோக்கித் திரும்புகிறது.

மனதாகிய குறும்புக்காரக் குழந்தையை, மனித முயற்சிகளால் சீராட்ட வேண்டும். பகைவர் களையும் கெட்டவர்களையும் கொல்லுபவனே! இரு வாசனைகளையும் இடைவிடாத முயற்சிகள் மூலம் நீ நிவர்த்தி செய்யும்போது விவரிக்க முடியாத ஜோதி யும் மகிமையும் உள்ள நிர்மலமான பிரம்மத்தின் நிலையை நீ அடைய இயலும். சுபவாசனைகளை மட்டும் அப்பியாஸம் செய்.

நீ சுபவாசனைகளைப் பெருக்குவதில் தவறு ஏதுமில்லை. வாசனக்ஷயம், மனோநாசம், தத்துவ ஞானம் அல்லது விஞ்ஞானம் ஆகியவற்றை நீண்ட காலம் ஒன்று சேர்த்துப் பழகவேண்டும். அப்போதுதான் நீ நித்தியானந்தத்தை நுகரலாம். அப்போதுதான் அது பலனை விளைவிக்கும்.

இவற்றை திரும்பத் திரும்ப சமமாகப் பயின்று லொழிய நூற்றுக்கணக்கான ஆண்டுகள் ஆயினும் பரப்பிரம்மத்தை அடைதல் இயலாது. இம்மூன்றில் ஒன்றை நீண்டகாலம் அப்பியஸித்தாலும் அது பலனை அளிக்காது. நீண்டகாலம் இம் மூன்றையும் பயில்வதன் மூலம் அவித்யை (அறியாமை), காமம் (ஆசை), கர்மம் (செயல்) ஆகிய உறுதியான இருதய முடிச்சுகள் அறுக்கப்படும். நூற்றுக் கணக்கான ஜென்மங்களில் இந்திரிய விஷயங்களை நுகர்வதன் மூலம் எழுந்த வாசனைகளை யோகத்தை

வெகு காலம் பயில்வதன் மூலம்தான் அழிக்க முடியும்.

வைராக்கியத்தின் மூலமும் விவேகத்தின் மூலமும் இந்திரிய சுகத்தில் ஆசையை நீக்கி மேற்கூறிய மூன்றையும் அப்பியாஸம் செய். வாசனைகளுடன் கூடிய மனம் பந்தத்தை உண்டாக்கும், வாசனைகள் நீங்கிய மனம் முக்திக்கு இட்டுச் செல்லும்.

பிரம்மத்தைத் தியானிப்பதன் மூலமும், சமம் (மனதை அடக்கல்) தமம் (தன்னடக்கம்) ஆகியவற்றைப் பயிலுவதன் மூலமும், வாசனைகள் அழிவுறுகின்றன. வாசனைகள் அழியும்போது, மனது எண்ணெயற்ற விளக்கைப்போல் சாந்தி பெறுகிறது.

எவனுடைய மனது எல்லா வாசனைகளையும் நிவர்த்தி செய்து என்மீதே நிலைநாட்டப்பட்டிருக்கிறதோ, அவன் என்னைத்தவிர வேறல்லன். அவன் சமாதியைப் பயின்றாலும் பயிலாவிட்டாலும் முக்தி பெற்ற ஞானி அல்லது ஜீவன் முக்தனே. அவன் கர்ம பலன்களால் கட்டுப்படமாட்டான். வாசனைகள் யாவற்றையும் பூரணமாய் அழிப்பதனால் தான் பிரம்மம் அல்லது பரம்பொருளை அடைய முடியும்.

வாசனைகள் அழிந்தபோதிலும் வழக்கத்தின் சக்தி காரணமாக கண்களும் மற்ற உறுப்புகளும் தங்கள் வசமின்றியே தங்கள் தங்கள் விஷயங்களை நோக்கிப் பாய்கின்றன. விருப்பமின்றியே எப்படி, கண் தன்மீது படும் பொருள்களைப் பார்க்கிறதோ, அதேபோல் ஞானி விருப்பமின்றியே உலக விஷயங்களில் ஈடுபடுகிறான்.

வஸ்துக்களை உணர்வதன் மூலம் வாசனை வெளிப்படுகிறது. அது வஸ்துவின் இயல்பையே

கொண்டது. அது சித்தத்தின் (மனப் பொருள் அல்லது உள் மனது) உற்பத்திக்குக் காரணம். அது அழிக்கப்படும்போது சித்தம் கிரகிக்கப்படுகிறது. நினைவுக்கெட்டாத காலமாக தன்னைப் பொருள்களோடு ஒன்றிக்கொண்டிருப்பதால் இந்த அலைவதும் எப்போதும் மாறுவதுமான சித்தம் ஜனன மரணத்துக்குக் காரணமாயிருக்கிறது.

வாசனையின் மூலம் பிராணனின் அசைவு உண்டாகிறது. வாசனை, பிராணனின் அசைவினால் உண்டாகிறது. இவை சித்தத்தின் விதைகளாகின்றன. சித்தமாகிய மரத்துக்குப் பிராணனின் அசைவு வாசனையின் அசைவு ஆகிய இரு விதைகள் உண்டு. அவைகளில் ஒன்றை யழித்தாலும் இரண்டும் சீக்கிரம் அழிந்து விடும்.

ஒருவன் பற்றுதலின்றி காரியங்களைச் செய்வதோடு, இவ்வுலகம் உண்மையானது என்ற எண்ணத்தை விட்டு இச்சரீரம் பொருள்கள் ஆகியவற்றின் நிலையற்ற இயல்பைச் சிந்திப்பானாயின், வாசனைகள் எழா. வாசனைகள் முழுவதும் அழிக்கப்பட்டவுடன் சித்த நாசம் ஏற்படுகிறது. மனது விஷயங்களை நினைக்காவிட்டால் ஒருவன் மனதற்றவனாகிறான். அது மிகுந்த சாந்தியை அளிக்கிறது. உனக்கு உண்மையான விவேகம் உண்டாகாத வரையில், உனக்கு பிரம்மஞானம் உண்டாகாத வரையில், நீ குருவின் உபதேசங்களையும் வேத நூல்களின் கட்டளைகளையும் கண்டிப்பாகக் கடைப்பிடிக்க வேண்டும். நீ மெய்ப்பொருளை உணர்ந்து உனது பாபங்கள் எரிக்கப்பட்டால், நீ நல்ல அல்லது சுபவாசனைகளைக் கூடக் கைவிட்டு விடவேண்டும்.

மஹாகபியே! மனது அல்லது சித்தத்தின் நாசம், உருவமுடையதன் நாசம் (ஸ்வரூப மனோ நாசம்) உருவமற்றதன் நாசம் (அரூப மனோ நாசம்)

ஆகிய இருவகைகள் உள்ளன. ஜீவன் முக்தனுக்கு ஸ்வரூப மனோ நாசம் உளது. ராஜஸமும் தமஸமும் அழிவடைகின்றன. சத்வம் உளது. விதேக முக்த னுக்கு அரூப மனோநாசம் ஏற்படுகிறது. ரஜஸ், தமஸ் அத்தோடு சத்வம் கூட அழிவடைகிறது.

சமமானவர்களிடம் மைத்ரியையும் (சிநேகம்), தாழ்ந்தவர்களிடம் கருணையையும், தீயவர்களிடம் உபேட்சையையும் (அசட்டையையும்) விருத்தி செய். பிறகு மனது சமாதானமடையும். அப்போது தான் நீ மறு பிறப்பிலிருந்து விடுபடுவாய். அதன் ஆயிரக்கணக்கான மிலாறுகள், கிளைகள், தளிர்கள் பழங்களுடன் சம்சார விருட்சத்துக்கு வேர் மனதே. மனது சங்கல்பத்தையன்றி வேறல்ல. சங்கல்ப நாசத்தின் மூலம் வேரை உலர்த்து. அப்போது சம்சார விருட்சம் சீக்கிரம் உலர்ந்து விடும். ஆகவே சங்கல்பம் எழுந்தவுடன் அதை நாசம் செய். அறிவாளிகளின் மனது அழிவடைகிறது. அழிவற்றவர்களின் விஷயத்தில் மனது கால் விலங்காயுளது. பிரம்மத்தைத் தியானிப்பதன் மூலம் மனது அழிக்கப்படாதவரையில், வாசனைகள் மனிதனிடம் நாசவேலைகளைச் செய்கின்றன. அஹங் காரத்தை அழி. புலன்களைக் கட்டுப்படுத்து. வாசனைகள் படிப்படியாக நசிக்கும். ஊக்கமான முயற்சிகளின் மூலம் முதலில் மனதை வெற்றி கொள்.

பயனுள்ள அங்கீகரிக்கப்பட்ட முறைகளினால் நீ மனதைக் கட்டுப்படுத்த வேண்டும். யானையை அங்குசத்தால்தான் அடக்க முடியும். நீ அதைக் கயிற்றினால் கட்டிவிட முடியாது. அதே போல் பிரம்மஞானம், சத்சங்கம், வாசனைகளை முழுதும் அகற்றல், பிராணன்களைக் கட்டுப் படுத்தல் போன்ற பலமுள்ள முறைகளால்தான் மனது கட்டுப்படும். பலாத்காரம் அல்லது சக்தி

யினால் மனதை அடக்காதே. மனதைப் பலாத்காரத்தால் கட்டுப்படுத்த முயல்பவர்கள் யானையைச் சிறு பட்டு நூலினால் கட்ட முயல்பவர்களைப் போலாகும்.

லயசிந்தனையை அப்பியசி. அவ்யக்தத்தில் அல்லது வெளிப்படாததிலுள்ள பூதங்களைப் பிரி. மிச்சமிருப்பதை அதாவது சின்மாத்ரை அல்லது புனிதமானப் பிரக்ஞையை மட்டும் தியானி. அதுவே சிதானந்தம் (அறிவு, ஆனந்தம்).

யோகிகளால் மூச்சை இழுத்து வெளி விடுவதற்குள் அநுபவிக்கும் காலம் உள் கும்பகம் (மூச்சு நிற்றல்). மூச்சை வெளிவிட்டு அடுத்த மூச்சை இழுக்கும் வரையில் உள்ள நேரம் வெளிக் கும்பகம்.

மனதின் மாறுதல்கள் யாவும் அழியும்போது மனது மனதில்லாமல் போகிறது. யோகிகள் அஸம்ப்ரக்ஞாத் சமாதியின் உத்தம ஆனந்தத்தை நுகர்வார்கள். சித்தின் (சுத்த சைதன்யம்) இயல்புடைய நிலை அதத்வ்ய வ்ரித்தி சமாதி எனப்படும். இச் சமாதி மற்றொன்றின் உதவியை நாடாதது. அது சிவனின் இயல்புடையது. அது மேலும் கீழும் இடையிலும் பிரம்மம் மாத்திரமே.

தீவிர ஆசை அல்லது அவா காரணமாக யோசனை அல்லது விவேகமின்றி விஷயங்களில் பற்றுதல் வைத்தல் வாசனை எனப்படும். மனிதன் எதை ஆழ்ந்து சிந்திக்கிறானோ அதாகவே சீக்கிரம் ஆகிவிடுகிறான். வாசனைகளால் ஆட்கொள்ளப்பட்டவன் அதன் இயல்பாகவே ஆகிவிடுகிறான். ஒரு மனிதன் இவ்வுலகை உண்மையென்று எண்ணுவானாயின், அவன் பிரமைக்குள்ளாகிறான். இப்பிரபஞ்சம் வாசனாமயமானது. இந்த மனதும் வாசனாமயமானது. வாசனை எவ்வளவு பலமாகிறதோ, அவ்வளவுக்குப் பிரபஞ்சம் உண்மை

யானது. இவ்வுலகம் அவனுக்கு மிகுதியாய் உளது. அவன் இவ்வுலகை விடமுடியாது. இவ்வுலகமே அவனுக்குச் சகலமும்.

பிரமையாகிய அசுத்த வாசனை அல்லது தேகத்தினிடம் உபேட்சையை அடைதல் வேண்டும். இத்தேகம் மிகவும் அசுத்தமானது. அதனுள் வதியும் ஏகமான ஆத்மா மிகப் புனிதமானது. இரண்டுக்கும் இடையிலுள்ள வேற்றுமைகள் உணரப்படும்போது எந்தவிதமான சுத்திகரிக்கும் சடங்குக்கு அவசியம் இல்லை.

மாருதியே! உனக்குள்ளே உள்ள ஜோதியைத் தேடு. எவன் பார்க்கப் படுவதையும் பார்க்கப் படாததையும் விட்டு விட்டு, ஏகம் மட்டும் போல் இருக்கிறானோ, அவன் பிரம்மத்தை அறிபவன் மட்டுமல்ல, பிரம்மமேயாவான். நான்கு வேதங்களையும் கற்றவன் சகஜமாய்ப் பிரம்மத்தை உணராவிடின், அவன் வாய்க்கின்பமான உணவு வகைகளின் சுவையை அறியமாட்டாத அகப்பை போலாவான்.

எல்லாத் துன்பங்களையும் சங்கடங்களையும் துக்கங்களையும் அழிப்பதாயும், சப்தம், ஸ்பரிசம், ரூபம், க்ஷீணம், ருசி, நாசம், வாசனை ஆகியவை அற்றதாயும், பெயரும் கோத்திரமும் இல்லாததாயும் உள்ள என் உண்மை நிலையை எப்போதும் வணங்கு.

நான் இரண்டாவதற்ற பிரம்மம். நான் பரம்பொருள். நான் சுயம் ஜோதி, பிறப்பற்றவன், இரண்டற்றவன், அழிவற்றவன், பற்றுதலற்றவன். நான் எல்லாவற்றையும் வியாபித்து ஊடுருவியுள்ளவன். நானே சகலமும். முக்தி அல்லது மோட்சத்தின் இயல்பானவனே நான்.

நான் சுத்தமானவன், மாறுதலற்றவன். உண்மையில் என்னுள் எப்பொருள்களும் இல்லை. நான் குறுக்கிலும் நெடுக்கிலும், மேலும் கீழும் எப்போதும் பூரணமான பிரம்மம். நான் பிறப் பற்றவன், மரணமற்றவன், வயதற்றவன், அழிவற்றவன், சுயம் பிரகாசன், சர்வ வியாபி, நித்தியன், பகுப்பற்றவன், நாசமற்றவன், காரண மற்றவன், சுத்தமானவன், பலனுக்கும் பிரபஞ்சத் துக்கும் அப்பாற்பட்டவன், நித்தியதிருப்தன். இவ் வாறு என்னைத் தியானி.

ஒருவனது சரீரம் காலனுக்கு உட்படும் போது, காற்று அசையாத நிலையை அடைவது போல் அன்னவன் ஜீவன் முக்தி நிலையை விட்டு விட்டு பிரம்மத்தில் ஐக்கியமாய் விடுகிறான்.

---

## 3. அஷ்டவக்கிரரின் கதை

பழைய காலத்தில் ஜனகன் என்னும் பெயருள்ள அரசன் இருந்தான். அவன் நேர்மை யானவன். அறிவாகத் தீர்ப்பு அளிப்பவன். எல்லா விஷயங்களையும் உணர்ந்தவன். அவன் ஒருசமயம் சிரேஷ்டமான ''ஆத்மதேவியைச்'' சாந்தப் படுத்துவதற்கு ஒரு யாகம் செய்தான். அந்த யாகத்துக்கு அறிஞர்களும், ஞானிகளும், தபஸ்விகளும், கலைஞர்களும், வேதப் பிராமணர் களும், யாகம் செய்விப்பதில் வல்லவர்களும் மற்றும் பலரும் வந்திருந்தார்கள். அதேசமயம் வருணனும் (சமுத்திர ராஜன்) ஒரு யாகத்தைத் தொடங்கினான். பிராமணர்கள் ஜனக ராஜனால் நன்கு வரவேற்கப்பட்டு உபசரிக்கப்பட்டுப் பூரண மகிழ்ச்சி யடைந்திருந்தார்கள். அவர்கள் அவனிடம் பற்றுதல் கொண்டிருந்தார்கள்.

ஆகவே, அவர்கள் வருணனால் அழைக்கப்பட்ட போதிலும், அவனது யாகத்துக்குச் செல்லவில்லை. அதனால் வருணனது புத்திரன் அவர்களை வாதத்தில் வென்று அவர்களைத் தன் தந்தையிடம் அழைத்துச் செல்ல எண்ணினான். அவன் ஒரு பிராமணனைப் போல் வேடம் பூண்டு ஜனகனது சபைக்கு வந்தான். ஜனகனது யாக சாலையையடைந்து அவன் ஜனகனை ஆசீர்வதித்து அங்கு கூடியிருந்தவர்களோடு ஆக்ஷேபிக்கும் முறையில் (அவர்களது கூற்றுகளை எதிர்க்கும் முறையில்) பேசலானான்.

அவன் சொன்னதாவது, "புத்திமான்களே, கேளுங்கள்! அரசே, உனது யாகசாலை சோபிதமாயில்லை; அது தாமரைத் தடாகத்தில் காக்கைகள் சேர்ந்திருப்பதுபோல் இருக்கிறது. சரத் காலத்து அன்னங்கள் சஞ்சரிக்கும் தாமரைத் தடாகத்தைப் போல், கற்றோரும் அறிஞரும் நிறைந்த சபை விளங்குகிறது. ஆனால் இச்சபையில் ஒரு கல்விமான் கூட இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. மன்னவா, உனக்கு நலமுண்டவதாக; இந்த மூடர்கள் கூட்டத்தில் எனக்கு இடமில்லை; ஆகவே நான் செல்கிறேன்." கூடியிருந்தவர்கள் இதைக் கேட்டுக் கோபமடைந்து, "பொறுமைப் பிண்டமே, பிராமணனாயிருந்து நீ எல்லோரையும் எதிர்க்கிறாய். நீ எந்த சாஸ்திரத்தில் எங்கள் யாவரையும் வெல்லக்கூடும்? ஏ சிடுமூஞ்சி, நீ வீணாகத் தற்புகழ்ச்சி செய்து கொள்கிறாய். முதலில் எங்களை வாதத்தில் வென்ற பிறகு நீ போகலாம். ஈண்டு எல்லாக் கல்விமான்களும் அறிஞர்களும் கூடியிருக்கின்றனர். உலகத்துக் கல்வியாளர்கள் அறிஞர்கள் யாவரையும் வெல்லக் கூடிய நீ யார்? எந்த சாஸ்திரத்தில் நீ எங்கள் யாவரையும் வெல்லப் போகிறாய்?" என்றனர்.

இதற்கு வருண குமாரன் அளித்த பதிலாவது: ''ஒரு நிபந்தனையின் பேரில் உங்கள் அனைவரையும் ஒரு கணத்தில் வெல்லுவேன். நீங்கள் என்னை ஜெயிப்பீர்களாயின், என்னைச் சமுத்திரத்தில் முழுக் கடியுங்கள். நீங்கள் ஜெயிக்கப்படுவீர்களாயின், நான் உங்களைக் கடலில் தள்ளிவிடுவேன். இந்த நிபந்தனையின் மேல் என்னோடு வாதம் தொடங்குங்கள்.''

இந்நிபந்தனையை ஒப்புக்கொண்டு, அங்கு கூடியிருந்தவர்கள் வருணனது குமாரனோடு தங்கள் வாதத்தைத் தொடங்கினார்கள். வீண் வாதங்களால் வருண குமாரன் பலரை வென்று ஆயிரக் கணக்கானவர்களைக் கடலில் தள்ளிவிட்டான்; இவர்கள் மூழ்கடிக்கப்பட்டார்கள் என்று தோன்றின போதிலும் வருணனது தூதர்களால் அவனது யாகத்துக்கு அழைத்துக் கொண்டு போகப்பட்டு நன்கு உபசரிக்கப்பட்டு சந்தோஷப் படுத்தப் பட்டார்கள். ஜனகனது சபைக்குச் சென்ற கஹோலன் என்னும் பிராமணன் கடலில் மூழ்கடிக்கப் பட்டான் என்று கேட்ட, அவனது குமாரன் அஷ்டவக்கிரன் ஜனகனது சபையை அடைந்து பல்வேறு வாதங்களால் வருணனது குமாரனைத் தோற்கடித்து அவனைக் கடலில் தள்ளும்படி கேட்டுக் கொண்டான். தான் தோற்றதனால் வருணனது குமாரன் தனது வேஷத்தை நீக்கி விட்டு, தன்னால் வருணனது யாகத்துக்கு அனுப்பப் பட்ட பிராமணர்கள் எல்லோரையும் ஜனக சபையில் கொணர்ந்து நிறுத்தினான். அவர்கள் எல்லோரும் திரும்பிவந்தபோது, கஹோலன் குமாரனான அஷ்டவக்கிரன் இவர்கள் யாவரும் தன் ஒருவனாலேயே திரும்பி வந்தார்கள் என்று கர்வமடைந்து அவர்களை அவமதிக்கலானான். அச்சமயம் ஒரு பெண் துறவி சபையில் புகுந்தாள்.

அந்தப் பிராமணர்கள் அவரை யணுகித் தங்கள் குறைபாடுகளை நீக்க உதவும்படி அவரைக் கேட்டுக் கொண்டார்கள்.

எப்போதும் பால்யமாயுள்ளவரும், காவியுடையும் ஜடையும் தரித்தவருமான அந்தப் பெண் துறவி நியாயமாக அவர்களது மனோவேதனையை நீக்கச் சம்மதித்தார். ஜனகர் அவரைத் தக்க மரியாதையோடு வரவேற்றார். அத் துறவி அஷ்டவக்கிரரைப் பார்த்து, ''கஹோலன் குமாரனே, குழந்தாய், நீ அறிவாளி. நீ வருணனது குமாரனைத் தோற்கடித்து பிராம்மணர்களைத் திரும்பக் கொண்டு வந்தாய். ஆயினும் நான் உன்னைச் சில கேள்விகள் கேட்கிறேன். நியாயமாகப் பதில் கூறு. எந்த அவஸ்தை அல்லது நிலையை அறிவதனால் பூரண அமரத்துவம் கிடைக்கிறது; எந்நிலையை உணர்வதால், எல்லாச் சந்தேகங்களும் முழுதும் நிவர்த்தியாகின்றன. எதற்கு அப்பால் அறிய வேண்டியது எதுவுமில்லை. எதற்கு அப்பால் ஆசைப்படக் கூடியது எதுவும் இல்லை; எது அறிய முடியாதது, நீ அதை அறிந்திருந்தால் எனக்குக் கூறுவாயாக''.

துறவியின் இச் சொற்களைக்கேட்டு கஹோலனது குமாரன் கூறுவான்: ''எனக்கு அந்நிலை பூரணமாகத் தெரியும். கேளும், நான் கூறுகிறேன். இவ்வுலகில் நான் அறியாதது எதுவும் இல்லை. நான் அடிக்கடி அநேக வேத நூல்களைப் படித்திருக்கிறேன். உமது கேள்விக்கு உண்மையான பதிலை உரைக்கிறேன்: துறவியே, கேளும்:— இந்நிலையே உலகங்கள் யாவற்றிற்கும் (பிரபஞ்சம்) உற்பத்திக்கும் காரணம்: அது சுத்தமான, பாகுபாடற்ற சித்ரூபம் (புனிதமான ஞானம், பரம் பொருள்): இவ்வுலகம் அதன் மீது தங்கி நின்று கண்ணாடியில் பிரதி பிம்பிக்கப்பட்ட நகரம்போல் ஒளி வீசுகிறது;

அதுவே சர்வ சிரேஷ்ட நிலை. அந்நிலையை உணர்வதால், எப்போதைக்கும் அழிவின்மை அடையப் படுகிறது. கண்ணுடியின் உண்மையை உணர்வதால், சந்தேகங்கள் (பிம்பம் அல்லது வஸ்து) நிவர்த்தியாவதுபோல், பிரபஞ்சம் முழுவதும் அறியப்பட்டால், அல்லது பிம்பம் என்று உணரப் பட்டால், அறிவதற்கு ஏதுமில்லை. சிரேஷ்ட நிலையை (முடிவான முக்தி, அல்லது கைவல்யம்) உணருபவனுக்கு, வேறு ஒரு நிலை எங்குளது? இதை அறிபவர் அல்லது உணர்பவர் இல்லை யாதலின், அது அறியப்படாதது என்று கூறப் படுகிறது. வேதங்களில் கூறப்பட்டுள்ளபடி அந்த சர்வோன்னதமான நிலையை விவரிக்கிறேன்''.

பெண் துறவி அஷ்டவக்கிரனின் இவ்வார்த்தை களைக் கேட்டு, மேலும் கூறுவாள்: ''தவசியின் குமாரனே, நீ உண்மையான அர்த்தத்துக்கு ஒத்துச் சரியாகக் கூறியது யாவருக்கும் சம்மதம். ஆனுல் அதை அறிகிறவர் யாரும் இல்லாததால், அது அறியப்படாதது என்றும் அதை அறிந்தால் அமரத் துவம் அடையப்படுகிறது என்றும் கூறினுய். இவை முரண்பாடான கூற்றுகள். அது அறியப்படாத தாயின் அது எப்போதும் அப்படியே. ஆகவே அது இருப்புள்ளது அல்ல என்று நாம் சொல்லக்கூடும். அது இருப்புள்ளதானுல், அது அறியப்பட வேண்டும்; ஆகவே அறியத் தக்கது. அப்படியானுல் அது அறியப்பட இயலாதது என்று சொல்ல முடி யாது. ஆகவே ஏ பிராம்மணு, நீ சாஸ்திரங்களை ஒப்பித்திருக்கிருய், அவற்றை உணரவில்லை. அதாவது நேர்முகமான ஞானத்திஞல் அதை அறிந்தா யில்லை. நீ நேர்முகமாக எல்லாப் பிம்பங்களையும் பார்த்திருந்தாலும், நீ கண்ணுடியின் இருப்பை அறிந்தாயில்லை. இது எவ்வாறு? ஜனகர் அவை யில், இப்படிப்பட்ட முரண்பாடான வார்த்தை

களைக் கூறி எல்லோராலும் அவமதிப்புக்கு ஆளா யிருக்கிறாய் என்று நீ காணவில்லையா?''

இதைக் கேட்டு அஷ்டவக்கிரன் சிறிது நேரம் மௌனமாக நின்று தனக்குள் யோசித்தான். அவன் அவருக்குப் பதில் சொல்ல முடியாமல் ''போற்றத்தக்கவரே, உமது கேள்விகளுக்கு எனக்குச் சரியான பதில்கள் தெரியவில்லை. நான் உமது சிஷ்யன். இவ்விஷயங்களை எனக்கு நன்கு விளக்க வேண்டும். நான் ஒருபோதும் பொய் பேசுவதில்லை'' என்று கூறினான். இது கேட்டு சந்யாஸினி மனமகிழ்ந்து, ''குழந்தாய், இதற்கு (முரண்பாடான வார்த்தைகள்) பதில் தெரியாமல், அநேகர் அஞ்ஞானிகளாயிருக்கின்றனர். இது நியாயம், சிந்தனை அல்லது தர்க்கத்தினாலேயே உணர முடியாதது. அது எங்கும் ரகஸ்யமாகவே இருக்கிறது. இந்தச் சபையில் ஒருவருக்கும் அது தெரியாது. எவ்வளவு தர்க்கம் செய்தாலும் எனது கேள்விக்குப் பதில் கிடைக்காது. கல்விமான் களுக்கு வாதம் செய்யத்தான் தெரியும். எவ்வளவு கல்வியாளனாக இருந்தாலும் அவன் குரு சேவை செய்து பகவத் கிருபையை அடைந்தாலொழிய இது அவனுக்குத் தெளிவாக விளங்காது. முனி குமாரனே, நான் கூறுவதை கவனமான மனத் துடன் கேட்பாயாக. நீ கேட்டாலும் கூட, கேட்ட வார்த்தைகளில் ஏகாக்ர சித்தம் (தியானம்) இருந்தாலொழிய இது தெளிவாகாது. இந்த ஞானம் அனுபவத்துக்கு வந்தாலொழிய அது ஆயிரம் முறை கேட்டு ஒப்பிக்கப்பட்டாலும் பயனளிக்காது. ஒருவன் மூடத்தனமாகத் தனது கழுத்து ஹாரம் திருடர்களால் அபகரிக்கப்பட்டதாக நினைக் கிறான். வேறொருவன் அது அவன் கழுத்திலேயே

இருக்கிறது (திருடர்களால் கொண்டு போகப்பட வில்லை) என்று சொன்னாலும் அவன் அதை நம்பு வதில்லை. அவன் தன் கழுத்தைப் பார்க்காத வரையில் இப்படியே இருக்கிறது. நான் கூறிய நிலையின் இந்த ஞானமும் இப்படித்தான். அந்த நிலையைக் கேட்ட பிறகு, அதைத் தன்னுள்ளேயே ஒருவன் அநுபவிக்காத வரையில் அவன் எவ்வளவு படித்த அறிவாளியாயினும் அதன் நிலையை எங்கு எப்படி பார்க்கவாவது அறியவாவது முடியும்?''

''ஒரு விளக்கு அதைச் சுற்றியுள்ள ஒவ்வொன் றையும் விளங்கச் செய்கிறது (எல்லாவற்றையும் தெரியும்படி செய்கிறது). அவ்விளக்கையே விளங்க வைக்க இரண்டாவது விளக்கு வேண்டுவதில்லை: அது தானே பிரகாசிக்கிறது. சூரிய வெளிச்சத்தில் கூட (பகல் நேரத்திலும்) எல்லாவற்றையும் விளங்கச் செய்யும் விளக்கு தானே பிரகாசிக்கிறது. ஒரு விளக்கின் பிரகாசம் குறைந்து அல்லது மங்க லாக ஆய்விட்டால் அது இல்லை அல்லது காண வில்லை என்று ஒருவன் எப்படிக் கூறமுடியும்? சித் பிரகாசத்தினால் விளங்கும் அப்படிப்பட்ட விளக்குகள் இருக்கும்போது, அறியமுடியாததும் அறியப்படாததும் எதால் அறியப்படுமோ அது சித் என்று சொன்னால், உனக்கு என்ன சந்தேகம்? அல்லது ஆக்ஷேபணை இருக்க முடியும்? இந்தச் சிதாத்மாவின் பிரகாசமான விளக்கு, தன்னிச்சை யானதா இல்லையா என்பதை உள் செலுத்தப்பட்ட மனத்தினால் தியானிப்பதால் நீ தீர்மானிக்க முடியும். யாவற்றுக்கும் காரணமாயும், நான் காவது அவஸ்தையாயும், எல்லாவற்றிற்கும் அடிப் படையாயும் (அதை யாவும் ஆதாரமாகக் கொண் டுள்ளன), யாவற்றையும் பிரகாசப் படுத்துவதாயும் உள்ள இந்தச் சித் சக்தி (மனோவல்லமை) எங்கு எப்போது பிரகாசிக்காமல் இருக்கிறது? அது

பிரகாசிக்காவிட்டால், மற்றவை எப்படிப் பிரகாசிக்கவாவது பிரகாசப் படுத்தவாவது முடியும்! அது பிரகாசப்படுத்தா விட்டாலும், தான் பிரகாசிக்கிறது. அந்த ஒளி கண்ணுக்குத் தெரியும் போது, யாவற்றையும் விளங்கச் செய்யும் அந்தச் சித் சக்தி (தேவியாகக் கொள்ளப்பட்ட அல்லது கற்பனை செய்யப்பட்ட சிரேஷ்ட ஆத்மா, சிருஷ்டிக்கும் சக்தி) பிரகாசிக்க வில்லையென்று நாம் எப்படிக் கூறமுடியும்? அந்த வெளிச்சத்தினுல்தான் அந்தச் சித் பிரகாசிக்கிறது என்று நீ கூறுவாயாஞல், அது எப்படிப் பிரகாசிக்கிறது? நீ இதை உனது உள்ளே செலுத்தப்பட்ட மனதினுல் அறிந்து அநுபவிக்க வேண்டும். இவ்விஷயத்தில் கல்விமான்களுக்கும் அறிவாளிகளுக்கும் கூட உள் நோக்கும் கண் (அல்லது மனது) இல்லையாதலின் சம்சாரசாகரத்தில் உழல்கிருர்கள்.

''மனதை வெளி விஷயங்களின் பின் ஓடாத படி தடுத்து நிலையில் நிற்காத வரையில் உள் நோக்கும் கண்ணின் நிலையை ஒருபோதும் அடைய முடியாது. உள்நோக்கும் கண் அல்லது மனத்தின் அவஸ்தை அடையப்படாத வரையில், சுத்த சித்தை ஒருபோதும் அறிய முடியாது. உள்நோக்கு என்பது சங்கல்பமின்றி இருக்கும் நிலை (அல்லது சங்கல்பம் இல்லாதபோது, மனது உள்ளே நோக்கும்), மனது சங்கல்பங்கள் நிறைந்திருக்கும்போது, சாந்தி (உள் திரும்புதல்) எவ்வாறு சாத்தியமாகும்? ஆகவே உனது சங்கல்பங்கள் யாவற்றையும் நீக்கி உன் சொரூபத்தில் நிலை பெறுவாயாக. குறைந்தது ஒரு க்ஷணமாவது சங்கல்பமின்றி இருந்து, மனதை உள்ளே திருப்பி அப்போது உனது ஞாபகத்தைக் கொண்டு அப்போது (நீ சங்கல்பமின்றி இருந்த போது) நீ உன்ஞலேயோ அல்லது வேறு எதாலேயோ காணப்பட்டாயா என்று உனக்கே

பார்த்துக்கொள் அல்லது தீர்மானித்துக்கொள். அதன் பிறகு ''எவ்வாறு அறியப்படாதது இவ்வாறு அறியப்படுகிறது'' என்பதைப்பற்றி ஒவ்வொரு விஷயமும் உனக்குத் தெளிவாகும். அறியப்படாதது இவ்வாறு அறியப்படும்போது, அமரத்வம் அடையப்படுகிறது—என்றால் அழிவற்ற நிலை, அடையப்படுகிறது. நீ விரும்பினதை நான் கூறிவிட்டேன், உனக்கு நன்றி. நான் போகிறேன், நீ இதைச் சுருக்கமாகக் கேட்டதனால், நீ இதைச் சரியாக விளங்கிக் கொள்ளவில்லை. அறிஞர்களிலும் கல்விமான்களிலும் தலை சிறந்தவரான இம்மன்னர் உனக்கு மேலும் போதிப்பார். உனது சந்தேகங்களை அவரிடம் கேட்டால் அவர் அவற்றை நீக்குவார்'' என்று கூறிவிட்டு யாவராலும் கௌரவிக்கப்பட்டு காற்றினால் கொண்டு செல்லப் படும் மேகம் போல் அவர் மறைந்து விட்டார்.

---

## 4. உண்மை வைராக்கியம்

வாரணாசியில் ஒரு சந்நியாஸி இருந்தார். அவர் சிறந்த திதிக்ஷு. அவர் உஷ்ணத்தையும் குளிர்ச்சியையும் சகித்துக் கொள்வார். கோடையில் அவர் மணிக்கணக்காக வெய்யிலில் நிற்பார். குளிர் காலத்தில் அவர் கங்கையில் சில மணி நேரம் நிற்பது வழக்கம். அவர் புல் படுக்கையில் தூங்குவது வழக்கம். அவர் மரக் கட்டில்களை விலக்கி விட்டார்.

ஒரு சமயம், அவரது அன்பர்களில் ஒருவரான ஸ்ரீராம் என்பவர் அவரை முஸோரிக்கு அழைத்துச் சென்றார். அவர் அவருக்குத் தூங்குவதற்கு ஒரு கட்டிலை அளித்தார். சந்யாஸி கட்டிலில் தூங்க மறுத்து விட்டார். ஒரு புல் படுக்கையைத் தயாரித்துக் கொடுக்கும்படி கேட்டார். அன்று கன மழை பெய்திருந்தது. புல் கிடைப்பது மிகவும்

துர்லபமாக இருந்தது. எப்படியோ ஸ்ரீராம் வெகு கஷ்டப்பட்டு அந்த சுவாமிக்குப் புல் படுக்கை தயாரித்து அளித்தார்.

ஸ்ரீராம் ''சுவாமிகளே, இங்கு புல் கிடைப்பது வெகுகஷ்டமாயிருக்கிறது. இப்போது மழை கொட்டு கொட்டென்று கொட்டுகிறது. தயவு செய்து இன்று கட்டிலை உபயோகியுங்கள். இது உங்களை எவ்விதத்திலும் பந்தப்படுத்தாது. நீங்கள் முன்னேற்றமடைந்த சந்நியாஸி. சரீரம் புல் படுக்கையில் படுத்தாலும் அல்லது கட்டிலில் படுத்தாலும் உங்களுக்கென்ன?'' என்றார். சுவாமிகள் "கூடாது, கூடாது. எனக்கு வழக்கமான புல் படுக்கையே வேண்டும். நீர் அதை எப்படி யாவது கொண்டு வரவேண்டும்'' என்றார்.

வைராக்கியத்தில் பற்றுதல்வைப்பது பற்று தலைப்போலவே தீமையானது. வைராக்கியம் ஆத்மஞானத்தை அடைவதற்கு ஒரு மார்க்கம் மட்டுமே; அதுவே இலட்சியமல்ல. ஜீவன் முக்தன் அல்லது மெய்ப்பொருள் உணர்ந்த ஞானிக்கு ராகமோ அல்லது வைராக்கியமோ கிடையாது. அவனுக்கு ஒரு சிறிய உலர்ந்த ரொட்டித் துண்டை அளித்தாலும், அவன் திருப்தியடைவான். அவன் முணுமுணுக்கமாட்டான், அவனுக்குச் சிறந்த இனிப் புப் பண்டங்களையும், பால் பழத்தையும் அளித் தாலும், வேண்டாமென்று சொல்ல மாட்டான். ஆனால் அவன் நல்லுணவினால் மனமகிழ மாட் டான், அவன் எப்போதும் தன்னில்தானே ஆனந்த மடைகிறானே தவிர வெளி விஷயங்களில் அல்ல. ஒரு மனிதன் ஆத்மாநுபவத்தை அடைந்துள்ளானா இல்லையா என்பதைக் காணுவதற்கு இது சோதனை. ஒரு லௌகீக மனிதன் தான் மிக விரும்பும் சரியான உணவு கிடைக்காவிட்டால் மிகவும்

வருத்தமடைவான். அவன் சுவையான உணவு கிடைக்கப் பெற்றால் மகிழ்ச்சியுறுகிறான். ஆத்ம ஞானிக்கு மனச்சாந்தி இருக்கிறது. அவன் விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டவன்.

சுகதேவர் ஜனகராஜனால் சோதிக்கப்பட்டார். அவர் சில நாட்கள் உணவின்றி தலைவாசலில் காத்திருந்தார். அவர் முற்றிலும் சாந்தமானவர். பிறகு அவர் அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்லப் பட்டார். ராணிமார்கள் அவருக்குத் தொண்டு செய்து சிறந்த உணவையளித்தார்கள். அவர் மனச் சலனமின்றி இருந்தார். இது ஞானம்.

முஸோரியில் புல் படுக்கையே வேண்டுமென்ற சுவாமிகள் மனச் சாந்தியையும், ஆத்மஞானத் தையுமடைந்தவரல்ல என்று புலனாகிறது. அவர் பல ஆண்டுகள் ஆத்மீகப் பயிற்சி செய்தபிறகும் வைராக்கியத்தில் பற்றுக்கொண்டிருந்ததனால் எவ் விதப் பற்றுதல்களிலிருந்தும் முழுதும் அசட்டை யுடையவராயும், புல் படுக்கையோ அல்லது மெத்தையும் தலையணையையும் கொண்ட அழகிய படுக்கையோ எதிலும் ஒரே உணர்ச்சியுடன் தூங்கக் கூடியவராயும் உள்ள சகஜ அவஸ்தை அல்லது இயற்கை நிலையை அவர் அடையவில்லை.

விஷயங்களில் சமநிலையான மனதை யுடையவன் யோக வாசிஷ்டத்தில் மஹா தியாகி அல்லது மஹா போகி என்று சொல்லப் படுகிறான். வைராக்கியத்தைப் பழகுவது எளிது; ஆனால் மனத்தைச் சமநிலையில் வைத்திருப்பது மிகக்கடினம்.

பொது நன்மைக்காக உழைக்கும் சில சந்நியாஸிகள் "நாங்கள் புகை வண்டிகளில்

பிரயாணம் செய்யமாட்டோம், நடந்தே செல்வோம். நாங்கள் பால், பழம் முதலியவற்றை உண்ணேம். ஊற்றுப் பேனுவையும் கைக்கடிகாரத்தையும் பயன்படுத்தோம்'' என்று பிரதிக்ஞைகள் செய்து கொள்கிருர்கள். இவை விரும்பத்தக்க பிரதிக்ஞைகள் அ ல் ல. இது வைராக்கியத்தின் உண்மையான இ ய ல் பு அல்ல. அவர்களும் வைராக்கியத்தில் பற்றுக் கொண்டவர்களே. இது மற்ருெரு வகையான தீமை. அவர்கள் சேவை செய்ய விரும்புகிருர்கள். அவர்கள் மோட்டார் வண்டிகள் அல்லது புகை வண்டிகளில் சென்ருலும், தங்கள் தேகத்தை வலுவாகவும் ஆரோக்கியமாகவும் வைத்துக்கொண்டாலும் சிறிது நேரத்தில் அதிக சேவை செய்யலாம். அதிகமாக எழுத்து வேலை செய்பவர்கள் ஊற்றுப்பேனுவை உபயோகித்தால் அதிக வேலை செய்யக்கூடும். மூடத்தனம் பல்வகை உருவங்களைக் கொள்கிறது. இது ஒரு வகை. இது படித்தவர்களையும் பண்பாடுள்ள சந்நியாஸிகளையும் கூட விடுவதில்லை.

சில சந்நியாஸிகள் பிரதிஷ்டை அல்லது கீர்த்தியையும் கௌரவத்தையும் பெறுவதன் பொருட்டு வைராக்கியத்தை அப்பியஸிக்கிருர்கள். ஆனல் கடவுள்தான் எல்லோருடைய நோக்கங்களையும் அறிவார். ஏனெனில் அவர் அந்தர்யாமி அல்லது ஆந்த்ரீக அதிபதி. அவரை நீ ஏமாற்ற முடியாது.

மயக்குவதற்குக் காரணமில்லாத ஏகாந்தத்தில் ஒருவன் இருக்கும்போது வைராக்கியத்தின் பலம் எங்குளது? கோணிச்சாக்கை உடுத்திக்கொண்டும் கமண்டலம் ஒன்றை மட்டும் கையில் வைத்துக் கொண்டும் தான் விரக்தன் அல்லது யாவற்றையும் துறந்தவன் என்று வெளிப்படையாகக் காட்டிக் கொண்ட போதிலும் ஒருவன் எதையும் துறக்காத

போதும், துறப்பதற்கு ஏதுமில்லாத போதும் உலக விஷயங்களை அநுபவிக்காத போதும் உலக விஷயங்களைப்பற்றி மனதில் கவர்ச்சி இருந்து கொண்டே இருக்கும் போதும், வைராக்கியத்தின் பலம் எங்கே ?

ஜனகராஜன் ராஜபோகங்களுக் கிடையில் இருந்தவன். மிதிலை நகரம் தீப்பற்றி எரிகிறது என்று ஜனங்கள் கூறியபோதும், அவன் சிறிதும் கலங்கவில்லை. அதுதான் உண்மை வைராக்கியம். அவன்தான் சிறந்த உண்மையான விரக்தன் என்று சொல்லக்கூடியவன்.

வாலிப சாதகர்கள் மிக ஜாக்கிரதையாகவும் எச்சரிக்கையாயுமிருத்தல் வேண்டும். மஹா தியாகி அல்லது மஹாபோகியின் சுவாதீனத்தை மேற் கொள்ளுதல் கூடாது. எல்லா உயிர்களிடமும் சம நோக்குள்ள முன்னேற்றமடைந்த யோகியால்தான் இதை அப்பியஸிக்கக் கூடும். ஆரம்ப சாதகர்கள் உண்மை, அஹிம்சை, பிரம்மசர்யம், வைராக்கியம் ஆகியவற்றைப் பற்றிய தங்கள் பிரதிக்ஞைகளைப் பூரணமாகக் கடைப்பிடிக்க வேண்டும்.

நீங்கள் யாவரும் ராகத்தையும் வைராக்கியத் தையும் கடந்து, ஆத்மஞானத்தை அடைவீர் களாக. வைராக்கியத்தின் சொரூபத்தையும் உண்மை இயல்பையும் உணர்வீர்களாக.

---

